ANGAYAR MALAR
க்டோபர் '95 ரூ.10/-

# மங்கையர் மலர்



தீபாவளிச் சிறப்பிதழ்

'பொன்'னான தீபாவளி!

இணைப்புடன்

160 + 96 பக்கங்கள்

# சில பிரச்னைகள்; சில வார்த்தைகள்

# அம்மாக்காரிகள் பண்ணும் அட்டகாசம்...

ஒரு வாசகி ரொம்ப காரசாரமாகக் கடிதம் எழுதியிருந்தார். "எப்பவும் பெண்களின் புராணம்தானா? இவர்கள் செய்யும் அக்கிரமங்கள் உங்களுக்குக் கண்ணில் படவில்லையா? பெண்கள் தப்பே செய்வதில்லையா? குறிப்பாக...."

என்று ஆரம்பித்துச் சில விஷயங்களை எழுதியிருந்தார். அந்த விஷயங்களுக்குப் போவதற்கு முன்... உங்களுக்கே தெரியும், எப்போதுமே நாமெல்லாம் அப்படியா பேசிக் கொண்டு இருக்கிறோம்? பெண்கள் எல்லோரும் தேவதைகள், அம்மன் சொரூபம், தப்பே செய்ய மாட்டார்கள் என்றா? ஆண் இல்லை, பெண் இல்லை ரெண்டு பேருமே தனிப்பட்ட முறையில் எடுத்துக் கொள்ளும் போது தவறு செய்பவர்கள்தான். தவறே செய்யாதவன் எப்படி மனிதனாக இருக்க முடியும்? பரமாத்மாவாக அல்லவா இருக்க வேண்டும். பரமாத்மா பற்றிதான் நமக்குக் கதைகளாக இல்லையே தவிர மற்றபடி தேவர்கள், தெய்வங்கள் அனைவரைப் பற்றியும் அவர்களும் தவறுவது பற்றியும் படித்துத்தானே இருக்கிறோம்?

எனவே பெண்கள் தப்பே செய்யாதவர்கள் என நாம் சொல்லுவது இல்லை. தனிப்பட்ட பெண்மணி அல்லது தனிப்பட்ட ஆண் என எடுத்துக் கொண்டால் அவரவர் பிறப்பு, வளர்ப்பு, குணாதிசயம், சூழ்நிலை இவற்றிற்கு ஏற்றாற் போல நல்லவர்களாக, கெட்டவர்களாக, குறுகிய மனப்பான்மை அல்லது பரந்த மனப்பான்மை உள்ளவர்களாக இப்படி எவ்வளவோ விதமாக இருக்கிறார்கள். அன்பு, ஆறுதல், இரக்கம், பொறாமை, சிடுசிடுப்பு இப்படி நிறைய....

ஆனால் சமுதாயம் எனப் பார்க்கும் போது பெண்களுக்கு அதிக பாதிப்பு இருக்கிறது. இருந்தது என்பதால்தான் பெண்களுக்கு ஆதரவாகக் குரல்கள், கல்வி, சிந்தனைகள், பத்திரிகைகள் என வர ஆரம்பித்தன. இள வயது திருமணம், விதவைக் கொடுமைகள், கற்பழிப்பு இப்படி பல கொடுமைகள் ஆண்களுக்கு இல்லையே!

எனவே தனிப்பட்ட சிலரின் குணங்களுக்கும், சமுதாயம் நம்மை அழுத்தி வைத்ததற்கும் வித்தியாசம் உண்டு. பெண்களாகிய நாமே இதைச் சரியாகப் புரிந்து கொண்டு நம் தனிப்பட்ட குறைபாடுகளைத் திருத்திக் கொள்ளவும், பெண்களுக்குச் சமூகம் துன்பம் செய்யும் போது அதை எதிர்க்கவும் தெரிந்து கொள்ள வேண்டும்!



சரி, இப்போ விஷயத்திற்கு வருவோம்.

"கல்யாணம் பண்ணிக் கொடுத்துட்டு பொண்ணின் அம்மாக்காரிகள் பண்ணும் அட்டகாசம் இருக்கே, அது கொஞ்சம் நஞ்சமில்லை...." என ஆரம்பித்து அவர் எழுதிக் கொண்டு போனவிதம் இருக்கே, அப்பா, நிச்சயம் இந்த பிரச்னையில் அவர் பாதிக்கப்பட்டவராக இருக்க வேண்டும் போலிருக்கிறது. பெண்ணின் தாயாரை எல்லாம் எண்ணெயில் போட்டு வதக்கி ரோஸ்ட் செய்துவிட்டார்.

ஆனாலும் அவர் சொல்வதும் இன்று

**மஞ்சுளா ரமேஷ்**



திடீரென வந்த விருந்தினர் வருகையை ஒட்டி பூரி செய்து, தொட்டுக் கொள்ள கறி செய்யும் போது போட வேண்டிய மிளகாய்ப் பொடி மிஸ்ஸிங். மாவடு ஊறு காய் பாட்டிலில் அதன் கலவை மீதம் இருந்தது. அதைப் போட்டுக் கிளறினேன். அருமையாக இருந்தது.

— ஆர். சித்ரா

நடக்க ஆரம்பித்து இருக்கிறது என்பதைக் கண் கூடாக பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். பெண்ணைப் பெற்றவர்களைப் புழுவாகப் பார்ப்பவர்களும் இருக்கிறார்கள். பெண்ணின் பெற்றோர்கள் ஆயுதத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டும் திரிகிறார்கள். இது இப் போது இவர்களுக்குக் காலம், பூனைக்கும் ஒரு காலம் வரும் என்பார்களே அதுபோல.

அப்போதெல்லாம் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்து விட்டு, "அடி பெண்ணே, இனிமே கணவன் வீடுதான் உன் வீடு. உன் கணவர், மாமியார் மற்றும் மற்றவர்கள் எப்படி இருந்தாலும் பொறுமையோடு இருக்க வேண் டும். எதிர்த்துப் பேசக் கூடாது...." இப்படி நிறைய அறிவுரை சொல்லி அனுப்புவார்கள். வரலக்ஷ்மி நோன்புக்குக் கூட இப்படியாக ஒரு பாட்டை வயதான பெண்மணிகள் பாடுவார் கள். இப்போதைய தலைமுறைக்கு அது தெரி யவும் தெரியாது. அது போகட்டும்.

ஆனால் இப்போதைய தாய்மார்கள் அப் படி இல்லை. பெண்களை எச்சரித்து அனுப்பு கிறார்கள். "ரொம்ப வேலை செய்யாதே. முதலி லேயே நிறைய இடம் கொடுத்துவிட்டா யானால் உன் தலையில் மிளகாய் அரைத்து விடுவார்கள்" இப்படி.

இதுவும் ஒரு சாரார்தான் எல்லோருமே இப் படிச் செய்கிறார்களா, இல்லைதான். ஆனால் இது மாதிரி போகும் பெண்கள் புகுந்த வீட்டில் பிள்ளையைப் பெற்றோரின் நிலைமை மிகுந்த அவலநிலைதான். தேவையே இல்லாமல் பெண்ணின் தாயார் ஒவ்வொரு விஷயத்திலும் தலையிடுவதும் குடும்பத்தினுள் பல்வேறு குழப் பங்கள் ஏற்படுவதும்....

இன்றைய வேகமான, பெண்களும் வெளியே போகும் காலகட்டத்திற்கு வந்து விட்ட சமுதாயத்தில் எழுந்துள்ள பல சிக்கல் களில் இதுவும் ஒன்று. ஒரு விஷயம் எல் லோருமே நினைத்துப் பார்க்க வேண்டும். திரு மணத்தின் நோக்கம் என்ன? ஒரு ஆணும், பெண்ணும் இணைந்து வாழும் மகிழ்ச்சியான வாழ்க்கை. இதற்கு மற்றவர்கள் தடங்கல் இல் லாமல் இருக்க வேண்டும். குடும்ப உறவுகளில் குழப்பங்களை ஏற்படுத்துபவர்கள் யாராக இருந்தாலும் தவிர்க்கப்பட வேண்டியவர்களே.

நாம் எப்படி சந்தோஷமாக வாழ்ந்தோமோ அதே போல நம் பெண்ணும் சந்தோஷமாக வாழ வேண்டும் என்பதுதான், ஒரு தாயாரின் நோக்கமாக இருக்க வேண்டும். இதிலே சூது, வாது, சாமர்த்தியம், கபடிற்கு இடமே இல்லை. அழகிய ஒரு குடும்பத்தின் சந்தோஷம் பார்க்கக் கண்கொள்ள காட்சியாக இருக்கும். கண்ணாடி போல தெளிவான இந்த விஷயத்தை ஏன் நேராக யாருமே பார்க்க மாட்டேன் என்கிறார் கள். நம் சாமர்த்தியங்களை தொழிலில், வெளியில், உத்தியோகத்தில் காட்டலாம். வீட்டில், குழந்தைகளிடத்தில் காட்டுவது அல்ல. குடும்பம், இல்லறம் என்பது அன்பு செய்யப்பட மட்டுமே. ஒருவருக் கொருவர் சிநேகிதமாக வாழ மட்டுமே.

அப்படிப்பட்ட தாயார்களை உடைய பெண்களே கூட இதைப் பற்றி யோசிக்க வேண் டும். அந்தக் காலம் போல அஞ்சு வயதில் தாலி பெற்றுக் கொள்ளவில்லை. இப்போது எல்லாம் படித்த, நன்கு சிந்திக்கத் தெரிந்த, நிறைய வெளி உலக விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்புடைய பெண்களாகத்தான் இருக்கிறார் கள். தாயாரோ, மாமியாரோ யாரேயாயினும், எந்தெந்த உறவுகள் எந்த அளவு பேணப்பட வேண்டும், எது சரி என்பதையெல்லாம் மண மான பெண்கள்தான் தீர்மானிக்க வேண்டும். அதற்காக யாரையும் புண்படுத்த வேண்டும், யாரோடும் சண்டைக்கு நிற்க வேண்டும், யாரையும் புறக்கணிக்க வேண்டும் என்ப தில்லை. அவரவருடைய 'லிமிட்' என்ன என் பதை இளம் மனைவி தீர்மானிக்க வேண்டும்.

மொத்தத்தில் நல்ல குடும்பம், அன்பான சுற்றம், இனிய இல்லறம் இதுதான் தேவை. இதைக் காப்பாற்றிக் கொள்ள இன்று எவ் வளவோ பத்திரிகைச் செய்திகள், புத்தகங்கள், சினிமாக்கள், அனுபவப்பட்ட தோழிகள் வழி காட்ட இருக்கிறார்கள்.

யாரேயாயினும் ரொம்ப 'எக்ஸ்ட்ரீம் லெவ லிற்கு'ப் போக விடாதீர்கள். வாழும் இந்தச் சிறிய வாழ்க்கையில் யாரையும் வெறுக்காதீர் கள். யாரும் நம்மை வெறுக்கும்படி நடந்து கொள்ளாதீர்கள்.

# மாறாத மணம் தரும் செண்பகம்!

"சிலபேருடைய வாழ்க்கையில் எதிர்பாராத 'திடீர்' திருப்பங்கள் ஏற்பட்டு விடுகின்றன. அதுவே அவர்களுடைய வாழ்க்கை வெற்றிகரமாக அமையவும் உதவுகிறது. அப்படி ஆனதுதான் நான் இந்த 'செண்பகா சில்க்ஸ்' ஆரம்பித்ததும்..." என்கிறார் மிகப் பிரபல வழக்கறிஞர் ஒருவரின் மனைவியான திருமதி ஜம்பகம்.

மயிலாப்பூர் நாகேஸ்வரராவ் பார்க்கிற்குப் பின்புறம் 30/1B, லஸ் அவின்யூவில் 'செண்பகம் சில்க்ஸ்' என ஆரம்பித்திருக்கும் இவர்தான் என்ன உற்சாகமான பெண்மணியாக இருக்கிறார்! முகம் நிறைந்த சிரிப்பு, கலகலவென பேச்சு, எந்தவித ரிசர்வேஷனும் இல்லாத இயல்பான அன்பு என அந்தக் கடையையே ஒளிவெள்ள மாக்கிக் கொண்டு இருக்கிறார்.

"சின்ன வயதில் இருந்தே உடைப் பைத்தியம் என்றால் அப்படி ஒரு உடைப் பைத்தியம் நான். புதுத் துணியை தினமும் கட்ட விரும்புவேன். எனக்கு அந்தப் புதுவாசனை ரொம்பப் பிடிக்கும். புடவைக்கு மாறின பிறகு பீரோ நிறைய புடவை இருந்து கொண்டே இருக்கும். என் ஆர்வத்தைப் பார்த்துவிட்டு எல்லோரும் 'நீ புடவைக் கடைதான் வைக்கப் போறே போ' என்பார்கள். அதே மாதிரி ஆகிப் போனதுதான் என்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட எதிர்பாராத திருப்பம்...." என்கிறார்.

சிறு வயதிலிருந்தே துணிமோகம் என்பதால் புடவைகளை அழ காக 'செலக்ட்' செய்வாராம் இவர். அதனால் இவருடைய உறவுப் பெண்மணிகள் எல்லாம் கூட இவரைத் தங்களுக்குப் புடவை 'செலக்ட்' செய்ய அழைத்துப் போவார்கள். இந்த வட்டம் உறவினர்கள், நண்பர்கள் எனப் பெருக ஆரம்பித்தது. நிறைய பேருக்கு இப்படித் தேர்ந்தெடுத்து அனுப்பி அவர்களுடைய பாராட்டுதல்களைப் பெற ஆரம்பித்து இருக்கிறார். இதனால் புடவைகளின் நேர்த்தி, அதன் தரம், வண்ணங்களின் தன்மை, டிசைன்கள், யாருக்கு எந்தப் புடவை பொருத்தமாக இருக்கும் என எல்லாம் அத்துப்படி.

இடையில் குடும்பம், ஓய்வு ஒழிச்சல் இல்லாத







— ஆர். பத்மாவதி

வழக்கறிஞருக்குத் துணை செய்யும் வேலைகள், ஒரே மகனின் படிப்பு என அனைத்தையும் சலிப்பில்லாமல் செய்து கொண்டு வந்திருக்கிறார்.

அந்த நேரத்தில்தான் திருபுவனம் பட்டுக் கூட்டுறவு சொசைட்டியின் மேலாளர் நடராஜன் இவருடைய ஆர்வத்தைப் பார்த்து, "ஏன் நீங்கள் ஒரு துணிக்கடை வைக்கக் கூடாது?" எனக் கேட்டு இருக்கிறார்.

"என்னது, புடவைக் கடையா நானா?" எனச் சிரிப்புடன் ஒதுங்கிக் கொண்டு விட்டார் ஆரம்பத்தில்.

ஆனால் இன்றைய பெண்களின் சிந்தனை இவரையும் பீடித்து இருக்கிறது. ஏன் நாமும் எதையாவது உருப்படியாகச் செய்யலாமே, நமக்கென்று ஒரு தொழில், அதிலே அடைகின்ற திருப்தி என சிந்தனை நீண்டு இருக்கிறது.

"ஆரம்பத்தில் ரொம்பத் தயங்கினேனே தவிர அப்புறம் செண்பகம் சில்க்ஸ் ஆரம்பித்த பிறகுதான் எனக்கு இதன் மகத்துவம் புரிகிறது. இது ஒரு வியாபாரம், அதில் வரும் லாப நஷ்டம் என்பது இல்லை. எத்தனை பெண் மணிகளைப் பார்க்க முடிகிறது? அவர்களுடனான நட்பு, அன்பு அதுவும் வீட்டோடு 'செலக்டட்' ஆக வைத்திருப்பதால் அருமை யான ஒரு பணியைச் செய்கிறோம் என்று ரொம்பப் பெருமையாக இருக்கிறது...." என்கிறார்.

இவருக்கு இதன் லாப நஷ்டம் அவசியம் என்பது இல்லை. பேசாமல் உட்கார்ந்து கொண்டு அல்லது வம்பு பேசிக் கொண்டு மற்றவரைக் குறை சொல்லிக் கொண்டு திரிந்திருக்கலாம். ஆனால் நல்ல ஒரு பணியைச் செய்ய வேண்டும், தன்னிடம் இருக்கும் திறமையையே முதலீடாக வைத்து நாலு பேருக்கு உதவும் வகையில் அந்தப் பணி இருக்க வேண்டும் என நினைத்திருக்கிறாரே அதுவே ஒரு பெரிய விஷயம்தானே!

"ஒரு ஷாப் ஆரம்பிக்க வேண்டும் என்று முடிவெடுத்தவுடனேயே ஏதோ ஒரு பீரோவில் புடவைகளை வைத்துக் கொண்டு வருபவர்களுக்கு எடுத்து எடுத்துக் காண்பிப்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. செய்தால் எதையும் பர்ஃபெக்டாக செய்ய வேண்டும் என்பதில் தீவிர நம்பிக்கை இருப்பவன் நான். நல்லி குப்புசாமி செட்டியார் இந்த அமைப்பில் கடையை அமைக்க மிகவும் உதவி செய்தார். லைட்டிங்ஸ், துணிகளை டிஸ்ப்ளே செய்வது, வரும் கஸ்டமர்கள் மேலே புடவையை வைத்துப் பார்க்க எதிரே பெரிய நிலைக்கண்ணாடி எல்லாமே அவருடைய ஐடியாதான். அவ்வளவு பெரியவர் என்னுடைய கடையும் பெருக வேண்டும் என அக்கறையாகச் செய்தது பார்க்க ஆச்சர்ய மாக இருந்தது. நடராஜனும், செட்டியாரும் தான் எனக்கு இரண்டு வழிகாட்டிகள். செட்டியார் கூட உங்க கடை அமைந்த இடம் கூட நன்றாக இருக்கும்மா. ரங்காச் சாரி கடைக்குப் பக்க சந்தில் வந்தால் நேரா உங்கள் கடைக்கு வந்துடலாம். காட்டனும், சில்க்கும் நல்ல காம்பினேஷன் எனச் சிரித்தார்..."

எத்தனையோ சிறப்புக்கள் இருக்கத்தான் இருக்கும். ஆனால் எளியவர்களும் புடவை அதுவும் பட்டுப் புடவை வாங்க இவர் ஏதா வது செய்யலாமே என்றோம்.

"இதே கேள்வி என் மனதிலும் எழுந்தது. அதனால்தான் சீட்டுத் திட்டத்தை ஆரம்பிக் கலாம் என்று இருக்கிறேன். மாதம் இருநூறு ரூபாய் என பத்து மாதம் கட்ட வேண்டும். குலுக்கல் முறையில் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொருவருக்கும் 2000 ரூபாய் மதிப்புள்



— ஆர். பத்மாவதி

இப்பொழுது உலகத்தரம் வாய்ந்த
ஒவ்வொரு பட்டர்ஃப்ளை
ஸ்டாண்டர்டு
பிரஷர் குக்கருடன்

# அதற்கு இணையான பட்டர்ஃப்ளை **பிரஷர் பான்*** **இலவசம்!**




ஒன்றின் விலையில் இரண்டு பட்டர்ஃப்ளை சாதனங்களைப் பெற இதோ ஒரு வாய்ப்பு.

பட்டர்ஃப்ளை பிரஷர் குக்கர் கனமான தகடு, வலுவான கட்டமைப்பு, எளிதாய்ப் பயன்படுத்த இணையற்ற கைப்பிடி என இதன் ஒவ்வொரு பாகமும் நீண்ட ஆராய்ச்சியின் வடிவமைப்பு.

இந்த வாய்ப்பு பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் காப்பர் பாட்டம் மற்றும் ஸ்டாண்டர்டு பிரஷர் குக்கர்கள் ஆகிய இரண்டுக்கும் (7.5, 10 மற்றும் 12 லிட்டர்களுக்கு மட்டும்).

---

இவ்வாய்ப்பு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே.

---

* மூடியில்லாமல்




**பட்டர்ஃப்ளை**

**ஒன்றின் விலையில் இரண்டு**

இவ்வாய்ப்பு தமிழ்நாடு, ஆந்திர பிரதேசம் மற்றும் கர்நாடக மாநிலங்களுக்கு மட்டுமே.

ASP/M/GA/2092/95

புடவை! குலுக்கலில் விழும் நபர் அப்புறம் பணம் கட்ட வேண்டாம். இதனால் என்னால் முடிந்த அளவு மற்றவருக்குச் செய்கிறோம் என்ற திருப்தி கிடைக்கும்.

அதே போல தவணை முறையிலும் அலுவலகங்களில் இருப்பவர்களுக்குக் கொடுக்கலாம். அதைப் பற்றியும் யோசித்துக் கொண்டு இருக் கிறேன்.

பெண்கள் இப்போதெல்லாம் படித்து முன் னேறி விட்டார்கள். நல்ல தன்னம்பிக்கை வந்திருக்கிறது. நேர்த்தியாக உடை உடுத்தி 'பளிச்' சென்று இருப்பது இன்னும் கூடுதல் தன்னம்பிக்கையை வளர்க்கும். அந்த வகையில் எனக்குத் தெரிந்த இந்த வகையில் மற்றவர்களுக்கு உதவவே நான் விரும்புகிறேன்...'' என்கிறார் ஜம்பகம்.

ஆமாம், அதென்ன, 'செண்பகம் சில்க்ஸ்'?

''என் பேர் ஜம்பகம். கொஞ்சம் மாற்றி செண்பகம் சில்க்ஸ் என வைத்தேன். செண் பகம் எப்போதும் 'மனதுக்கு மகிழ்ச்சி தரும், மாறாத மணம் தரும் மலர்'. அதே போல என் புடவைகளும் இருக்க வேண்டும் என்பதால் தான் அந்தப் பெயரை வைத்தேன்!''

சரி. இவருடைய உறவினர்கள், ''என்னம்மா புடவைக்கடை வைத்திருக்கிறாய்'' எனக் கேலி செய்யவில்லையா?

''இல்லை. இப்போதெல்லாம் பெண்கள் சுய தொழில் செய்வதை சமூகம் ஏற்றுக் கொண்டு விட்டது. அதுவும் என் உறவினர்களுக்கு, நண்பர்களுக்கு ரொம்ப சௌகர்யம். ஏனென் றால் நான் எப்படித் தேர்ந்தெடுப்பேன் என்பது அவர்களுக்குத் தெரியும். என் கடையில் புடவை எடுக்க வந்த பெண்மணியின் கணவர் சொன்னார்,

''அம்மா சகசகன்னு ஆயிரக்கணக்கிலே புடவைகளை அடுக்காம தேர்ந்தெடுத்து வச் சிருக்கீங்க. அதுல செலக்ட் பண்றது சுலபமா, மன நிறைவா இருக்கு'' என்று. ''ஒரு வேளை மனைவியோடு கடைகளுக்குப் போய் மணிக் கணக்கில் நின்று சலித்துப் போன அனு பவமோ என்னமோ'' என்று நாம் சொன்ன போது ''கலகல''வென சிரித்தார் ஜம்பகம்.

எப்படியானாலும் நாம் விரும்புவது போல இன்றைய தன்னம்பிக்கை நிறைந்த வடிவமாக இருக்கும் ஜம்பகத்தை வாழ்த்தி விடை பெற்றோம்.

— **பவித்ரா**

படங்கள் : **சுரேஷ்**

---

# மங்கையர் மலர்

**அடுத்த இதழ்...** **கணவர்** சிறப்பிதழ்

◆ **உங்கள் கணவருக்கு நீங்கள் உதவும் வகையில் சிறப்புக் கட்டுரைகள்! அது தவிரவும்....**





உணரும்படியான அத்தனை மென்மை
ஒரு துளி ஃபெம் ஸாஃப்ட் ஜென்டில் சோப்பில் உள்ள உங்கள் கைகள் மற்றும் முகத்தை மென்மையாகக் கழுவத் தேவையான அனைத்து விசேஷ ஆக்கப் பொருட்கள். அப்புறம், ஆம், சாதாரண சோப்புகள் போல் நீங்கள் உலர்ந்த உணர்வைப் பெறுவதில்லை. மூன்று தனிச்சிறப்பான நறுமணங்களிலிருந்து தேர்ந்தெடுங்கள் மற்றும் இதுவரை அனுபவித்திராத புத்துணர்வைப் பெறுங்கள்.
உடனே உபயோகிக்கத் தயார்.
fem
சிக்கனமான ஃபெம் பேக்குகள்: 250 மிலி, 1 லிட். மற்றும் 5 லிட்.
SOFT GENTLE SOAP
மென்மையான உணர்வுதரும் சிறப்பா ஆதாரம்.

# நினைத்ததைச் சாதிக்க ஆரோக்கியம் வேண்டும்!

இந்திய மருத்துவம் இன்றைக்கு மக்களிடையே வெகுவாக பரவ ஆரம்பித்து விட்டது. பக்கவிளைவோ, பின் விளைவோ இல்லாத சித்தா, ஹோமியோபதி, ஆயுர்வேத மருந்துகளை பெரிய பெரிய தலைவர்கள் கூட பயன்படுத்துகிறார்கள் என்று கேள்விபடும் போது மகிழ்ச்சியாக இருக்கிறது. இந்திய ஜனாதிபதியின் சித்த மருத்துவ ஆலோசகராக நம் தமிழர் இருக்கிறார் என்றால் அது இரட்டிப்பு மகிழ்ச்சிதானே!

திருச்சியிலுள்ள சித்த மருத்துவர் டாக்டர் கண்ணன்தான் ஜனாதிபதியின் கௌரவ சித்த மருத்துவ ஆலோசகராக இருக்கிறார். அது மட்டுமல்ல அவர் உறுப்பினராக இருக்கும் மருத்துவக் குழுக்கள், தலைமை தாங்கும் மருத்துவக் கூட்டங்கள், பாராட்டுக்கள் என விவரித்தால் ஒரு புத்தகமாகவே விரியும். விரியும். என்ன, ஒரு புத்தகமாகவே போட்டிருக்கிறார் இவர்.

சித்த மருத்துவத்தில் மிக ஆழ்ந்த அனுபவம் கொண்ட டாக்டர் கண்ணன் பழகும்போதே எளியவராக, நகைச்சுவையாளராக, இன்றைய கால ஓட்டத்திற்கு ஒட்டிய மருத்துவ யோசனை சொல்பவராக இருப்பது அவருடைய அடுத்த பக்கம் என்று கூடச் சொல்லலாம்.

டாக்டர் கண்ணனிடம் பேச மருத்துவச் செய்திகள் அருவிபோல வந்து கொட்டுகிறது. இதுவரை ஆயிரக்கணக்கில் நோயாளிகளைப் பரிசோதித்து மருந்து கொடுத்து குணப்படுத்தியவராயிற்றே. 90, ராமராயர் தெருவில் இருக்கும் இவருடைய வீடு நிறைய கூட்டம். அந்த அளவிற்கு மூலிகைகள், செடிகளும் கூட. ரொம்ப சுவாரஸ்யமாக பேசுகிறார் மனிதர்...

"இன்னிக்கு பெண்களுக்கும், ஆண்களுக்கும் ஏதாவது ஒரு வியாதி உடம்பில் இருந்துகிட்டேதான் இருக்கு. வியாதி இல்லாத மனிதனே இல்லை என்று சொல்லிவிடலாம். ஆனால் வியாதி அதுவா வரலை. நாமளே வரவழைச்சுக்கிட்டு அப்புறம் நாமே ஐயோ உடம்பு உடம்புன்னு அலர்றோம்..." என்கிறார்.

**"எப்படிச் சொல்றீங்க...?"**

"உதாரணத்துக்குப் பெண்களையே எடுத்துக்குங்க. முன்பு மாதிரி ஃபிஸிகல் வொர்க் ரொம்பக் குறைச்சல், காரணம் இந்தக்காலச் சூழ்நிலை. முன்பெல்லாம் காலையில் இருந்து மாலை வரை பெண்கள் நெல் குத்தறது, வீடு பெருக்கறது, அரைக்கறது என இருந்தார்கள். இன்றைக்கு நவீன இயந்திரங்கள் இவற்றைச் செய்கிறது. ஆனா உடம்பு ஒரே உடம்புதானே? வேலை செய்யாம ஒரு மிஷினை நிறுத்தி வையுங்க. துருப்பிடிக்கப் போகாதா? அதே போலத்தான் மனித உடம்பும். மூளையால வேலை செய்ய ஆரம்பிச்சு உடம்பு





வேலையை குறைச்சுட்டோம். எத்தனையோ நவீன தொழில் நுட்பங்களைத் தெரிந்துகொண்டு இருக்கும் நாம் நம் உடம்பைப் பற்றிய இந்த அடிப்படை விஷயத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும் இல்லையா? தெரியுது. ஆனால் அலட்சியப் படுத்துகிறோம். அவ்வளவுதான்..." என்கிறார்.

**"சரி டாக்டர் நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் பாருங்கள் என்ன டயட்டில் இருந்தாலும் முப்பது வயதுக்கு மேல் பெண்களுக்கு உடம்பு பெருக்க ஆரம்பித்து விடுகிறது..."**

" 'டயட்டி'ல் இருக்கேன், சாப்பாட்டைக் குறைத்துவிட்டேன் என்று சொல்வதெல்லாம் சரியில்லை. அது தேவையுமில்லை. நன்றாக பசியில்லாமல் வயிறு நிறைய சாப்பிடலாம். ஆனால் என்ன சாப்பிடுகிறோம் என்பதைப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

முப்பது வயதிற்கு மேல் பெண்கள் நிறைய காய்கறிகள் சாப்பிடலாம். அப்படியென்றால் எண்ணெயில் போட்டு வதக்கிய பொரியல் அல்ல. வேகவைத்த காய்கறிகள், பாசிப் பருப்பு சேர்ந்த கூட்டு நல்லது. காரட், வெள்ளரிக்காய், பச்சை வெங்காயம் இவற்றையெல்லாம் சாப்பிடலாம். பெண்கள் அழகுக்காக லோஷன், கிரீம் என ஓடுகிறார்களே அதெல்லாம் தேவையேயில்லை. காய்கறிகளே ட இன் ஒன்னாக வேலை செய்யும்.

இவை உடம்பைப் பருக்க வைப்பதில்லை. அழகிய தோற்றத் தைக் கொடுக்கும். அதே சமயம் சருமம், கண்கள் எல்லாம் சிவந்து ஆரோக்கியமான தோற்றத்தைக் கொடுக்கும். உடம்பிற்கு நல்ல வலுவைத் தரும். ஆரோக்கியமும் வனப்பும் இருந்தாலே நாம் எந்தக் காரியத்தையும் வெற்றிகரமாகச் செய்யலாமே! அதற்கான திடமும் தெம்பும் தானாக வந்துவிடும் இல்லையா..." என்கிறார் டாக்டர் கண்ணன்.

**"சரி அதற்காக காய்கறிகளையேவா சாப்பிட்டுக் கொண்டு இருப்பது?"**

"நாம் தினமும் குளிப்பது, சாப்பிடுவது என்பதையெல்லாம் வாழ்க்கையின் கட்டாய அங்கமாக வைத்திருக்கிறோம் இல்லையா? அதே போல இந்தக் காய்கறிகளை அதிக அளவில் சாப்பாட்டில் சேர்த்துக் கொள்வதையும் கட்டாயமாக்கிக் கொள்ளவேண்டும். ஓரளவு நாம் விரும்பும் மற்ற உணவுகளையும் சாப்பிடலாம்.

உண்ணும் உணவை மட்டுமல்ல அதைக் குறிப்பிட்ட நேரத்தில் உண்ண வேண்டும் என்பதைக் கோட்பாடாக வைத்துக் கொள்ள வேண்டும். நம் உடம்பிற்குள்ளேயே ஒரு கடிகாரம் இருக்கிறது. நம் உடம்பை நாம் எப்படிப் பழக்குகிறோமோ அப்படியே அது வேலை செய்யும். இங்கே இரவு ஒன்பது மணிக்கு நமக்குத் தூக்கம் வருகிறது. அதே சமயம் பல நாட்டவருக்குப் பலவிதமாக நேரம் இருக்கும். உலகம் முழுவதும் ஒரே நேரத்தில் அனைவரும் தூங்குவதில்லை. அவர்கள் நாட்டு இரவு நேரத்தில்தானே அவர்களுக்குத் தூக்கம் வருகிறது. எனவே நம் உடம்பு பழகியது போல வேலை செய்கிறது. பசிக்கான



# இப்போது இந்தப் பரிசை லண்டனிலிருந்து நீங்கள் வாங்கி வரத் தேவையில்லை







இம்பீரியல் லெதர்-இறுதிவரை நீடித்திருக்கும் சின்னஞ்சிறு பாட்ஜுடன் கூடிய பிரபலமான சோப். லண்டனிலிருந்து ஸிட்னி வரை உலகெங்கும் உள்ள குடும்பத்தினர் அனைவரது விருப்பமான சோப்.

- அதே இம்பீரியல் லெதர் இப்போது இங்கேயே கிடைக்கிறது.

ஆகவே இனி நீங்கள், இயற்கையான ஆயில்கள், மென்மையான ஆனால் தனித்தன்மையுள்ள நறுமணம் இவற்றின் சொகுசான கலவையில் மூழ்கி குளிக்க விரும்பினால் அதற்காக வெளிநாட்டிற்கு ஓட வேண்டாம். பக்கத்திலுள்ள கடைக்கு ஓடினாலே போதும்.

**இம்பீரியல் லெதர். ஒரு விசேஷ அனுபவத்தைக் கண்டுணர்வீர்.**

Enterprise/IML/4/Tm

சுரப்பிகள் நாம் எத்தனை மணிக்குச் சாப்பிடுகிறோமோ அத்தனை மணிக்குச் சுரக்கும். சாப்பிட்டால் ஆரோக்கியமாக ஜீரணமாகும். ஒவ்வொரு நாள் ஒவ்வொரு நேரம் சாப்பிட்டால்...? இரவு இரண்டு மணிக்கெல்லாம் சாப்பிடுகிறார்கள். இதெல்லாம்தான் வியாதிகள் வரக் காரணம்.

மற்றொன்று மன அமைதியே கிடையாது. எப்போதும் டென்ஷன்தான். எல்.கே.ஜி பையன் 'A' சரியாக எழுதமாட்டேங்கறான் என்பது கூட டென்ஷனுக்குக் காரணமாகிறது. இரத்த அழுத்தம், அல்சர் என நாமே வியாதிகளை வரவழைக்கிறோம். தியானம் இதற்கு மிகச் சிறந்த மருந்து. தினமும் காலையில் ஐந்து நிமிடம் தியானம் செய்யுங்கள். மனதை அமைதியாக வைத்துக் கொள்ளுங்கள்..."

என அன்பாக அறிவுரை கூறுகிறார் இவர். சித்த மருத்துவத் துறையில் பாரம்பரியம் மிக்க பரம்பரையில் வந்துள்ள இவர் நிறைய நோயாளிகளை, பல்வேறு வகைப்பட்ட வியாதிகளைத் தீர்த்திருக்கிறார்.

தம்பதிகளுக்குக் குழந்தைகள் இல்லாமல் போவது, மிகுந்த வேதனை அளிக்கும் சொரியாஸிஸ், அல்சர், கீல்வாதம், போன்ற பல துன்பமயமான நோய்களில் இருந்து நோயாளிகளை மீட்டு இருக்கிறார். நாங்கள் அவரிடம் பேசிக் கொண்டிருந்தபோதுதான் வந்த தபாலில் இருந்து ஒரு கடிதத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தார் அவர். குடியாத்தத்திலிருந்து ஒரு வசதியில்லாத மனிதர் மனமுருகி எழுதியிருந்த கடிதம் அது. பத்தாண்டுகளுக்கும் மேலாகக் குழந்தை இல்லாமல், உறவினர்களின் பேச்சுக்களால் மனம் நொந்திருந்த தம்பதிகளுக்கு இவருடைய மருத்துவம் மூலம் குழந்தைப் பேறைக் கிட்டச் செய்திருப்பது பற்றிய உருக்கமான கடிதம் அது.

"சித்த மருத்துவத்தில் இல்லாததே இல்லையென்று கூடச் சொல்லி விடலாம் நம் முன்னோர்கள் தங்களின் தவ வாழ்க்கையை இந்த மருத்துவத்திற்கே அர்ப்பணித்து நமக்குப் பொக்கிஷமாக வழங்கி விட்டுப் போய் இருக்கிறார்கள். நாம் அதைப் பேணிக் காக்க வேண்டும். ஆனால் செயற்கையான உலகில் வாழ்கிறோம் நாம்.



**ஓம ரிப்பன் பகோடா!**

**இந்தத் தடவை நீங்கள் தீபாவளிக்கு இப்படிச் செய்யலாமே! அரிசியுடன் துவரம் பருப்புப் போட்டு அரைத்து வந்தேன். (4 ஆழாக்கு அரிசி 1½ ஆழாக்கு துவரம் பருப்பு) வீட்டிற்கு வந்து அந்த மாவில் உப்பு டால்டா, (எள்ளுக்கு பதில்) ஓமம் போட்டுப் பிசைந்து, ரிப்பன் பகோடா அச்சில் பிழிந்தேன். வாய்க்கு ஓம வாசனை அடித்துக் கொண்டு நன்றாக இருந்தது.**

**— சித்ரா ஸ்ரீதர்**

ஒரு சின்ன விஷயம். நம் பெண்களுக்குக் கூந்தலழகு என்பது சங்ககாலம் தொட்டுப் பேசப்படுவது. அதைப் பராமரிக்க இயற்கையான வழிகள் எவ்வளவோ இருக்கின்றன. ஆனால் நாம் அதையெல்லாம் மறந்து இரசாயனக் கலவையைப் பயன்படுத்துகிறோம். இதனால் கூந்தல் உதிர்தல், பொடுகு, அரிப்பு, அலர்ஜி, இளநரை என எத்தனை வருகிறது. இந்த அலர்ஜியெல்லாம் சருமம் முழுக்க பரவுதற்கெல்லாம் வாய்ப்பு இருக்கிறது.

இன்று நிறைய பேருக்குக் காணப்படும் சர்க்கரை வியாதி, சிலருக்கு வரும் எய்ட்ஸ், பால்வினை நோய் இவற்றிற்கெல்லாம் சித்த மருத்துவத்தில் நல்ல மருந்துகள் உள்ளன. நானே நிறைய வைத்தியம் செய்து இருக்கிறேன். எல்லோரும் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது நம் உடலை ஆரோக்கியமாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். இதை இயற்கையாகப் பேணவேண்டும். நம் உடல்நலம் நன்றாக இருந்தால் மனநலம் நன்றாக இருக்கும். இரண்டும் இருந்தால் நாம் நினைத்ததைச் சாதிக்க முடியும்..." என்கிறார் டாக்டர் கண்ணன்.

— பவித்ரா

**கோதுமை சுண்டல்**

நாம் கொலுவிற்குப் பயறு, கடலை பருப்பு, கொத்துக் கடலை, வேர்க்கடலை எல்லாவற்றிலும் சுண்டல் செய்கிறோம். அதுபோல கோதுமையை ஊறவைத்து, பிறகு குக்கரில் வேக வைத்து, தேங்காய் போட்டு 'சுண்டல்' செய்யலாம். வாய்க்கு நல்ல டேஸ்ட்டாக இருக்கும்.

**— சித்ரா ஸ்ரீதர்**



# பார்க் டவுன்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம், துவக்கம் 1985 Post Box No: 2806

223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354

**கிளை அலுவலகங்கள்:**

2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582, 416417

P-995,இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், அண்ணாநகர், சென்னை-40 போன் 6262656, 6280750



### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

### குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை

வைப்புத் தொகை ரூ. 5,100/-

3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ.500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ.1,000/- வீதமும், 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ.75,000/-ம் வழங்கப்படும்.

நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ.25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்.

திட்டத்தின்பயனை உங்கள் மழலைச் செல்வங்களுக்கு வழங்கி மன நிம்மதி பெறுவீர்! மகிழ்ச்சி அடைவீர்!!

### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/- முதலீடு செய்வீர் 10ஆம் ஆண்டு முடிவில் ரூ.50,000/- பெறுவீர் அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில் ரூ.1 கோடி பெறுவீர்

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ.2 லட்சம் பெறுவீர்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |



**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**

குறைந்தபட்சம் 10 ஆயிரமும் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன்பெறலாம்.

**தங்க நகைக் கடன்**

Rs. 3,000 PER 10 GRAM
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

❒ ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❒ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❒ வெள்ளி விடுமுறை

# வாய்ப் பூட்டு போட்டு விட்டீர்கள், சபாஷ்!

❖ விலைவாசி இருக்கும் சூழ்நிலையில் மிகக் காஸ்ட்லியான உணவுப் பதார்த்தங்களை நினைத்துப் பார்க்கவே கஷ்டமாக உள்ள நிலையில், எளிமையான உணவு வகைகளை எவ் விதம் தயாரிக்கலாம் என்பதை மிகத் தெளிவாக விளக்கியிருந்தது 'வீட்டிலேயே செய்து கலக்க லாமே!' இணைப்பு.

வனிதா ரவி, தஞ்சாவூர் - 5.

❖ தன்னைப் பாடாய் படுத்திய ''மெனோ பாஸு''க்கு உங்கள் கற்பனை கவிதை அற்புதம்! என்னே பெண்மனம்! ''அது'' வந்தபின் அவள் பெரியவளாக அங்கீகரிக்கப்பட்டு திருமணத்திற்குத் தகுதியாக்கி, தாயாக்கி எந்த உறவையும் விட மாதமொருமுறை விசிட் செய்து சிறந்த தோழி போல் 30-35 வருடங்கள் உடலிலிருந்து பின் தொல்லை தரும் தோழியாகி தொலைந்து விட்ட பிறகோ அவளை யாருமறியாமல் தனிமையாக்கிச் சென்று விடும் ''அது'' வாழ்வில் துன்பங்கள் பலவந்தாலும் புது வசந்தம்தான்.

எம். ஜெயந்தி, சென்னை - 80.

❖ தொலைக்காட்சி பெட்டி உள்ள ஒவ்வொரு இல்லத்திலும் நடைபெற்று வரும் 'சானல் சண் டையை' தன் சிறுகதை சானல் மூலம் சிறப்பாக, யதார்த்த நடையுடன் ஒளிபரப்பியுள்ளார் கதாசிரியை.

நாகை சந்திரா, நாகப்பட்டினம்.

❖ பெண்கள் எத்துறையிலும் ஈடுபட்டு வெற்றிக் கொடி நாட்டலாம் என்பதற்கு முல்லை சுப்பையா ஒரு முன்னுதாரணம். வெறும் வியாபார நோக் குடன் செயல்படாமல் தோழமையுடன் பழகி, நேசத்துடனும் அந்நியோன்யத்துடனும் பேசும் விதம் சில பெண்களுக்கே கைவந்த கலை என்பதை அவரது உரையாடல் தெளிவுபடுத்தியது.

வை. ஆனந்தராஜ், சென்னை - 24.

❖ ஸ்வேதாவின் ஸ்பெஷல் கொலு சிறுகதை நன் றாக இருந்தது. 'என் மருமகளுக்கு எதுவும் வராது, சுத்த மோசம்' என்று சொல்லும் மாமியார்களுக் கிடையில் இப்படி ஒரு மாமியாரா! உங்களுடைய பாஸிடிவ் அப்ரோச்சுக்கு என் வாழ்த்துக்கள். ஆமாம், எழுதியவர் பெயரை விட்டு விட்டீர்களே!

என். ஜெயராஜ், கர்னூல்.

(ஆமாம், ஸாரி. சிரிக்கச் சிரிக்கக் கதை எழு திய இவர் பெயர் விட் டுத்தான் போய் விட்டது. 'ஸ்வேதா வின் ஸ்பெஷல் கொலு' கதையை எழுதியவர் உஷா ஸ்ரீகுமார்.
- ஆசிரியர்)

❖ 'சில பிரச்னைகள், சில வார்த்தைகளில்' மக்கள் தங்களைத் தாங்களே நன்கு உணர்ந்து, நல்லவர்களாக வாழ ஒவ்வொருவருடைய பிரச்னைகளையும் முன்வைத்து, 'சுரீர் சுரீர்' என சாட்டையடிகளாக சில வார்த்தைகளைத் தாங்கள் கூறி, மனித மனங்களை பக்குவப்படச் செய்யும், இந்த முதல் பக்கப் பகுதி மிகப் பெரிய புரட்சி என்றே சொல்லலாம்.

அதுவும் இந்த இதழில், 50 வயதில் தாயாவதா? அப்படித் தாயானால் என்ன தவறு என்பது போல வும் கேள்வியிலேயே பதிலையும் வைத்திருக்கிறீர் கள். கணவன்-மனைவி என்ற புனிதமான உறவை களங்கப்படுத்தி, அசிங்கமாக வம்பு பேசும் வாய் களுக்குச் சரியான வாய்ப்பூட்டு போட்டு விட் டீர்கள் சபாஷ்!

சி. பூங்கோதை குப்புஸ்வாமி, சென்னை - 78.

❖ ''ஹாலந்து கொலு'' என்பது பற்றி திருமதி. விஜயா கண்ணன் எழுதியிருந்ததை வெளியிட்டு இருந்தீர்கள். அதில் அவர் குறிப்பிட்டு இருந்த இடத்தை MADOROTAM என்று குறிப்பிட்டிருந்தார். அது தவறு. சரியான இடம் MADURODAM என்பது ஆகும். அங்கு இலவசமாகக் கொடுக்கும் Guide லிருந்து இரு பக்கத்தை நகல் எடுத்து இத்துடன் அனுப்பியுள்ளேன்.

பெ. நா. முனுசாமி, சென்னை - 41.

## சொல்ல விரும்புகிறோம்!

• உஷா ஸ்ரீகுமார்





# டீன் ஏஜ்,

‘ஸ்வீட் ஸிக்ஸ்டீன்’.... ‘இனிக்கும் இளமை’... ‘வாழ்வின் வசந்த காலம்’ - இப்படியெல்லாம் டீன் ஏஜாகப்பட்டது பிரமாதமாக வர்ணிக்கப்பட்டாலும் பெரும்பான்மை பெற்றோருக்கென்னவோ பிள்ளைகளின் இந்த டீன் ஏஜ் பருவம் பெரும் பாரமாகவே படுகிறது.

ஏனெனில் டீன் ஏஜ் என்பது குழந்தைப் பிராயத்தின் திருப்புமுனை. விஷயங்கள் புரிந்தும்... புரியாததுமான பக்குவமற்ற காலகட்டம். சஞ்சலங்களுக்கும் சலனங்களுக்கும் எளிதாய் ஆட்படக்கூடிய பருவம். இத்தகைய ரெண்டுங்கெட்டான் பிராயத்தை பிள்ளை நல்லவிதமாய் கடந்தாக வேண்டுமே என்பதில் டென்ஷனுக்குள்ளாகிறார்கள்.

அதிலும் பெண் குழந்தைகளின் பெற்றோர்கள் இவ்வயதினை பிரச்னைக்குரிய ஒன்றாகவே உணர்கின்றனர்.

- காரணம் இல்லாமலில்லை. என்னதான் சட்டரீதியாய் பெண்களுக்கு அனைத்துச் சுதந்திரங்கள் அளிக்கப்பட்டிருந்தாலும் -

ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம் என்ற கோஷம் வீதிக்கு வீதி எழுப்பப்பட்டாலும் பெண் என்பவளை இச்சமுதாயம் நோக்கும் கோணமே வித்தியாசமானது. அவளது நடவடிக்கைகளை கணிக்கும் கண்ணோட்டமே வித்தியாசமானது. தெரிந்தோ தெரியாமலோ ஒரு இழை பிசகி நடந்தாலும் போதும்... பூதக் கண்ணாடி கொண்டு பெரிதாக்கி குற்றவாளிக் கூண்டில் ஏற்றுவதற்குத் தயங்குவதேயில்லை (பெண்கள் உள்ளிட்ட!) இந்தச் சமுதாயம்.

நிலைமை இப்படியிருக்க பெண்ணைப் பெற்றவர்களின் பயத்திற்குக் கேட்பானேன்? பயத்தின் விளைவாய் ஆணுக்கு ஆள் பெண்ணுக்கு அட்வைஸ் செய்ய ஆரம்பிக்கின்றனர். அதைச் செய்யாதே... இதைச் செய்யாதே என எடுத்ததற்கெல்லாம் கட்டுப்படுத்தத் தொடங்குகின்றனர். சினிமாக்களிலும் கதைகளிலும் வருவது போல் எங்கே தம் பெண்ணும் தடம் மாறிப் போவாளோ என அவளை கண்காணிக்கவும் தலைப்படுகின்றனர்.



பெண் பற்றிய பொறுப்புணர்ச்சி நிச்சயம் இருக்க வேண்டும்தான். ஆனால் இத்தகைய கவலையும் கட்டுப்பாடும் தேவையில்லாத ஒன்று. சரியான வழிகாட்ட யாருமில்லாத போதுதான் எது சரி... எது தவறென புரிபடாமல் அரும்புகள் தறிகெட்டுப் போகும் வாய்ப்புகள்



# டீன்-ஏஜ், டீன்-ஏஜ்...



அதிகம். இதுதான் பாதை - இதுதான் பயணம் - என வழி நடத்திச் செல்ல தகுந்த நபர் இருந்து விட்டால் பின்னே பயம் எதற்கு?

ஆம்! தாயாகிய நாம் மனது வைத்தால் நம் பெண்ணின் சுதந்திரம் பாதிக்கப்படாமலே அவளை திடசித்தமுள்ளவளாய் வளர்க்க முடியும். கட்டுக் காவல்கள் விதிக்காமலே நேர்மையானவளாய் உருவாக்க முடியும்.

அதற்கு முதல் படியாக,

கண்டிப்பும் கறாரும் நிறைந்த தாய் ஸ்தானத்திலிருந்து நம்மை ஒரு தோழியின் ஸ்தானத்திற்கு மாற்றிக் கொண்டாக வேண்டும். ஏனெனில் இப்போது அம்மாவுக்கும் பெண்ணுக்குமிடையே நெருங்கிய நேச உணர்வும், புரிந்து கொள்ளும் மனோபாவமும் (mutual understanding) மலர வேண்டியது மிக அவசியம். அத்தகைய சுமுக நிலை ஏற்பட்டால் தான் நம்மால் பெண்ணின் உணர்வுகளை புரிந்து கொள்ள முடியும். அவளது விருப்பு வெறுப்புகளை அறிந்து கொள்ள முடியும். பெண்ணுக்கும் தனது பிரச்னைகளை தாயிடம் மனம் விட்டுப் பகிர்ந்து கொள்ளத் தோன்றும்.

அத்துடன் நம் பெண் சம்பந்தப்பட்ட அனைத்து விஷயங்களிலும் ஆர்வம் செலுத்துதல் நலம். அவளது படிப்பு... நெருங்கிய தோழிகள்... பிடித்த ஆசிரியைகள்... வகுப்பில் நடந்த சுவையான சம்பவங்கள்... திரைப்படங்கள்... டீவி நிகழ்ச்சிகள் இப்படி எதுவாக இருந்தாலும் நாமும் அவளுமாய் விவாதிக்கலாம். "ஒரு தலைமுறைக்கு அப்பால் இருக்கும் அம்மா'' என அவளுள் இருக்கும் இடைவெளி உணர்வைக் குறைக்க இந்த கலகலப்பான உரையாடல் மிகவும் உதவி செய்யும்.

நட்பு பற்றிய விவாதமா? -

நமது அந்த நாளைய சிநேகம்.. சிநேகிதிகளுடனான இனிய அனுபவங்கள்.. பற்றிய பேச்சோடு, எப்படிப்பட்டவர்களுடன் ப்ரெண்ட்ஷிப் வைத்துக் கொள்ளலாம்... யார் யாரைத் தவிர்க்கலாம் என்பதையும் இயல்பாய் குறிப்பிட்டுக் காட்டலாம். 'டூ இட்', 'டோண்ட் டூ இட்' என்ற ரீதியிலான அட்வைஸை விடவும் இம்மாதிரியான சஜஷன்கள் அவர்களால் விரும்பி ஏற்றுக் கொள்ளப்படும்.

சங்கடமான விஷயம்தான் என்றாலும் திரைப்படங்கள் பற்றியும் நம் பெண்ணுடன் விவாதித்தாக வேண்டிய கட்டாயத்திலிருக்கிறோம் நாம். ஏனென்றால் இன்றைய இளம் தலைமுறையினரைக் கெடுப்பதில் முன்னணியில் நிற்பவை பெரும்பாலான திரைப்படங்கள்தான்.

- அரை குறை உடையில் ஆடுவது தான் நாகரிகம் - காதல் செய்வதும்... காதலனுடன் ஓடிப் போவதும்தான் வாழ்க்கை - என்பது போன்ற பிரமையை இளம் இதயங்களில் இவை ஏற்படுத்துகின்றன. கவர்ச்சி என்ற பெயரில் காட்டப்படும் ஆபாசக் காட்சிகள் பிஞ்சு நெஞ்சங்களில் வக்கிரங்களைத் தூண்டி



**9 புள்ளியிலிருந்து 5 புள்ளி வரை (ஊடு புள்ளி)**

-பா. பிரேமலதா ராணி

விடுகின்றன.

இந்த வகையில் அவர்களுக்கு வாழ்வின் யதார்த்தத்தை உணர்த்தும் பொறுப்பு நமதாகிறது.

- நிழலான திரைப்படத்தில் காணும் வாழ்க்கை வேறு... நிஜத்தில் நாம் வாழும் வாழ்க்கை வேறு - ஹீரோ ஹீரோயினின் பகிரங்க ஆட்டபாட்டங்களை கண்டு கொள்ளாத திரைப்பட சமுதாயம் வேறு... ஒரு ஆணும் பெண்ணும் சகஜமாய் பேசிக் கொண்டாலே சந்தேகக் கண்ணோடு நோக்கும் அசல் சமுதாயம் வேறு என்பதை சுவையான உரையாடல் மூலமே அவர்களுக்கு புரிய வைக்கலாம்.

வெள்ளித்திரையின் போலி மாயா ஜாலங்களில் மயங்குவதும்... எதிர் காலத்தை பாழடித்துக் கொள்வதும் எத்தனை முட்டாள்தனம் என்பதை சரளமான முறையில் எடுத்துச் சொல்லலாம். நிஜவாழ்வில் அங்ஙனம் அறியாமையால் தவறிப் போய் துன்பத்திற்கு ஆளானவர்களைக் கூட உதாரணம் காட்டலாம். தவறில்லை.

இத்தகைய விஷயப் பரிமாற்றங்கள் நம் பெண்ணுக்கு வாழ்க்கையின் நிஜ பரிமாணத்தைக் காட்டும். சுற்றியிருக்கும் சமுதாயத்தை இனம் காட்ட உதவும். ஒழுக்கமாயிருக்க வேண்டியதன் அவசியத்தை நினைவில் நிறுத்தும். அதன் எதிரொலியாய் தெளிவும் முதிர்ச்சியும் அவள் நடவடிக்கைகளில் வெளிப்படத் துவங்கும்.

இளம் பெண்களுக்கேயான பொதுவான பிரச்னை இன்னும் ஒன்றும் உண்டு. அது -

- பள்ளிக்கு... கல்லூரிக்கு செல்லும் வேளைகளில் பின் தொடர்வது... சந்தடி சாக்கில் கிண்டல் செய்வது... டெலிபோனில் கண்டதையும் பேசி விஷமம் செய்வது போன்ற சில்லரைத் தனங்களில் ஈடுபடும் சில ரவுடிரோமியோக்களின் தொல்லைதான்!

இவ்விதமான பிரச்னை வரும் போது ஒரு சில பெற்றோர்கள் நிதானம் இழக்கின்றனர். அநாவசிய பதட்டத்துக்கு ஆளாகின்றனர். தம் பெண்ணையும் பதட்ட நிலைக்குத் தள்ளுகின்றனர்.

'நீ தலைகுனிந்து அடக்க ஒடுக்கமாய் போயிருந்தால் அவன் உன் பின்னால் சுற்றப் போகிறான்? எல்லாம் நீ கொடுக்கும் இடம்.' - என்னவோ தப்பு அத்தனையும் அவள் பேரில்தான் என்பது போல் குதர்க்கம் பேசுவார்கள்.

'டெலிபோனில் பேசியது யார்? அவனை உனக்கு எத்தனை நாளாக பழக்கம்?' - குற்றவாளியை விசாரிக்கும் தோரணையில் துருவுவார்கள்.

ஏற்கெனவே அதிர்ந்து போயிருப்பவளை இது மாதிரியான குற்றச்சாட்டு எந்த அளவு பாதிக்கும் என்பதை கொஞ்சமும் சிந்திப்பதில்லை இவர்கள். இன்னும் ஒருபடி மேலே சென்று பெண்ணின் படிப்புக்கே முற்றுப்

**9 புள்ளியிலிருந்து 5 புள்ளி வரை (ஊடு புள்ளி)**



-பா. பிரேமலதா ராணி





# மனைவியின் மகிழ்ச்சி, கணவனின் அதிர்ஷ்டம்!

குறைந்த இரைச்சலுடன் இயங்கும் பட்டர்ஃபிளை மிக்ஸர் கிரைண்டர், குடும்பத்தலைவியின் குதூகலம். இன்றே பட்டர்ஃபிளை மிக்ஸர் கிரைண்டர் வாங்கிடுங்கள். அத்துடன் ஒரு 900 ml பட்டர்ஃபிளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிளாஸ்க் (மதிப்பு ரூ.780/–அதிகபட்ச விலை) இலவசமாக பெற்றிடுங்கள். இதுவே உங்கள் கணவனுக்கு கிடைக்கும் அதிர்ஷ்டம் அல்லவா?

**சிறப்பு அம்சங்கள் :** • ஹெவி டியூட்டி மோட்டார் - இடைவிடாது ஒரு மணி நேரம் ஓடக் கூடியது • ஹை–டென்ஷன் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிளேடுகள் - அதிகக் கூர்மையானவை • விசேஷ கிரேடு நைலான் கப்ளர்கள் - சிறந்த பிடிப்புக்கு • சஸ்பெண்ட் செய்யப்பட்ட மோட்டார்-பெட் - அதிர்வுகளே இருக்காது • மைக்ரோ-பாலன்ஸ்டு ரோட்டார் - மிகக் குறைவான இரைச்சலுடன் இயங்கும் • ஓவர் லோடு தானாகவே கட்-ஆப் ஆகும் வசதி • உறுதியான (24 கேஜ்) சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடிகள் • வேக்குவம் ரப்பர் கால்கள் - மிகச் சிறந்த பிடிப்புக்கு

இலவச சலுகை ரூ. 780/- மிச்சப்படுத்துங்கள்

பட்டர்ஃபிளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் வேக்குவம் பிளாஸ்க்
• எளிதில் உடையாதது • அதிக அளவில் வேக்குவமைஸ்டு செய்யப்பட்டது • சுத்தமானது

**முந்துங்கள்; இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே!**

அக்மே, பீனா, கார்டியல் மூன்று விதமான மாடல்களில் கிடைக்கிறது. எங்களது அனைத்து டீலர்களிடமும் கிடைக்கும். இச் சலுகை தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் மட்டுமே.

**பட்டர்ஃபிளை**
மிக்ஸர் கிரைண்டர்

## "டூ" வீலர் உற்பத்தியாளர் கவனிக்க!



**சா**லை விபத்துக்கு எத்தனையோ காரணங்கள். அவற்றில் ஒன்று - "டூ" வீலர்கள் சாலையில் செல்லும் போது மணல்படிந்த இடங்கள், எண்ணெய் சிந்திய இடங்கள் இவற்றைக் கடக்கும் போது சரிந்து விழுதல் சாதாரணமாக நாம் காணும் காட்சி. சில சமயம் குடும்பத்தோடு மூன்று நான்கு நபர்கள் செல்லும் போது இந்தச் சரிதல் காரணமாக விபத்து, அதிகம். இதைத் தவிர்க்க "டூ" வீலர் வாகனங்களுக்கு இன்னும் இரண்டு சக்கரங்களை பக்கத்துக்கு ஒன்றாக முன்சக்கரம், பின் சக்கரம் இவற்றுக்கு இடையே பொருத்தலாம். இந்த மாதிரி நாலு சக்கர ஸ்கூட்டர்களை "கைனடிக் ஹோண்டா", "வெஸ்பா" நிறுவனங்கள் தயாரித்திருக்கிறார்கள். சாலைகளில் இவைகள் ஓடுவதையும் பார்த்திருக்கிறோம். ஆனால் இவைகள் அதிக அளவில் இல்லை. இந்த மாதிரி நாலுசக்கர ஸ்கூட்டர்களை மற்ற நிறுவனங்களும் உற்பத்தி செய்ய முயற்சிக்கலாமே! இதனால் பெண்கள் வயதானவர்கள், பயமில்லாமல், நெரிசலில் 'பாலன்ஸ் தடுமாறுவது, தரையில் கால் ஊன்றுவதில் சிரமம் இவற்றைத் தவிர்க்கலாம். மற்றுமொன்று, ஸ்டாண்டு போடுவது எடுப்பது இவற்றில் உண்டான சிரமம் என்ற பேச்சுக்கே இடமிருக்காது. மோபெட், ஸ்கூட்டர் மற்றும் சைக்கிளுக்குக் கூட நாலு சக்கரம் பொருத்த முயற்சி செய்யலாம்.

— பி.என்.எம். சுந்தரம்

புள்ளி வைப்பவர்களும் உண்டு.

இதுவா சரியான அணுகுமுறை?

எந்த விதத்திலும் பயம் வேண்டாம்... எல்லோருக்கும் ஏற்படும் சாதாரண பிரச்னைதான் இது... என்று நம் பெண்ணுக்கு தைரியமும் ஆலோசனையும் அல்லவா சொல்ல வேண்டும்? அவள் மீது நமக்கிருக்கும் முழு நம்பிக்கையை அல்லவா இது சமயம் வெளிப்படுத்த வேண்டும்? நாமே அவநம்பிக்கைப்பட்டால் ஊர் பற்றி என்ன சொல்வது? நம்பிக்கையும் நட்புணர்வும்தான் பெண்ணின் ஒழுக்கத்துக்கு நாமிடும் வித்து என்பதை நினைவில் வைப்போம்.

அதே போல எக்காரணம் கொண்டும், 'இனி நீ பெரிய பெண். அங்கே நிற்கக் கூடாது... இங்கே உட்காரக் கூடாது...' என்றெல்லாம் திடீர் தடையுத்தரவு போட வேண்டாம். என்னதான் சமுதாயப் பிரச்னை இருந்தாலும், 'ஊர் பழிக்கும்... உலகம் தூற்றும்' என அச்சுறுத்த வேண்டாம். இப்படியான திடீர் கட்டுப்பாடுகள் மனோரீதியாய் அவளை புண்படுத்தும். பயமுறுத்தல்கள் வாழ்வில் வெறுப்பு உண்டாக்கும். தன்னிடம் நம்பிக்கையற்றுப் போனதற்காக அம்மாவின் மீதே மன வருத்தம் ஏற்படுத்தும். ஏன்... மீறி நடந்தால் என்ன செய்துவிடுவார்களாம் என்ற அசட்டுத் துணிச்சலையும் உருவாக்கி விடுவதுண்டு.

- எனக்குத் தெரிந்த அடக்க சுபாவமுள்ள பெண்ணொருத்தி, 'நான் வாசலில் சாதாரணமாக நின்றால் கூட எவனைப் பார்க்க இப்படி தெருவில் நிக்கறேன்னு வீட்டில் திட்டறாங்க ஆன்ட்டி. இனியும் யாராச்சும் அப்படிப் பேசினால், 'ஆமாம் அப்படித்தான்... உங்களால் ஆனதைப் பாருங்க'ன்னு சொல்லிடப் போறேன்' என்றாள் விரக்தியும் வேதனையுமாய்.

இத்தனை தூரம் மனம் நோகுமளவு ஒரு சிறு பெண்ணை அடக்கி வைப்பது எந்த விதத்தில் நியாயம்? சுடு சொற்களை அள்ளிக் கொட்டுவதால் யாருக்கு என்ன லாபம்?

சொல்லப் போனால் குழந்தைப் பருவத்தை விடவும் பெற்றோரின் அன்பும் அரவணைப்பும் அதிகம் தேவைப்படுவது இந்தப் பருவத்தில்தான். அப்படியிருக்க நாமே நம் பெண்ணின் மனநிலையைச் சிதைப்பதா? தவறான பாதைக்குத் தூண்டுவதா? வேண்டாமே.

இன்னும் சில குடும்பங்களில் பழமையில் ஊறிப் போன பெரியவர்கள் இருப்பார்கள். அவர்களுக்கு இந்தக் காலத்து பெண் பிள்ளைகளின் சுதந்திரமான பேச்சும் பாவனையும் பிடிப்பதில்லை. உடன் படிக்கும் மாணவர்களுடன் நல்ல நட்பு முறையில் பழகுவதில் கூட உடன்பாடு இருப்பதில்லை. ஆக - இவர்களின் வாய் வார்த்தைக்கு பயந்தே பெண்ணின் இயல்பான போக்கை கட்டுப்படுத்தி வைக்கும் நிலையிலிருப்பார்கள் பெற்றோர்கள்.

- வேண்டாம். எவருக்காகவும் நமது பெண் மீது நமக்கிருக்கும் நம்பிக்கையை குறைத்து வெளிப்படுத்த வேண்டாம். அடக்கி அடக்கி வளர்த்த அந்தக் காலத்து பெண்களை விடவும் சுதந்திரமாய் வளரும் இந்தக் காலத்துப் பெண்களுக்குத் திட சிந்தனையும்... சுய கட்டுப்பாட்டுணர்வும் அதிகம் என்பதை நம் பெண்ணே அவர்களுக்கு நிச்சயம் நிரூபித்துக் காட்டுவாள்.

— சூரியா சிதானந்த்

# அனுபவம் தந்த பாடமல்லவா...

உமா ராசகோபாலன்

கணவனுக்குக் கையசைத்து வழியனுப்பிவிட்டு உள்ளே நுழைந்த ராதிகாவிற்கு மனமெல்லாம் பூரிப்பில் விரிந்தது. இன்று முழுவதும் நேரம் என் முன் விரிந்திருக்கிறது. என் இஷ்டம் போல் அதை அனுபவிக்கலாம் என்ற எண்ணமே அவளைத்துள்ள வைத்தது. தனக்குப் பிடித்த பழைய சினிமாப் பாடல்களின் கேசட்டை டேப்ரிகார்டரில் போட்டுவிட்டு அத்துடன் முனகியபடியே சமையலறையை ஒழுங்குபடுத்தினாள். அன்று காலையில் நடந்ததையெல்லாம் மனது கனவையாய் அசைபோட்டது. அவள் இஷ்டம் போல் காலையில் நிதானமாய் எழுந்து தனக்கும் தன்கணவனுக்கும் சாண்ட்விச் செய்து தனக்கும் அவருக்குமாய் பிடித்த மதிய உணவை செய்தாள். எல்லாம் நிதானமாய். ஆ... இன்றும் நாளையும் முழுவதும் எங்களுக்கே எங்களுக்கு. மனது தித்திப்பாய் சந்தோஷத்தில் ஆழ்ந்தது.

அவளுக்குத் திருமணமாகி சூரத்திற்கு வந்ததிலிருந்து அவளும் மாதவனும், ஒரு நாள் கூட தனியாய் இருந்ததில்லை. அவனுடைய பெரிய அண்ணாவின் குடும்பத்தோடு தங்கியிருந்ததால் அண்ணா, அண்ணி குழந்தைகள், மாமியார் என பெரிய கூட்டத்திடையே புழங்க வேண்டி இருந்தது. மாதவனுக்கும் அவனுடைய அண்ணாவிற்கும் இங்கிருக்கும் பெரியதொரு மில்லில் வேலை. கம்பெனி குவார்ட்டர்ஸ் அண்ணாவிற்குக் கிடைத்திருந்தது. மாதவனுக்குக் குவார்ட்டர்ஸ் கிடைக்க இன்னும் சில வருடங்கள் காத்திருக்க வேண்டும். இவள் தன்னுடைய மத்திய அரசு வேலையை சென்னையிலிருந்து இங்கு மாற்றல் கேட்டு வாங்கி வந்திருந்தாள். மாதவனின் தாயார் முதலிலேயே சொல்லிவிட்டார் தங்கள் குடும்பத்தில் இவ்வளவு படித்து வேலைக்குப் போகும் பெண்கள் யாருமில்லாததால் ராதிகா வேலையை விட வேண்டாம், அனைவரும் ஒரே குடும்பமாயிருப்பதால் சிரமம் தெரியாது என்று. எனவே வேறு வீடு பார்க்கும் எண்ணமே தோன்றவில்லை. மேலும் ஆபீஸில் விசாரித்ததில் வீட்டுவாடகை அவள் வாயைப் பொத்தியது. இந்தக் குவார்ட்டர்ஸ் பெரியதாக இருப்பதால் அவர்களுக்கு வசதியாகத் தானிருக்கிறது.

ராதிகா ஒரு விதத்தில் ரொம்ப அதிர்ஷ்டசாலிதான். அன்பு நிறைந்த புக்ககத்தினர் அவளுக்கு ஒரு குறையும் வைப்பதில்லை. ஆனால் அவளுடைய அண்ணிதான் கொஞ்சம் அதிகமாய் அலட்டிக் கொள்வது போல் தோன்றியது. இங்கு என்ன வேலை? இருபத்துநான்கு மணி நேர மும் கொட்டும் குழாய், சமையல் வேலைகளில் உதவும் அத்தை, துணிமணிகளை துவைக்க வாஷிங்மெஷின், வீடு பெருக்கி மெழுகி பாத்திரம் தேய்க்க வேலைக்காரி. ஆனால் அண்ணி இரண்டு தினங்களுக் கொருமுறை தன்னால் முடியாத பாட்டைப் பாடுவது வழக்கம். அவள் மாமியார் உடனே அருமையாய் தன் மருமகளை ரெஸ்ட் எடுத்துக் கொள்ளச் சொல்லி ராதிகாவுடன் மிகுதி வேலைகளை முடிப்பாள். மாதவனின் அண்ணாவையோ கேட்கவே வேண்டாம்.

"என்னம்மா கமலி, தலைக்கு மருந்து தடவவா? பசங்களைப் பற்றி கவலைப் படாதே. இன்று நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று மனைவியைச் சுற்றிச் சுற்றி ஓடுவார்.

ராதிகாவிற்கு முதலில் சிரிப்பாய் வந்தாலும் பிறகு என்ன இப்படி அனைவரும் ஒன்றுமில்லாததற்கு ரொம்பத்தான் அலட்டிக் கொள்கிறார்கள் என்று எரிச்சலாய் வர ஆரம்பித்தது. மாதவனிடம் தனிமையில்,

"வீட்டில் சும்மாத்தானே இருக்காங்க உங்க அண்ணி. நானாவது இரண்டு பஸ் பிடித்து வேலைக்குப் போய் வருகிறேன். ரொம்பத்தான் முடியலை, முடியலை என்று அலட்டறாங்க. எங்களைப் போல் வேலைக்கும் போய் வந்தால் இவங்க என்ன பாடு

படுத்துவாங்களோ" என்று முகம் சுளித்து எரிச்சலுடன் சொல்லு வான்.

இதனாலெல்லாம் ராதிகா விற்கு தன்னைப் பற்றிய பெருமித மும் அண்ணியைப் பற்றிய ஏளன



மும் மனத்தில் நிறையவே இருந்தா லும் வெளியில் காட்டிக் கொள்ள மாட்டான். இந்த இரண்டு நாட்கள் தனிமை குடும்பத்தினர் அனைவரும் பரோ டாவிலிருக்கும் அண்ணியின் சகோ தரர் வீட்டு விசேஷத்திற்குச் சென்றதால் கிடைத்தது. மாதவனுக்கு லீவு இல்லாததால் இவர் கள் இருவரும் செல்ல முடியவில்லை. ராதிகா இந்த இரண்டு நாட்களில் தன் சமையல் திறமையெல்லாம் காண்பித்து மாதவனை ஆச்சரியத்திலாழ்த்த முதலிலேயே திட்டமிட்டிருந்தாள். முதல் நாள் அவர்கள் சென்றவுடனேயே மாதவனுடன்



கறிகாய் கடைக்குச் சென்று தனக்குப் பிடித்த கறிகாய்களாக வாங்கி வந் திருந்தாள். மாலை டிபனுக்கு தன் குஜராத்தி தோழி கற்றுக் கொடுத்திருந்த கமண் செய்ய வதாய் திட்டமிட்டிருந்தாள்.

அதனால் தான் இரண்டு நாட்கள் ஆபிசிற்கு லீவு போட்டு விட்டு அரக்கப்பரக்க தினம் எழுவது போல் ஐந்து மணிக்கே எழாமல் நிதானமாய் ஏழு மணிக்கு எழுந்து சுடச்சுட காப் பியுடன் டீவி. முன் அமர்ந்து கொஞ்ச நேரம் நிகழ்ச் சிகள் பார்த்துவிட்டு காலைச் சிற்றுண் டியும் மதிய கேரியருக் கான உணவும் தயாரித்தாள். நிதான மாய் குளிக்கத் திட்டமிட்டிருந்த ராதிகா குளித்து முடிப்பதற்குள் இரண்டுமுறை போன் மணி ஒலித்து அவளை நிம்மதியாய் குளிக்கவிடவில்லை.

அவசர அவசரமாய் குளித்து அரைகுறையாய் உடை உடுத்திக் கொண்டிருக்கும் போதே ஒலித் தது வாசல் அழைப்பு மணி. எரிச் சலாய் கதவைத் திறந்தவள் இரண்டு தெரு தள்ளியிருக்கும் ஒரு தமிழ்நாட்டைச் சேர்ந்த பெண்மணி நின்றிருப்பதைப் பார்த்து சட்டென்று தன் முகத் தில் புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு வரவேற்றாள்.

உள்ளே இயல்பாய் நுழைந்த அவர், “கமலா நீ தனியாய் இருப்பதால் வந்து பார்த்து உனக்கு ஏதாவது தேவையா என்று கேட்கச் சொன்னாள். ஏதாவது வேண்டுமா? நீ புதிதில் லையா! தயங்காமல் கேள்'' என்றபடி வரவேற்பறையில் அமர்ந்து கொண்டார். டீ, பிஸ்கட்டுடன் இவர்கள் வீட்டுக் கதை, தன் வீட்டுக் கதை, ஊர்க்கதை என்று அவர் பேச இவள் வாய் பிளந்து கேட்க நேரம் போனதே தெரியவில்லை. அவர் பதறிய படி, ''அடடா... குழந்தைகள் பள்ளியிலிருந்து வரும் நேரமாகி விட்டதே'' என்று கிளம்பவும் தான் இவள் மணி பன்னிரண்டை தாண்டி விட்டது என்பதையே உணர்ந்தாள். நடுவில் வந்த கறி காய்காரி, வேலைக்காரி நடமாடும் இஸ்திரி வண்டிப் பையன் இவர் களுக்கு பதில் சொல்லி வேலை வாங்குவது உண்மையிலேயே இனிமை லாய்தான் இருந்தது.

அவர் சென்றவுடன் ஆறஅமர தனக்குப் பிடித்த மதிய உணவை சாப்பிட ஆரம்பித்தாள். இரண்டுவாய் சாப்பிட்டிருப்பாள் திரும் பவும் அழைப்பு மணி! பாதியில் கைகழுவி கதவைத் திறந்தால் சிவில் ஆபீஸ் ஆட்கள். பால்கனி கதவு ரிப்பேருக்காக வந்திருந் தனர். தற்போது வேண்டாம் என்றால் பிறகு எப்போது வருவார் களோ? எனவே கதவைத் திறந்து விட்டாள். அவர்கள் தடார்...



## தீபாவளிக்கு....

**சோமாசி செய்யும் போது, பூரணம் உதிரியாக இருந்தால், நிறைய உள்ளே வைக்க முடியாது. மேலும், எண்ணெயில் உதிர்ந்தால், எண்ணெய் கறுப்பாகிவிடும். இதைத் தவிர்க்க, பூரணத்தில் சிறிது நெய் விட்டுப் பிசிறி அடைத்தால், நிறையப் பிடிக்கும். உதிராது. சுவையோ மேலும் கிடைக்கும்.**

**— ஆர். பார்வதி**

படார்.. என்று தங்கள் வேலையில் மூழ்கியிருக்க அவர்களை கவனித்துக் கொண்டே சாப்பிட்டு விட்டதாய் பேர்பண்ணி எழுந்து துணிகளை வாஷிங் மெஷினில் தோய்க்கலானாள்.

அவர்கள் சென்றதும் சிறிது நேரம் கண்ணயரலாம் என்று படுக்கையில் சாயவும் திரும்பவும் அழைப்பு மணி! இந்த முறை எதிர் பில்டிங்கில் இருக்கும் குஜராத்தி பெண்மணி மிஸஸ் சோனி. அவர் குழந்தைகளுக்கு இட்டிலி தோசை என்றால் மிகப் பிரியமாம். ஒரு தமிழரிடம் எப்படிச் செய்வது என்று கற்றுக் கொண்டு வழக்கமாய் ஒரு தமிழரிடம் கொடுத்து அரைத்துச் செய்வாராம். இன்று அந்த பெண்மணி ஊரில் இல்லாததால் அண்ணியிடம் கேட்டுக் கொள்ளலாம் என்று வந்தாராம். அவர் கையில் ஊற வைத்த அரிசி, உளுந்து அடங்கிய டப்பாக்கள்.

இவர் ஆரம்ப நாட்களில் தங்களுக்குச் செய்த உதவிகளை அத்தையும் அண்ணியும் பலமுறை கூறி இவர்களை அறிமுகமும் செய்து வைத்திருந்ததால் ராதிகாவால் மறுக்க முடியவில்லை. அவைகளை கிரைண்டரில் அரைத்துக் கொடுத்துவிட்டு மாலை வேலைக்கு வந்த வேலைக்காரியிடம் வேலை வாங்கிக் கொண்டு அந்த அம்மாவிடம் மரியாதைக்காக பேசிக் கொண்டிருந்தவள் மணியைப் பார்த்த போது திடுக்கிட்டாள். மணி நான்கு. இடைவெளியின்றி வேலை செய்ததும் அரைகுறையாய் சாப்பிட்டதும் அவளுக்குத் தலையை வலித்தது. மாலை வேளைக்குக் சுமன் செய்யவே போரடித்தது. சரி பிஸ்கட்டும் டீயும் போதும் என்று முடிவெடுத்து இரவிற்கு பாவு பாஜி செய்யலாம் என்று கறிகாய்களை நறுக்க உட்கார்ந்தாள். இப்பொழுதே செய்ய ஆரம்பித்தால்தான் ஆறுமணிக்குள் முடித்து விட்டு கணவனுடன் எங்காவது வாக்கிங் போகலாம்.

தற்காலிகமாய் தலைவலியை மறந்து தன்னைத்தானே உற்சாகப்படுத்திக் கொண்டு எந்தப் புடவை எந்த மேட்சிங் பிளவுஸ் போடலாம் என்று தேடலானாள். மாதவன் அம்மாவிற்குத் தெரியாமல் தன் ஆசைக்கு வாங்கித் தந்திருந்த சுடிதாரை எடுத்து வைத்து விட்டு வந்தவள் அழைப்பு மணி கேட்டு இதற்குள்ளா தன் கணவர் திரும்பி விட்டார் என்று ஓடிச் சென்று கதவைத் திறந்தாள். அங்கு ஒரு பெண்கள் பட்டாளமே நின்று கொண்டிருந்தது.

அவர்கள் பெண்களுக்குள்ளேயே சேர்க்கும் சீட்டிற்கு அன்று குலுக்கல் என்றும் அண்ணியை அழைத்துச் செல்லவும் வந்திருந்தனர். இதை அண்ணி அவளிடம் சொல்ல மறந்து விட்டிருந்தாள். அவர்கள் அண்ணி இல்லை என்றதும் என்ன ஏது என்று விவரமாய் விசாரித்துக் கொண்டு தான் நகர்ந்தார்கள். அவர்கள் சென்ற பிறகு அவசரமாய் கறிகாய்களை நறுக்கி வேகப் போட்டு விட்டு தன் கணவர் வருவதற்குள் முகம் கழுவி உடை மாற்றிக் கொள்ளலாம் என்று பாத்ரூமிற்கு ஓடினாள்.

அண்ணி மாலை வேளைகளில் அண்ணன் வருமுன் நன்றாய் அலங்கரித்துக் கொள்ளாமல் வெளியே விளையாட ஓடும் குழந்தைகளைப் பிடித்து ஹார்லிக்ஸ் கொடுப்பது, ஹோம் வொர்க் முடிக்கக் கூட உட்காருவது எல்லாம் இவளுக்குச் சிறிதும் பிடிப்பதில்லை. தான் நிரம்பவும் வேலை செய்கிறோம் என்று காட்டிக் கொள்வதற்காக இப்படிச் செய்வதாய் தோன்றும். தான் வேலை ஒன்றும் செய்யாமல் ஜாலியாக ஆபீஸிற்குச் சென்று வருவதாய் மறைமுகமாய் குத்திக் காட்டுவதாகத் தோன்றும். எனவே மாதவன் வருமுன் தன்னை பளிச்சென்று காட்டிக் கொள்ள சோப்பை மூஞ்சியில் தடவியவள் திரும்பவும் அழைப்பு மணி

**காலை 10 மணியின் அவசரத்தில் கூட்டமின்றி, நெரிசலின்றித் தனியொருவராக உங்கள் கணக்கிலிருந்து வங்கியில் பணம் பெறுவது எப்படி ?**



பொதுவாக, காலை நேரம் என்றாலே வங்கியில் வாடிக்கையாளர் கூட்டம் அலைமோதும். அப்படியிருக்கும்போது, கூட்டமின்றி, நெரிசலின்றித் தனியொருவராக உங்கள் வங்கிக் கணக்கிலிருந்து பணம் பெற விரும்புகிறீர்களா ?

சென்னையில் ஆறு இடங்களில் (ATM) கிளைகள் உள்ளன. **அண்ணாநகர், ஆழ்வார்பேட்டை, துறைமுகம், மயிலாப்பூர், ராயப்பேட்டை (டிரைவ்-இன்), தி.நகர்.**

இரவோ, பகலோ எந்நேரத்திலும், எந்நாளிலும் ஆண்டு முழுவதும், தானியங்கி காசாளும் நிலையங்களைப் பயன்படுத்திக் கொள்ளும் தகுதியைப் பெற, இந்தியன் வங்கியின் சென்னை கிளைகளில் ஏதாவதொன்றில் உங்கள் டெபாசிட் கணக்கில் குறைந்தபட்சம் ரூ. 2,000/- இருக்க வேண்டும்.

இந்த வாய்ப்பு இந்தியன் வங்கியின் சென்னை நகர வாடிக்கையாளர்களுக்கு மட்டுமே.

மேலும் விபரங்களுக்கு, இந்தியன் வங்கியின் கிளைகளை அணுகுங்கள்.




ADWAVE/IB/5048

**இந்தியன் வங்கி**

தலைமை அலுவலகம்:

31, இராஜாஜி சாலை, சென்னை-600 001.

**பாரம்பரியமிகு சேவை - இந்தியன் வங்கியின் தனித்தன்மை.**

கேட்டு எரிச்சலின் எல்லைக்கே சென்றாள்.

வெங்காயம் உரித்த கண் எரிச்சலுடன் சோப்பு கண்ணில் பட்ட எரிச்சலும் சேர்ந்து கொள்ள கதவைத் திறந்தவன் தனிமையி லிருக்கும், தன் இளம் மனைவியைக் காண ஆவலுடன் அரைமணி நேரம் முன்ன தாகவே பர்மிஷன் போட்டு, கிடைத்த ஜீப் பில் வீடு வந்த கணவனின் முன் தலைவிரி கோலமாய் நின்று திகைத்தாள். எல்லாம் தான் நினைத்ததற்கு ஏறுமாறாகப் போகவே துக்கம் தொண்டையை அடைக்க நின்ற வளின் கண்களில் முத்து முத்தாய் கண்ணீர் திரண்டது.

மென்மையான சுபாவம் கொண்ட மாதவன் மனைவியின் கண்ணீர் கண்டு துடித்தான். "என்ன ராது.. தலையை வலிக் கிறதா? கொஞ்சம் படுத்துக் கொள்கிறாயா?.. நான் வேண்டுமானால் டீ போடவா?" என்று ஆதரவாய் கேட்டது இன்னும் அதிக தன்னிரக்கத்தைத் தர கட்டிலில் சென்று சாய்ந்தாள்.

அம்மா... வீட்டில் இருந்தால் இத்தனை வேலைகளா? எங்கள் இருவருக்கே நான் இத்தனை திணறுகிறேன். அண்ணி எப்படித் தான் இத்தனை பொறுப்புக்களையும் சமா ளித்து அனைவரது தேவைகளையும் நிறை வேற்றுகிறாளோ! நடுவில் கறிகாய் மார்க் கெட், கோ-ஆபரேடிவ் ஸ்டோர்ஸ், பால் பூத், ரேஷன் கடை, மாவு மிஷின் என்று அலையும் அண்ணி, - பண்டிகை நாட்களில் அதிக வேலையைச் செய்து கொண்டு, நடு நடுவே திடீர் மட்டம் போடும் வேலைக்காரி யின் வேலையையும் செய்து சமாளிக்கும் அண்ணி - ஆண்டு முழுமைக்கான வடகம், வற்றல், ஊறுகாய் வகைகளை செய்து மகி ழும் அண்ணி - என்று அண்ணியின் ஒவ் வொரு செயலும் படுத்திருந்த ராதிகாவின் மனதில் நிழற்படமாய் ஓடியது.

அதுமட்டுமா வீட்டில் சும்மாதானே இருக்கிறாய் இதை போஸ்ட் பண்ணு, பாங்கி லிருந்து பணம் எடுத்துவா என்று அவரை ஏதோ சும்மா உட்கார்ந்து பொழுதைத் தள்ளுவதாய் சொல்லி பொறுப்பை சுமத்தும் அண்ணாவும் வீட்டில் சும்மாதானே இருக் கிறாய் அம்மா, இந்த நோட்ஸ் எழுதி வையேன் என்று கெஞ்சும் அண்ணன் குழந் தைகளும் நினைவில் மோதினர்.

நானாவது பரவாயில்லை - வெளியில் வேலை இருக்கிறது என்று என் வேலை களை முன்னதாக முடித்துக் கொண்டு கிளம்பிவிடுகிறேன். ஆனால் அண்ணிக்கு இந்தச் சமாதானமும் முடிவதில்லை. தினம் ஏதேனும் புதிய வேலைகளையும் செய்து கொண்டு தினப்படி வேலைகளையும் குறித்த நேரத்தில் செய்யும் கட்டாயம். வீட்டில் தானே இருக்கிறோம் வீட்டை இன்னும் நன்றாய், சுத்தமாய் வைத்துக் கொண்டால் நண்பர்கள் நடுவில் பெருமையாய் இருக்கும் என்று எவ்வளவு வேலையை அண்ணி இழுத்துப் போட்டுக் கொண்டு செய்கிறார்.

"என்ன ராது, இப்பொழுது தேவலையா" என்று டீயுடன் உள்ளே நுழைந்த மாத வனைப் பார்க்கவே வெட்கமாய் இருந்தது. இந்த மாதிரி தானே அண்ணாவும் நடந்து கொள்கிறார். இதனை ஊன்றி கவனிக்காத தால் தன் அம்மாவும் இத்தனையையும் செய்வதை தான் உணரவேயில்லையே என்று வருந்தினாள் ராதிகா. மாமியாரும் இந்த மாதிரி அனுபவித்ததால்தான் அண்ணியிடம் மிகுந்த பரிவாய் இருக்கிறார். எவ்வளவு நல்ல மனது அவருக்கு! இவ் வளவு நல்ல மாமியார் கிடைக்க நான் லவோ கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்று நினைத்தாள் ராதிகா.

தன் மனைவி மனதுக்குள் நடந்து கொண்டிருக்கும் இரசாயன மாறுதல்கள் எதையும் உணராமல் அப்பாவியாய் அவன் தலை வலி பற்றி கவலைப்பட்டுக் கொண் டிருந்தான் அவன் கணவன்.

---

**தேங்காய்த் துவையலுக்கு வறுக்கும் போது, ¼டீஸ்பூன் தனியாவும் வறுத்து அரைக்கும் போது வித்யாசமான சுவை யுடன் இன்னும் போட்டுக் கொள்ள ஆசை** வரும்.





**மருதாணி [illegible] கோந்து கலந்து இட்டுக் கொண்டால், உதிராது. காலை வரை இருப்பதால், பளபளமென மின்னும் கை.**

**— ஆர். பார்வதி**

# Every thing is Very good

## NEW DESIGNS VARIETIES COLOURS AND MORE QUALITIES FOR



EV Collection



*Chudidars & Nighties*

*All Garments Exclusive Designs Created By*

# ANANTHA CORPORATION

**N.S.B. Road / Chinnakadai Street, Trichy - 2.**

# புக் ஷெல்ஃப்

**இது இருபதாம் நூற்றாண்டின் கதை**

இந்த நூற்றாண்டின் சமூகவுணர்வுகளைப் பிரதிபலிக்கும் விதமாக பல்வேறு கதாபாத்திரங்களைக் கொண்டு சிறுகதைகளை வடித்துள்ளார் முக்தா சீனிவாசன்.

விலை ரூ. 30.00

**குவைத்தில் ஒரு தமிழன்**

குரும்பூர் குப்புசாமி குவைத்திற்குச் சென்ற போது அவர்களின் நாகரீகம் பற்றி மட்டுமல்லாமல் யுத்தக் கொடுமைகளையும் விவரிக்கிறார்.

விலை ரூ. 25.00

(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-17)

**எல்லா நோய்களுக்கும் ஏற்ற தேன் மருத்துவம்**

சித்த மருத்துவர் டாக்டர் இரத்தின சண்முகம் எழுதியுள்ளார். நெஞ்சுக்கபம், இருதய நோய் என பலவற்றிற்கும் மருந்தாக தேன் பயன்படுவதை விவரிக்கிறார்.

விலை ரூ. 20.00

**மழலைச் செல்வங்களுக்கு மங்கள கரமான பெயர்கள்**

எண் கணிதம், நட்சத்திரப்படி தொகுத்திருப்பவர் ஹநுமத்தாசன்

விலை ரூ. 30.00

(இரண்டும் - அருள்மிகு அம்மன் பதிப்பகம், 8 கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை-14)

**அஷ்டோத்ர சதம்பம்**

விக்னேஸ்வர அஷ்டோத்ர சதநாமாவளியிலிருந்து நவக்கிரகம் வரை தொகுத்துள்ளவர் இரா.இளையபெருமாள்.

விலை ரூ. 25.00

**ஸ்ரீலக்ஷ்மி நரஸிம்ஹர் வழிபாடு**

அஷ்டகம், கவசம் முதலானவை. தொகுப்பு - இரா.இளையபெருமாள்.

விலை. ரூ. 15.00

(இரண்டும் - சகுந்தலை நிலையம், 58 ஐயப்ப செட்டித் தெரு, மண்ணடி, சென்னை-1)

**பெண்களுக்காக**

அழகு, மருத்துவ, மனோதத்துவ குறிப்புக்களைத் தருபவர் கே.ஜி.எஃப். பழனிச்சாமி.

விலை ரூ. 11.00

**தாழ்வு மனப்பான்மையைத் தவிர்ப்பது எப்படி?**

மனோதத்துவரீதியாகக் கூறுபவர் எஸ்.ஆர். கோவிந்தராசன்.

விலை ரூ. 17.00



(இரண்டும் - கவிதா பப்ளிகேஷன், த.பெ. எண்.6123, 8 முத்துகிருஷ்ணன் தெரு, பாண்டி பஜார், தி.நகர், சென்னை-17)

**அறிவோமா ஆன்மீகம்**

கேள்வி பதிலாக பல செய்திகள் (உ-ம்) நைவேத்யம் செய்யும்போது மணி அடிப்பது ஏன், வீட்டின் முன் வாழை வளர்க்கலாமா... இப்படி. ஆசிரியர்: வைரம் ராஜகோபால்

விலை ரூ. 20.00

**தஞ்சாவூர் ஸ்ரீபங்காரு காமாக்ஷி அம்பாள் ஸ்தல வரலாறு**

தஞ்சாவூரில் கருணைமிகு ஸ்ரீபங்காரு காமாட்சி அம்பாள் குடிகொண்ட விதத்தை எழுதியிருப்பவர் புத்தகப் பித்தன்.

விலை ரூ. 6.00

(இரண்டும்-கங்கா- காவேரி, 117 காரியங்குடி செட்டித்தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம்-611 001)

**விடிவெள்ளி**

பாண்டியன் கடுங்கோன், சரித்த சாம்ராஜ்

ஜியத்தை மீண்டும் நிலைநாட்டிய சரித்திரக் கதை. ஆசிரியர் - வல்லிக் கண்ணன்.

விலை ரூ. 32.00

**இறுதியின் நிழலில்...**

இருதய நோயாளி ஒருத்தி இருதய ஆப்ரேஷனுக்கு முன் காணுகின்ற குடும்ப அன்பைப் படம் பிடிப்பவர் ஆர்.சூடாமணி.

விலை ரூ. 22.00

(இரண்டும் - இந்திரா பதிப்பகம், சி2/198, டவுன்ஷிப், திருச்சி - 620 014)

**வினை தீர்க்கும் விநாயகர்**

1008 நாமாக்கள் மற்றும் பூஜை முறைகள். ஆசிரியர்கள் - கே.என். சரஸ்வதி, அர்த்த நாரீஸ்வரர்.

விலை ரூ. 18.00

**கோசார கிரக பலன்கள்**

சோதிடத்தில் ஆர்வமுள்ளவர்கள் படிக்க வேண்டிய நூல். ஆசிரியர் - கே.என். சரஸ்வதி.

விலை ரூ. 20.00

(இரண்டும் - கடலங்குடி பப்ளிகேஷன், 38 நடேச அய்யர் தெரு, தி.நகர், சென்னை-17)

**நீடித்து நிலைக்குமா (காதல்) திருமண வாழ்க்கை?**

சுவாரஸ்யமான கேள்விக்கு ஜோதிட ரீதியாக பதில் சொல்பவர் சுவாமி விஜயானந்தா.

விலை ரூ. 17.00

(வள்ளி புத்தக நிலையம், 8-ஏ கந்தரேஸ்வரர் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை-14)

**வேலை தேடும் இளைஞர்களுக்காக...**

தன்னம்பிக்கையை ஊட்டும் கதை, கட்டுரைகளைத் தருபவர் பிஎஸ்.ஆச்சார்யா.

விலை ரூ. 19.00

**பம்பாய் கல்கத்தா டில்லி சமையல்**

தருபவர் ராஜம் அனந்தராமன்

விலை ரூ. 18.00

(இரண்டும்-நர்மதா பதிப்பகம், 16/7 ராஜா பாதர் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை-17)

**கிருஷ்ண தாசி**

தீட்சிதர் மகனும், தாசி குலத்தில் பிறந்து விட்ட பெண்ணும் உயர்ந்த காதலுக்கென வாழ்ந்த கதை. ஆசிரியர் இந்திரா சௌந்தர் ராஜன்.

விலை ரூ. 34.00

**வாடாமல்லி**

அலிகளைப் பற்றிய நெஞ்சை உருக்கும் கதை. ஆசிரியர் - சு.சமுத்திரம்.

விலை ரூ.50.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13 தீன தயாளு தெரு, தி.நகர், சென்னை-17)

**சினிமா டெக்னிக்**

சினிமா தொழில்நுட்பக் கருவிகள் பற்றிய பயனுள்ள நூல். ஆசிரியர் - எம்.விஜயகுமார்.

விலை ரூ. 30.00

(நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41-பி, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை-98)

**வெளிநாடுகளில் வேலை வாய்ப்பு - உண்மை விவரங்கள்**

இளைஞர்களுக்கு வழிகாட்டும் நூல். ஆசிரியர் எஸ்.சத்தியமூர்த்தி.

விலை ரூ. 20.00

(ராஜாமணி பதிப்பகம், 7, நூறு அடி ரோடு, காரைக்குடி - 623 002.

**தீபாவளிக்காக நாம் எவ்வளவோ செலவு செய்கிறோம். நம் உறவினரில் சிலர் வசதி குறைந்தவர்களாக இருக்கக் கூடும். அந்தக் குழந்தைகளில் 2 பேருக்குத் துணி வாங்கிக் கொடுக்கலாமே.**

— ஆர். பார்வதி





**சாக்லேட் மிட்டாய் வாங்கிய உடன் மொறு மொறுப்பாக இல்லாமல் இருக்கின்றதா. கவலையை விடுங்கள். குளிர் சாதனப் பெட்டியில் வைத்து விட்டு மறுநாள் எடுத்து வாயில் போட்டுப் பாருங்கள். புத்தம் புதிதாய் மொறு மொறுவென்று இருக்கும்.**

— பி. காயத்ரி


முன்பு
பின்பு


KRACK





# 'கிரேட்' தீபாவளி ஸ்பெஷல்

பதிமூன்று வயதில் சமையலில் கரண்டி பிடிக்க ஆரம்பித்த சி.வி. ரமேஷ் இன்று பத்தாயிரம் கல்யாணங்களுக்கும் மேல் சமைத்து, ஏராளமான 'கல்யாண காண்ட்ராக்ட்'களையும் எடுத்து நடத்தி வருகிறார். அவர் நம் மங்கையர்மலர் வாசகியருக்குத் தரும் தீபாவளி ஸ்பெஷல் பட்சணங்கள்...



சி.வி. ரமேஷ்

## கிரேட் ஸ்பெஷல்

### ப்ரெட் பனீர்

**தேவையானவை:**

பசும்பால் - 1 லிட்
சர்க்கரை - ¾ கிலோ
லெமன்சால்ட் - 1 துளி
சுத்தமான மல் துணி - வடிகட்ட

*மசாலாவிற்கு*

கோவா (சர்க்கரை இல்லாதது) - 100 கிராம்
பிஸ்தாபருப்பு - சிறிது
பாதாம் - சிறிது
முந்திரி - சிறிது



• ப்ரெட் பனீர்

***செய்முறை:*** மசாலாவிற்குக் குறிப்பிட்டுள்ளவற்றை (கோவா நீங்கலாக) ஒரு மணி நேரம் ஊற வைக்க வேண்டும். பிறகு நன்கு வெண்ணையாக அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். பசும்பாலை நன்கு காய்ச்சி லெமன் சால்ட்டை போட்டால் பால் திரிந்து விடும். அதில் கிடைக்கும் சென்னாவை சுத்தமான மல்துணியில் வடிகட்டி நன்கு முறுக்கி துளி நீரில்லாமல் எடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு நன்கு தேய்த்து உருட்டி 'ப்ரெட்' வடிவத்தில் செய்து கொள்ள வேண்டும்.

சர்க்கரையை ஜீராவாகக் காய்ச்சி இரண்டாகப் பிரித்துக் கொள்ளலாம். அடுப்புச் சூடு எப்போதும் மிதமாகவே இருக்க வேண்டும். பாதி ஜீராவை (தேன் பதம். கையில் எடுத்தால் ஒட்ட வேண்டும். கம்பியாக வரக் கூடாது) அடுப்பில் வைத்து சென்னாவை ஜீராவில் 25 நிமிஷம் வேக வைக்க வேண்டும். அடுப்பு ஜீரா கட்டியாக மாறாமல் இருக்க இறக்கி வைத்துள்ள ஜீராவைச் சேர்த்துக் கொள்ளலாம். ஜீராவில்

வெந்த சென்னாவை கீழேயுள்ள ஜீராவிலும் ஊறவைத்து எடுத்துத் தண்ணீரிலும் நன்கு அலம்பி உதறிவிட வேண்டும். ஜீராவில்தான் சென்னா நன்கு வேகும். உள்ளே பதமாக இருக்கும். அடுப்பு மிதமாக இருக்க வேண்டும். தீ கூட இருந்தால் கருகிவிடும்.

பிறகு கோவா, அரைத்து வைத்த சாமான்களை நன்கு கிளறி ஜீராவுடன் சேர்த்துப் பூரணமாக்கிக் கொள்ள வேண்டும். மிதமான தீயில் அனைத்தும் ஒன்று திரண்டு வரும்.

இப்போது இரண்டு சென்னாக்களுக்கு நடுவே இந்தப் பூரணத்தை வைத்து 'ப்ரெட் பனீர்' தயாரிக்கலாம். புதுமையான சுவையான ஸ்வீட்.



• கோவா பாதாம் கேக்

## கோவா பாதாம் கேக்

**தேவையானவை:**

கோவா (சர்க்கரை இல்லாதது) - 250 கிராம்
பாதாம் - 250 கிராம்
சர்க்கரை - 400 கிராம்
நெய் - 50 கிராம்
ஏலக்காய் - சிறிது

**செய்முறை:** பாதாமை இரண்டுமணிநேரம் ஊறவைத்து மெழுகாக அரைத்துக் கொள்ள வேண்டும். பிறகு சர்க்கரையை ஜீராவாகக் காய்ச்ச வேண்டும். அடுப்புத் தீ மிதமாக இருக்க வேண்டும். சர்க்கரை தேன்பதம் வந்தவுடன், கோவா பாதாம் இரண்டையும் போட்டு நன்கு கிண்ட வேண்டும். நன்கு சேர்ந்து, கொதிக்க ஆரம்பித்தவுடன் நெய் விட்டு நன்கு கிண்டிவிட வேண்டும். உருட்டிப் பார்த்தால் தளர உருண்டையான பதம் வரும். பாதாமும் கோவாவும் நெய்விட்டுக் கொண்டு தளர இருக்கும். ஏலக்காயைப் போட்டுக் கிளறி அதை அப்படியே நெய் தடவிய தட்டில் கொட்டி ஆறிய பிறகு வில்லை போடலாம்.

## வெஜிடபிள் பகோடா

**தேவையானவை:**

கடலைமாவு - 200 கிராம்
அரிசிமாவு - 100 கிராம்
கார்ன் ப்ளவர் - 50 கிராம்
வெண்ணெய் - 100கிராம்
எண்ணெய் - 500 கிராம்
உப்பு - தேவையான அளவு
பச்சைமிளகாய் - 5
இஞ்சி - பெரிய துண்டு
கருவேப்பிலை - சிறிது
வெங்காயம் - 2 (பொடியாக நறுக்கியது)



• வெஜிடபிள் பகோடா

பச்சைப்பட்டாணி - சிறிது
காரட் - 1(துருவியது)

*செய்முறை:* காய்கறிகளை தனித்தனியாக நறுக்கி வைத்துக் கொள்ள வேண்டும். பகோடாவிற்கு மட்டுமல்லாமல் எந்த பட்சணத்திற்குமே மாவு கலப்பது என்பது சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டிய விஷயம். அப்படியே மாவை ஒன்றன் பின் ஒன்றாகப் போட்டுக் கலந்து விடுவது அல்ல.

முதலில் வெண்ணெய், உப்புப்பொடி, அரை டம்ளர் தண்ணீர்விட்டு நன்கு அடிக்க வேண்டும். பிறகு அதில் மூன்று மாவையும் போட்டு நன்கு கலந்து 'பரபர'வெனத் தேய்க்க வேண்டும். வாசனையாக இருக்கும். பிறகு கறிகாயைச் சேர்த்துக் கலந்து 2-ஆகப் பிரித்துக் கொள்ள வேண்டும்.



பிறகு முதல் மாவில் லேசாகத் தண்ணீர் தெளித்து மேலாக எடுத்து உதிர் உதிராகப் போட வேண்டும். எண்ணெய் மீடியம் காய்ச்சலில் இருக்க வேண்டும். பிறகு இரண்டாவது மாவையும் முதல் மாவு போல போட்டு எடுக்க வேண்டும்.

## கோவா கோகனட் கேக்

***தேவையானவை:***

தேங்காய்ப்பூ - 50 கிராம்
கோவா (சர்க்கரை இல்லாதது) - 100 கிராம்
சர்க்கரை - 50 கிராம்
நெய் - 10 கிராம்
ஏலக்காய், குங்குமப்பூ - சிறிது

*செய்முறை:* தேங்காய் நாம் வீட்டில் துருவுவது அல்ல. கடையில் தேங்காய்ப்பூவாக விற்பார்கள். அதை வாங்க வேண்டும். மற்றபடி செய்முறை பாதாம் கோவா கேக் போலத்தான்.

## ரிப்பன் பகோடா

***தேவையானவை:***

அரிசி மாவு - 1 பங்கு
கடலைமாவு - பங்கு
மஞ்சள், உப்பு, பெருங்காயம், காரப்பொடி, வெண்ணெய் - அவரவர் சுவைக்கேற்ப

*செய்முறை:* எல்லோரும் தான் ரிப்பன் பகோடா செய்கிறார்கள். ஆனால் மாவினை கலக்கும் முறையில்தான் அது சிறப்பாக வரும். முதலில் வெண்ணெய், உப்பு, காரப்பொடி, பெருங்காயம், மஞ்சள்பொடி இவற்றை நன்கு 'பீட்' செய்ய வேண்டும். அடித்துக் கலந்து பிறகு 2 மாவினையும் தேய்த்துக் கலக்க வேண்டும். பிறகு நீர் தெளித்துக் கெட்டியாக ஆக்கிக் கொண்டு பிழிய வேண்டும்.

மாவு கெட்டியாக இருந்தால்தான் 'கரகர'வென வரும். பிழிய ஈஸி என தண்ணீர் நிறைய சேர்க்கக் கூடாது.

**ஓமப்பொடி** : 1 பங்கு அரிசிமாவு + ½ பங்கு கடலைமாவு + ஓமம்+ உப்பு.

***மிக்ஸர்*** : நாம் போடும் பொருட்களுடன் கருவேப்பிலை, பொரித்த பட்டாணி போட்டால் சுவையாக இருக்கும். பட்டாணி பொரிப்பது ஒரு கலை. பட்டாணியை ஊறப் போட்டு உப்புப்போட்டு பாதி வெந்தவுடன் எடுத்து வடிகட்டி விட வேண்டும். பிறகு இதைப் பொரித்தால் வெடிக்காது. மிக்ஸருடன் சாப்பிடும் போது சாப்பிடும் பக்குவத்தில் கரகரவென இருக்கும்.

இப்படிப் பேசப்பேச அருவியாக 'சமையல் யோசனைகள்' கொட்டுகிறது 'கிரேட் ஸ்வீட்ஸ்'ஸின் உரிமையாளர் ரமேஷிடமிருந்து. மிகச் சிறிய வயதிலேயே சமையல் துறையில் புகுந்து விட்டதால் முழுக்க முழுக்க அனுபவ பாடமாக நளபாகமாகச் செய்கிறார் இவர். ரமேஷ் செய்யாத வி.ஐ.பி. வீட்டுக் கல்யாணமே கிடையாது எனலாம்.

''அத்தையும் என் குரு சதாசிவம்,

வெங்கட்ராமன் இவர்களிடம் கற்றுக் கொண்டதுதான். என் மாமனார் பத்மனாபனும் எனக்குச் சிறந்த வழிகாட்டியாக இருந்தார். எல்லாவற்றிற்கும் மேலாக என் மனைவி ராஜலட்சுமி என் தொழிலின் கஷ்ட நஷ்டங்கள் என்னவென்பது அவளுக்குத் தெரியும். எனவே என்னுடைய அத்தனை சுகதுக்கங்களிலும் பங்கு கொள்வாள்'' என்று பெருமிதமாகக் கூறும் இவர் சமையல் மற்றும் பட்சணங்களுக்கு நிறைய யோசனைகள் சொல்கிறார்.

''பட்சணங்களுக்கு எண்ணெய்க் காய்ச்சல் ரொம்ப முக்கியம். எண்ணெய் என வரும் போது தரமான ரீபைண்ட் ஆயில்தான் பட்சணங்களுக்குச் சிறந்தது. அல்லது சுத்தமான நல்லெண்ணெயில் செய்து விடுங்கள். பாதுஷா போன்ற உள்ளே வேகவேண்டிய பட்சணங்களுக்கு எண்ணெய் அரைக்காய்ச்சலில் இருக்க வேண்டும். லட்டு, பூந்தி போன்றவை போட்டு எடுக்க வேண்டியது. ஜிலேபி, பூந்தி போன்றவற்றிற்கு எண்ணெய் முழுக் காய்ச்சலில் இருக்க வேண்டும். ஒரு பொட்டு தண்ணீர் பட்டால் 'டங்'கென்று சத்தம் வர வேண்டும். இதுதான் சரியான பதம். அதே போல முறுக்கு தேங்காயெண்ணெயில் சுடலாம். உடலுக்குக் கெடுதலே இல்லை. தேங்காயெண்ணெயைப் பற்றி நிறைய தவறான அபிப்பிராயங்கள் இருக்கின்றன. தேங்காயிலேயே மூழ்கி எழும் கேரளத்துக்காரர்கள் நன்றாக இல்லையா?''

எனும் ரமேஷுக்கு ஆன்மீகத்திலும் நிறைய ஈடுபாடு உண்டு. திருச்சி சாந்தானந்தா சுவாமிகளின் பிரிய பக்தரான இவரை சுவாமிகள் நீ 'கிரேட்'டாக வர வேண்டும் என ஆசிர்வதித்தாராம். எனவே அந்தப் பெயரிலேயே 'தி கிரேட் ஸ்வீட்ஸ்' எனச் சமீபத்தில் தி. நகர், சவுத்வெஸ்ட் போக் ரோடில் (நந்தனம் சிக்னல் அருகில்) சுவையான ஸ்வீட் ஸ்டாலை ஆரம்பித்திருக்கிறார்.

''என்னுடைய எண்ணமே நாங்கள் தயாரிக்கும் பட்சணங்கள் அனைத்தும் 'கிரேட்' என மக்கள் புகழ வேண்டும் என்பதுதான். என் பாட்டிகளான சீதாப்பாட்டி, நாராயணிபாட்டி, அன்னபூரணிதான் சென்னையில் முதன் முதலாக முறுக்கு சுற்றி கல்யாணங்களில் கொடுக்க ஆரம்பித்தார்கள். அந்தப் பரம்பரையில் வந்த நானும் என்னுடைய தரமான பட்சணங்களை மக்கள் சாப்பிட்டு வாழ்த்த வேண்டும் என்றுதான் விரும்புகிறேன்'' என்கிறார்.

விரைவிலேயே சாம்பார், ரசம், கூட்டு எனக் கேரியரில் அனுப்பும் திட்டம் ஒன்றையும் ஆரம்பிக்க இருக்கிறார் இவர். 'மெம்பர்ஷிப் கார்ட்' போட்டு சிறிய தொகை டெபாசிட்டாக வாங்கிச் செய்யப் போகிறாராம். வீட்டில் சாதம் மட்டும் வைத்துக் கொண்டால், சுடச் சுட சுவையான மற்ற அயிட்டங்களை வாங்கிக் கொண்டு வந்து விடலாம்.

''கல்யாண மண்டபம் கட்ட வேண்டும் என்பதுதான் என்னுடைய பெரிய இலட்சியம். பெரிய திருமண ஹால் புக் பண்ணும் யாரும், சமையலறை சரியாக இருக்கிறதா என பார்ப்பதில்லை. வரவேற்பு ஹால், மற்ற அறைகள் வருபவர்க்குச் சௌகர்யமாக இருக்குமா என பார்த்துக் கொள்கிறார்கள். ஆனால் கல்யாண விருந்து தானே நிறைவளிக்கும் விஷயம். மணிக்கணக்கில் அடுப்படியில் நின்று வேலை செய்பவர்களுக்குச் சௌகர்யம் இருக்கிறதா எனப் பார்த்தால்தானே அவர்கள் சமையலும் நன்றாக இருக்கும். அந்த வகையில் அனைத்து அம்சங்களையும் மனதில் கொண்டு ஒரு சிறந்த கல்யாண மண்டபம் கட்ட வேண்டும் என்பது என்னுடைய இலட்சியம்'' என்கிறார் ரமேஷ்.

இவருடைய பட்சணங்கள் மட்டும் 'கிரேட்' இல்லை, இவருடைய எண்ணங்களும் 'கிரேட்'டாகத்தான் இருக்கிறது. பூஜ்ய ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள் இவருடைய கடைக்குப் பொருத்தமாகத்தான் 'கிரேட் ஸ்வீட்ஸ்' எனப் பெயர் வைத்தார்கள்!

- அமுதவல்லி

படங்கள் : பாபுராஜன்

---

நம் நாடு உஷ்ண நாடு. தலைவலிக்கு மாத்திரைகள் தேடி ஓடுவதை விட, கீழாநெல்லியை வேரோடு பிடுங்கி வேர்களை மட்டும் எடுத்து இரவு முழுவதும் நீரில் ஊற வைத்து, காலையில் வேரை எடுத்து நல்லெண்ணெயில் போட்டுப் பொங்கவைத்து, சடசடப்பு அடங்கியதும் இறக்கி, தலையில் தேய்த்து அரை மணி நேரம் ஊறிக் குளித்தால் மூன்றே முறைகளில் தலைவலி போயே போச்.

– மாலதி பத்மனாபன்






# மின்சார தடங்கல்!

## உங்கள் ரெஃப்ரிஜிரேட்டரில் உள்ள உணவு ''கொச கொச'' வென்று ஆகாமல் எப்படித் தடுக்கிறீர்கள்?

சாதாரண ரெஃப்ரிஜிரேட்டரில் உள்ள பிரச்னைகளில் ஒன்று-ஃப்ரீஸரைச் சுற்றிலும் கெட்டியான லேயர் ஃப்ராஸ்ட் தொடர்ந்து உருவாகிறது. மின்சார தடங்கல் ஏற்பட்டதும், இது உருகத் துவங்குகிறது. நீங்கள் வைத்திருக்கும் உணவின் மேல் ஒழுகி, ரெஃப்ரிஜிரேட்டரில் ஒரே தண்ணீர்! பிபிஎல் ஃப்ராஸ்ட்



ஃப்ரீயை எடுத்துக் கொள்ளுங்கள். ஃப்ராஸ்ட் என்ற பிரச்னையே இல்லை. மின்சாரம் நின்று போனாலும் தண்ணீர் உள்ளில் ஒழுகுவதில்லை. உங்கள் உணவும் கெடாமல் இருக்கிறது. ஆம், பிபிஎல் ஃப்ராஸ்ட்- ஃப்ரீயை விடச் சிறந்தது வேறு எதுவுமே இல்லை. மழையோ, வெயிலோ – எந்நாளும்.

## பிபிஎல் ஃப்ராஸ்ட் – ஃப்ரீ, இது பிரச்னை ஃப்ரீ!

**ஃப்ராஸ்ட்-ஃப்ரீ**

2 டோர் 185 லி. ஃப்ராஸ்ட்-ஃப்ரீ அம்சங்கள்: • அதிக அளவுள்ள 4 நட்சத்திர ஃப்ரீஸர் • சில்லர் ட்ரே • ஒருங்கிணைந்த பஃப் இன்ஸுலேஷன் • சர்வதேச வேர்ல்பூல் தொழில்நுட்பம் • துருப்பிடிக்காத ப்ரீ-கோட் செய்த ஸ்டீல் ஷீட் பாடி • கச்சிதமாகப் பொருந்தும் மாக்னெடிக் காஸ்கெட்டுகள் • இன்னும் பல.

**BPL REFRIGERATING SYSTEMS**
நவீன வாழ்க்கை முறையின் சாராம்சம்

இந்த வரிசையில் கிடைக்கும் மற்ற மாடல்கள்: 4-டோர் 350 லி, 3-டோர் 350 லி, 3-டோர் 250 லி, மற்றும் 2-டோர் 250 லி. வாடிக்கையாளர் விலை: உள்ளூர் வரிகளைப் பொறுத்து ரூ. 12,250/- க்கும் மேலிருந்து.

For further details contact: BPL Refrigeration Limited, 429, Anna Salai, Nandanam, Madras - 600 035, Tel: 452278/458023.

# உலகம் போற்றும் வீராங்கனை!

ரங்கூன்

அரண்மனை போல என்று சொல்ல முடியாவிட்டாலும் அழகான பங்களா என்று நிச்சயம் சொல்லக் கூடிய அந்த இல்லத்தில் நிறையப் பேர் வருவதும் போவதுமாக இருக்கின்றனர்.

உள்ளே ஒரு அறையில் இரண்டே வயதுக் குழந்தையான 'ஸூ சி'யை அங்குள்ள பெண்கள் மாறி மாறிக் கொஞ்சிக் கொண்டிருந்தார்கள். கூடவே தங்களுக்குள் பேசிக் கொள்கிறார்கள்.

"ஒரு வழியாக ஜப்பானின் பிடியிலிருந்து நம்ம நாடு தப்பிச்சது. இப்போ இந்த பிரிட்டனிலிருந்து எப்போ விடுபடுமோ?" என்று விசனப்பட்டாள் ஒருத்தி.

"எனக்கென்னவோ அடுத்த வருடமே நம் நாட்டுக்குச் சுதந்திரம் கிடைச்சிடும்னு தோணுது" என்கிறாள் அந்த இல்லத் தலைவி - ஸூ சியின் தாய்.

"அப்படி ஆயிட்டா உங்க கணவர்தான் சுதந்திர பர்மாவின் முதல் பிரதமராக இருப்பாரும்மா. அவருக்குத்தான் மக்களின் முழு ஆதரவும்" என்கிறாள் இன்னொருத்தி.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டு, எதுவுமே விளங்காமல் குழந்தை ஸூ சி சிரிக்கிறாள். விதியும்!

அடுத்த சில நாட்களிலேயே (19.7.1947 அன்று) அவளது அப்பா அவுங் சான் படுகொலை செய்யப்பட்டார். சுதந்திர பர்மாவின் முதல் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதமராக அவர் ஆகவில்லை. அதற்குப் பிறகு வேறு யாருக்குமே கூட அந்தப் பெருமை கிடைக்கவில்லை!



## 1960.

"உங்கள் மகள் ஸூ சி தேவதை போல் இருக்கிறாள்" என்று ஜவஹர்லால் நேரு கூற, அவளது தாய் புன்னகைத்தாள்.

பதிமூன்று வருடங்களுக்கு முன் தன் கணவர் படுகொலை செய்யப்பட ராணுவ ஆட்சி பர்மாவில் தொடங்கியதும், மக்கள் தங்கள் குடும்பத்தின் மீது கொண்டிருந்த மகத்தான மரியாதை காரணமாக பர்மாவின் இந்தியத் தூதராகத் தான் நியமிக்கப்பட்டு, டெல்லிக்கு வந்து சேர்ந்ததும் அந்தத் தாயின் நினைவில் எட்டிப் பார்த்தன. பண்டிதரான நேருவின் அறிவு பூர்வமான நட்பு அவர்களுக்குக் கிடைத்தது ஒரு வரப்பிரசாதம்.

புது டெல்லியில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த தன் மகளைப் பார்த்து "பள்ளிப் படிப்பிற்குப் பிறகு என்ன செய்வதாக இருக்கிறாய்?" என்று கேட்க, "ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் மேற்படிப்பு படிக்க ஆசை அம்மா" என்று டக்கென்று பதில் வந்தது ஸூ சியிடமிருந்து.

"உன் வாழ்க்கையில்தான் எவ்வளவு திருப்பங்கள்!" என்றார் மைக்கேல் ஆரிஸ். ஆங்கிலேயர். 1972 ல் ஸூ சியை மணந்தவர்.

"நம் காதலும், திருமணமும் என்னைப் பொறுத்தவரை சுவையான திருப்பங்கள்தான்" என்றார் ஸூ சி.

நினைத்துப் பார்க்கும் போது பிரமிப்பாகத் தான் இருந்தது. ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தின் தூய ஹக் கல்லூரியில் தான் படித்ததும், அதே பல்கலைக்கழகத்தின் தூய அந்தோனி கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த சக மாணவரான மைக்கேல் மீது தனக்கு ஈடுபாடு வந்ததும், அந்த ஈடுபாட்டிற்கு வழக்கமல்லாத ஒரு

## KIDNEY FAILURE குணமானது

சென்னை, மந்தைவெளி No. 20, St. மேரி சாலையை சேர்ந்தவர் திரு. S.P. சுப்ரமணியம் (வயது 62) 20 ஆண்டு சர்க்கரை நோயாளியான இவர் இதயநோயும் உள்ளவர். சிறுநீரக செயலிழப்பு (Renal Failure) ஏற்பட்டு சுமார் ஒன்றரை ஆண்டாக சரியாக சிறுநீர் பிரிக்கும் சக்தி இன்றி தினம் 1-2 லிட்டர் தண்ணீர் குடித்துவிட்டு (High Dose Lasix) எடுத்துக் கொண்டால்தான் சிறுநீர் இறங்கும். எமது 2 மாத சிகிச்சைக்கு பின் கடந்த 1 மாதமாக Lassix எடுக்காமலேயே ஒழுங்காக சிறுநீர் பிரிகிறது. முன்பு அதிகரித்து இருந்த Urea, Creatinine, Albumen இப்போது Normal ஆக உள்ளது.

**முக்கிய குறிப்பு:** அதிகபட்சம் 6 மாதசிகிச்சை போதும். ஆண்டு கணக்கில் சிகிச்சை தேவை இல்லை. எந்த மருந்தானாலும் மருந்தை நிறுத்தியபின்பும் எல்லாம் Normal ஆக இருக்க வேண்டும். 1 மாதத்தில் மீண்டும் மூத்திரம் இறங்காமல் முகம் வீங்கி மற்ற குழறுபடிகளும் ஏற்பட்டால் அது தற்காலிக சிகிச்சை மட்டுமே! இந்த உண்மையை தெரிந்து கொண்டு யாரிடம் வேண்டுமானாலும் சிகிச்சை எடுத்துக் கொள்ளலாம்.

## குழந்தை இல்லையா? (INFERTILITY)

குழந்தை இல்லாத பெண்களுக்கு கருப்பை வளர்ச்சி இன்மை, முட்டை உருவாகாமை, மாதவிலக்கு கோளாறுகள், கருக்குழாய் அடைப்பு, வெள்ளை ஒழுக்கு, கருப்பை வீக்கம், அடிக்கடி கருக்கலைவு, (Cystic Ovaries, Hypoplastic Uterus, Fibroid, Bulky Uterus, Hyperplasia, Fallopian Tube Block, Cervicitis Endometriosis) போன்றவைகளுக்கு தனித்தனி சிறப்பு மருந்துகளால் சிகிச்சை அளிக்கிறோம். ஏதோ ஒரு பொதுவான மருந்தை சாப்பிடுவதால் பலனில்லை. எமது சிகிச்சையால் பலனடைந்தோர் பலநூறு பேர். ஆண் உயிரணு குறைபாடு : உயிரணு இல்லாத (Azoospermia) / குறைவான ஆண்களுக்கு (வயது 35 வரை) தனி சிகிச்சை உண்டு. சிகிச்சையின் பலனை சோதனை மூலம் அறிந்து கொள்ளலாம்.

### கருப்பை புண் – கட்டி – வீக்கம் – 30, 40 நாட்கள் நிற்காத இரத்தப்போக்கு

ஆபரேஷன் வேண்டாம், மூலிகை மருந்தில் சுகம் பெறுங்கள். 37 வயதை நெருங்கும் பல பெண்களும், மாதவிடாய் ஓய்வு (Menopause) காலத்திலும் மிக அதிகமாக துன்பப்படுவது, கருப்பை புண்-கட்டி, மற்றும் 30-40 நாட்கள் கூட நிற்காத அதிக இரத்தப்போக்கினால்தான். இதற்காக அவசரப்பட்டு ஆபரேஷன் தேவையில்லை. அதன் பின்விளைவுகளையும் தவிர்க்கலாம். கருப்பையை அகற்றாமல் மூலிகை மருந்தினால் முழுசுகம் பெறமுடியும். அதிகமாக கொட்டுகின்ற இரத்தப்போக்கு நின்று, இடுப்பு, கால், கை, மூட்டு வலிகள் தீரும். கருப்பை வீக்கமும் (Bulky Uterus) சுருங்கி போய்விடுகிறது. மாதவிடாய் கருப்பாய் - கட்டி கட்டியாக வெளியாவதும் 15-20 நாளிலேயே மீண்டும் வரும் கோளாறுகள் தீரும்.

மாதக்கணக்கில் நிற்காத ரத்தப்போக்குடன் 20 நாளில் திருமணத்தை எதிர்நோக்கி இருந்த ஒரு இளம்பெண் எமது மருந்தால் முழு சுகம் பெற்று உள்ளார். ● திருச்சி ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்த 31 வயது பாங்கு ஊழியரான திருமணமாகாத பெண் நிற்காத இரத்தப் போக்கினால் கருப்பை அகற்றவேண்டிய நிலையில் குணமாகி 2 மாதம் ஆகிறது. இன்னும் பலவகை காரணங்களுக்காக கருப்பை அகற்றவேண்டிய நிலையில் எமது மருந்தினால் பலர் சுகம் பெற்று உள்ளனர்.

காரணமும் உண்டு. திபெத் மற்றும் இமயமலை ஆகியவற்றைத் தன் ஆராய்ச்சிப் பொருளாக எடுத்துக் கொண்டிருந்த மைக்கேலுக்கு ஆசியாவின் அரசியல் அத்துபடி. ஸூ சியோ தன் குடும்பச் சூழல் காரணமாக அரசியல் ஞானம் நிறைந்தவராக விளங்கினார்.

"நாம் இருவரும் திருமணம் செய்து கொண்டதைப் பற்றி உங்கள் நாட்டு மக்களில் பலருக்கு அதிருப்தியாமே" என்றார் மைக்கேல்.

"இருக்கலாம். ஆனால் என்னைப் பற்றிய எந்த உண்மையையும் நான் மக்களிடமிருந்து மறைக்க விரும்பவில்லை. எனக்கு நேரடியாகவும், நேர்மையாகவும்தான் எதையும் அணுகிப் பழக்கம். என் நாட்டு மக்கள் என்னைப் பற்றிப் போகப் போகப் புரிந்து கொள்வார்கள்" என்றார் ஸூ சி கம்பீரமாக.

**கா**லம் வேகமாகத்தான் ஓடிக் கொண்டிருந்தது. பூட்டானில் அவர்கள் வாழ்ந்த இல்லற வாழ்வு - அவ்வப்போது கொஞ்சம் பொருளாதாரத் தட்டுப்பாடு தலை தூக்கிற்று என்றாலும் - ரம்மியமாகவே இருந்தது. அதற்கு முக்கியக் காரணம் அவர்களின் அன்பு மகன்கள் அலெக்சாண்டர், கிம்.

**1945** - ஸூ சி தன் தாயின் கருவிலிருந்து சுதந்திரம் பெற்று உலகில் பிறந்த வருடம்.

1948 - பர்மா பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெற்ற வருடம்.

இந்த இரண்டு சுதந்திரங்களுமே இன்று கேள்விக் குறியாகி இருக்கின்றன என்றால் அதற்குக் காரணம் இடையில் பர்மாவில் உண்டான பலவித சுழல்களும் புதைகுழிகளும்தான்.

பர்மா சுதந்திரம் பெற்ற போது அதைக் காண அந்நாட்டு சுதந்திரச் சிற்பியாக விளங்கிய அவுங் சான் (ஸூ சியின் தந்தை) உயிருடன் இல்லை.

1962 ல் வெண்கலக் கடையில் யானை புகுந்தது. அதாவது ராணுவம் பர்மியத் தலைமையை ஏற்றது. அப்போதைய பிரதமர் 'யூ நூ'வை சிறையில் அடைத்துவிட்டு, தளபதி நெவின் ஆட்சிக் கட்டிலைக் கைப்பற்றினார். தன் கோஷ்டியை ஒரு கட்சிதான் என்று கூறிக் கொண்டார் நெ வின். "பர்மா சோஷலிஸ்ட் முன்னேற்றக் கட்சி" என்ற அந்த கோஷ்டியின் ஆட்சியில் அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டது. உள்நாட்டுக் கலவரங்களுக்கும் குறைவேயில்லை.

இந்த நிலையில்தான் ஸூ சி, நோய்வாய்ப்பட்ட தன் தாயின் கூட இருக்கத் தாய்நாட்டுக்குத் திரும்பினார்.

**ப**டுத்த படுக்கையாகக் கிடந்த தாயின் நலிந்த கைகளை ஆதரவுடன் தடவிக் கொண்

டிருந்தாலும், தெருவில் செல்லும் ஊர்வலங் களும் அவற்றின் கோஷங்களும் ஸூ சியின் கவனத்தில் பதியவே செய்தன.

1962 லிருந்து பர்மாவின் ராணுவ ஆட்சித் தலைவனாக இருந்த நெ வின் 26 வருட ஆட் சிக்குப் பிறகு அப்போதுதான் தன் பதவியை ராஜினாமா செய்திருந்தான். கூடவே "இனி பர்மாவின் அரசியலமைப்பு எப்படியிருக்க வேண்டும் என்பதை மக்களே தேர்ந்தெடுக்க லாம்" என்ற அறிவிப்பும் செய்யப்பட்டது. மக்கள் ஜனநாயக அமைப்பையே விரும்பினார் கள். ஆனால் ராணுவம் கொடுத்த வாக்கை மீறியது. மீண்டும் அடக்குமுறைப் படலம் தொடங்கியது.

அடக்குமுறை என்றால் அப்படி இப்படி இல்லை. நாள்தோறும் நூற்றுக்கணக்கான ஜன நாயக விரும்பிகள் கொல்லப்பட்டனர்.

நெ வின்னுக்குப் பிறகு பர்மாவின் தலை மையை ஏற்ற ஜெனரல் ஸா மவுங் "தேசிய சட்ட ஒழுங்கு மீட்புக் குழு" (SLORC) என்ற ஒரு அமைப்பைத் தொடங்கி அதன் மூலம் பலாத்காரத்தை நாடெங்கும் பிரயோகித்தார். ஆயிரக்கணக்கான ஜனநாயக விரும்பிகள் எல்லைப் பகுதிகளுக்குப் பறந்தனர். காரணம்? தன்னாட்சி கோரி புரட்சி செய்து கொண் டிருந்த கொரில்லாப் படையினருடன் சேர்ந்து கொள்ளத்தான்!

"இப்படி என் தாய்நாடு சீரழிந்து கொண் டிருக்கையில் நான் மட்டும் கம்மாயிருப்பதா?" என்று தன்னை அடிக்கடி கேட்டுக் கொண் டிருந்த ஸூ சீயைக் கொந்தளிக்க வைத்தது 8.8.88 (துரதிஷ்டமான நாலெட்டு என்று இந்த நாளை சர்வதேச அரசியலில் குறிப்பிடு வதுண்டு) அன்று நடைபெற்ற ஒரு கொடூரம். ரங்கூன் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த நூற்றுக் கணக்கான அப்பாவி மாணவர்களைக் கொன்று குவித்தது ராணுவம்.

பொங்கியெழுந்தார் ஸூ சி. பல்வேறு ஜன நாயக ஆர்வக் குழுக்களை இணைத்தார். 24.9.88 அன்று ஜனநாயக தேசிய அணி உரு வானது. அதன் செயலாளராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார் ஸூ சி. ஸூ சியின் மதிப்பு பர்மாவில் உயர்ந்து கொண்டே போனது. அந்த ஆண்டு டிசம்பர் மாதத்தில் அவரது தாய் இறந்தபோது ஆயிரக்கணக்கான மக்கள் அவரது அந்திம ஊர்வலத்தில் கலந்து கொண் டதைப் பார்த்த ராணுவ அரசுக்குக் கிலி பிடித்துக் கொண்டது. நாட்டின் ஒருமைப்பாட் டுக்குக் குந்தகம் விளைவித்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு ஸூ சிக்கு 20.7.89 லிருந்து "வீட்டுச் சிறை"த் தண்டனை அமலாக்கப் பட்டது.

வீட்டுச் சிறை விதிக்கப்பட்ட பிறகு அவரைப் பார்க்கச் செல்லும் அவரது குடும்பத் தினர் கூட தீவிரமாகப் பரிசோதிக்கப்பட்ட பிறகே அனுமதிக்கப்பட்டனர். ஸூ சியின் கணவருக்கு அவரைப் பார்க்க அனுமதி மறுக் கப்பட்டது. (சொல்லப் போனால் "வெளி நாட்டவரைத் திருமணம் செய்து கொண்ட எவரும் நாட்டின் இரு சபைகளிலும் உறுப்பின ராக முடியாது" என்ற சட்டம் இன்றளவும் இருப்பது உண்மைதான். இதைக் கொண்டு தான் ஸூ சியின் அரசியல் நுழைவை இன்றள வும் தடுத்துக் கொண்டிருக்கிறது ராணுவத் தலைமை. ஆனால் இது ஒன்றும் மாற்ற முடி யாத சட்டம் அல்ல. மனமில்லாததால் மார்க் கம் இல்லை என்பதே உண்மை.)

ஸூ சியை வீட்டுச் சிறை வைத்த அரசு, அவரது ஆதரவாளர்களையெல்லாம் அள்ளிக் கொண்டு போய் சிறையில் அடைத்தது. "என் ஆதரவாளர்கள் உள்ள சிறைக்கே என்னையும் அனுப்புங்கள்" என்று கோரி உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினார் ஸூ சி. தொடர்ந்து 12 நாட்கள் கடும்பட்டினி இருந்த பிறகு, சிறை யில் உள்ள அவரது ஆதரவாளர்கள் எந்தவிதக் கொடுமைக்கும் ஆட்பட மாட்டார்கள் என்ற உத்தரவாதத்திற்குப் பிறகே தன் உண்ணாவிர தத்தை முடித்துக் கொண்டார்.

**1990** மே மாதம் நடந்த பொதுத் தேர் தலில் 485 பாராளுமன்றத் தொகுதிகளில் 392 இடங்களைக் கைப்பற்றியிருந்தது ஜனநாயக தேசிய முன்னணி. ஆனால் ராணுவ ஆட்சி ஏற்படுத்திய தடையால் ஸூ சியால் அந்தத் தேர்தலில் போட்டியிட முடியவில்லை.

"நான் தேர்தலில் போட்டியிடா விட்டா லென்ன? எனது அணி வெற்றி பெற்றதே எனக் குப் பெருமையையான செய்திதான். இனி வீட்டுச் சிறை கூட எனக்கு விருந்துணவு போலத்தான்" என்று புன்னகைத்தார் ஸூ சி.

"நமது கட்சி அரசமைத்த அடுத்த கணமே உங்களுக்கு விடுதலை" என்று குரல் எழுப்பி னார்கள் அணியினர்.

ஆனால் நடந்தது வேறு. பொதுவாக ராணுவ ஆட்சி என்றால் முரட்டுத்தனத்துடன் இருப்பது மட்டுமே இயல்பு. ஆனால் பர்மா வைப் பொறுத்தவரை ராணுவத் தலைமை அதி காரிகள் தந்திரத்தில் குள்ளநரியையும் விஞ்சி யது ஒரு வேதனையான உண்மை.

"புதிதாக ஒரு அரசியலமைப்பு சட்டத்தைக் கொண்டு வர வேண்டும். அதற்குப் பிறகுதான் அரசுப் பொறுப்புக்களைத் தேர்தலில் வென்ற வர்களிடம் ஒப்படைக்க முடியும்" என்று முதல் முட்டுக்கட்டையைப் போட்டது ராணுவ அரசு. புதிய அரசமைப்பிலும் ராணுவத் தலை மையின் தலையீடு அதிகமாகவே இருக்கும் என்பது புரிந்து போயிற்று.

"மேனர்ப்ளா" என்ற இடத்தைத் தலைமை

யகமாகக் கொண்டு "இணை அரசாங்கத்தைத்" தொடங்கினர் ஜனநாயக தேசிய முன்னணியைச் சேர்ந்த எட்டு பேர். அவர்களது 'தீவிரமான', பழிக்குப் பழி என்ற போக்கு ஸூ சீக்குப் பிடிக்கவில்லை. ஆனால் துரதிஷ்டவசமாக "அமைதியான முறையில்தான் எந்தப் பிரச்னைக்கும் தீர்வு காண வேண்டும்" என்ற அவரது கருத்து அவரது கட்சியினரிடமே கூட அப்போது எடுபடவில்லை. ஜனநாயக தேசிய முன்னணி கட்சியிலிருந்து அவர் விலக்கப்பட்டார்!

பர்மாவில் பெரியதாக அரசியல் மாற்றம் எதுவும் நடந்து விடவில்லை (அதன் பெயர் மயன்மார் என்றும், தன் தலைநகரான ரங்கூன், யாங்கூன் என்றும் மாற்றப்பட்டதைத் தவிர.) என்றாலும் 1991 ஆம் ஆண்டின் இறுதியில் ஸூ சீ மீண்டும சர்வதேசச் செய்திகளில் இடம் பெற்றார். காரணம்? அமைதிக்கான நோபல் பரிசு அவருக்குக் கொடுக்கப்பட்டது. உறுதியான கொள்கைப் பிடிப்பு, அதே சமயம் வன்முறையை ஒரு போதும் ஆதரிக்காத அவரது நேர்மை ஆகியவற்றைக் கருத்தில் கொண்டுதான் நோபல் குழு இந்த வரவேற்கத்தக்க முடிவை எடுத்தது.

ராணுவ அரசுக்கு மேலும் தலைவலிகள் காத்திருந்தன. 1992 டிசம்பர் மாதத்தில் பத்து நோபல் பரிசு பெற்ற அறிஞர்கள் ஒரு அறிக்கை விடுத்திருந்தனர். ஸூ சீ விடுதலை செய்யப்பட வேண்டும், மயன்மாரில் ஜனநாயகம் தழைக்க வேண்டும், அங்கு மனித உரிமைகள் நிலைநாட்டப்பட வேண்டும் என்பவை அந்தக் கூட்டறிக்கையில் முக்கியக் கோரிக்கைகள். தவிர அவர்கள் இந்தக் கோரிக்கைகளை தாய்லாந்து மயன்மார் எல்லைக் கோட்டினருகே நின்று கொண்டு நேரடியாகவே முழங்க, உலகின் பார்வை மயன்மாரின் மீது அழுத்தமாகவே விழத் தொடங்கியது.

வீட்டுச் சிறை விதிக்கப்பட்ட இரண்டு வருடங்களுக்குப் பிறகு ஸூ சீயைக் காண அவரது கணவர் அனுமதிக்கப்பட்டார். அவர்களது 19 வயது மகன் அலெக்ஸாண்டர், தனது தாய் எழுதிக் கொடுத்த ஒரு குறிப்பை மயன்மார் மக்களுக்குப் பொதுக் கூட்டம் ஒன்றில் படித்துக் காண்பித்தார். பொதுத் தேர்தலின் அவசியம், மனித உரிமைகள் நிலைப்பட்டே ஆக வேண்டும் என்ற பிடிவாதம் ஆகியவற்றை அடிக்கோடிட்டிருந்த அந்தக் குறிப்புகள் மயன்மார் மக்களிடையே மீண்டும் விருவிருப்பை உண்டாக்கின. அதே சமயம் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் கூட்டமைப்பும் மயன்மார் ஜனநாயகப் பாதைக்குத் திரும்ப வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிட்டவாறே இருக்கிறது.

ஆறு வருடங்களாக வீட்டுக் காவலில் வைக்கப்பட்டிருந்த ஜனநாயகக் கட்சித் தலைவியான ஸூ சீயை ராணுவ அரசாங்கம் நிபந்தனையின்றி இரண்டு மாதங்களுக்கு முன் விடுதலை செய்தது.

"அவுங் ஸான் ஸூ சீ" (Aung Saan Suu Kyi) என்பது இப்படித்தான் உச்சரிக்கப்பட வேண்டுமாம்) ஒருவழியாக விடுதலை செய்யப்பட்டு விட்டார். இனி?

மயன்மாரின் ராணுவ அரசு அவருடன் பேச்சுவார்த்தை நடத்துமா? அவருக்குரிய பங்கை அளிக்குமா? சந்தேகம்தான் என்று தோன்றுகிறது. உலக நாடுகளின் நல்லெண்ணத்தை ஈர்க்கத்தான் இந்த விடுதலை என்பது அரசியல் விமர்சகர்களின் எண்ணம்.

விடுதலை பெற்ற பிறகும் ஸூ சீ அதிகமாக வெளிவரவில்லை. தியாகிகள் தினத்தன்று மட்டுமே பெருங்கூட்டத்தின் நடுவே பேசினார். "ஏதாவது குறிப்பிடத்தக்க அளவில் புதிதாகச் சொல்வதற்கு இருந்தாலொழிய மேடை போட்டு முழங்குவதில் என்ன பயன்?" என்பது அவரது கருத்து. என்றாலும் மக்களின் ஆர்வ வெள்ளத்தை அணை போட முடியாத காரணத்தால் தினமும் குறிப்பிட்ட நேரத்தில் தன் வீட்டின் வெளிப்புறத்திலேயே உள்ள சிறு மேடையில் ஏறியபடி கையில் ஒலிபெருக்கியோடு வெளியே கூடியிருக்கும் மக்களுடன் பேசுகிறார். அதை ஒருவிதத்தில் சம்பாஷணை என்று கூடக் குறிப்பிடலாம்.

"உங்கள் கணவரோடு இங்கிலாந்துக்குப் போக அனுமதி உண்டு" என்ற ராணுவ அரசின் தந்திரப் பேச்சுக்கும், "எங்களது நிறுவனத்தில் மையச் செயலாளராக இருப்பீர்களா?" என்ற யுனெஸ்கோவின் அழைப்புக்கும் தனது மறுப்பைத் தெரிவித்திருக்கிறார் ஸூ சீ.

தாயகத்தில் இருந்து கொண்டே தன் சாத்விகமான ஆனால் உறுதியான போராட்டத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கிறார் ஸூ சீ.

— ராம்ஷேகர்



**பூசணி தோசை**

பெரிய பூசணி பத்தை ஒன்று
சிறிய டம்ளர் பச்சரிசி
உப்பு தேவைக்கேற்ப

தேவையானால் சிறிது தண்ணீர் விட்டு கரைத்துக் கொள்ளலாம். தோசைமாவு பதத்தில் இருக்க வேண்டும். மெத்தென்ற தோசை கிடைக்கும்!

— உஷா கோதண்டராமன்




Thackersey's Cholees are available only as unstitched fabrics. The Cholee design shown in the picture is only meant to spark off your imagination and give shape to your fashion fantasies. **THE HINDOOSTAN SPG. & WVG. MILLS LTD.** Two-Tier Marketing Division, Yadav Patil Lane, Veer Savarkar Marg, Prabhadevi, Bombay 400 025. Tel: 4229831 / 4229740 / 4229741. Fax: 022-4224017.


Designer 4 Blade
Tycoon Rainbow
Designer
3 Blade
Lumair
Heavy Duty Exhaust Fan
Tycoon Rainbow Table Fan
Sona Cabin Fan
Sona Oscillating
Wall Mounting Fan
Freshair
விழாக்கால வாழ்த்துக்கள்
கேதான்
கேதான்
பெயர் ஒன்றே போதுமானது
Mini Super
Freshair Deluxe
Freshair S.G.
Chiki
Mini Pedestal
Sona Pedestal
Cooler
Window Model
Cooler
Mini Model
Cooler
Floor Model
Portable Pump
SP Model

மங்கையர் மலர் & சௌபாக்யா வெட்கிரைண்டர் இணைந்து வழங்கிய

கட்டுரைப் போட்டியில் ஆறுதல் பரிசு பெற்ற கட்டுரை

# சாதித்து சௌபாக்கியம் பெற்றேன்

எங்கள் தகப்பனார் தம் இளம்வயதில் நோயில் படுத்ததால் என்னைத் திருமணம் செய்து கொடுக்கும் பொறுப்பு என்னை விட 10 வயது மூத்த என் சகோதரன் தலையில் விழுந்தது. அண்ணனின் திருமணத்திற்குப் பிறகு பெற்றோர் உட்பட அனைவரும் சென்னையில் செட்டிலானோம். அண்ணி ஒரு அரசு மருத்துவர். அண்ணன் ஒரு அரசுப் பொறியாளர். ஏழ்மை நிலையில் இருந்த எங்களை (அண்ணன் நீங்கலாக) உறவு என்று பிறர் மத்தியில் கூறிக் கொள்ள விருப்பமில்லாதவர் என் அண்ணி. என் பெற்றோர் கையாலாகாதவர்கள் என்றும், பெண்ணின் திருமணத்தை நடத்தக் கூட வக்கில்லாதவர்கள் என்றும், ஜாடைமாடையாகவும் நேரடியாகவும் கூறி, உண்ணும் உணவையே இரத்தம் என வெறுக்கும்படி கடுஞ் சொற்களால் வசை பாடுவதே அவருக்கு வழக்கமாக இருந்தது.

இந்த நிலையில்தான் எனக்கு ஒரு வரன் வந்தவுடன் அவர்கள் கேட்கும், நகை, சீர் அனைத்தும் செய்வதாகச் சொல்லி கல்யாண ஏற்பாடுகளை அண்ணனும், அண்ணியும் செய்தனர். ஏதோ கல்யாணம் நடந்து அண்ணியிடமிருந்து விடுதலை கிடைத்தால் போதும் என்று நினைத்து நானும் ஒத்துக் கொண்டேன். மணக்கோலத்தில் அழுது கொண்டே தாலி கட்டும் மேடையில் அமர்ந்தேன். நிறுத்த இருந்த கல்யாணத்தை பெரியவர்களாய் பார்த்து மாப்பிள்ளை வீட்டுக்காரர்களை சமாதானம் செய்து தாலி கட்டச் செய்தனர்.

என்னைப் போல வேறெந்த பெண்ணுக்கும் இவ்வளவு கொடூரமாக திருமணச் சடங்கு நடக்கக் கூடாது என்று இன்றும் இறைவனை வேண்டுகின்றேன். திருமண நாள் என்பதை நினைவில் கொண்டு அனைவரும் ஆண்டுதோறும் கொண்டாடும் அந்த நாளை மிகுந்த வேதனையுடன் எதிர்கொள்ள வேண்டியிருந்ததால் திருமண நாளை நான் கொண்டாடுவது கூட இல்லை.

புகுந்த வீட்டில் மற்றொரு வில்லி மாமியார், மற்றும் மாமியின் அம்மா, நாத்திகள். அனைவரும் என்னைக் கேவலமான வார்த்தைகளால் பேசுவதுடன் வீட்டு வேலைக்காரி போலவும் நடத்தினர். ஏதாவது பதில் பேசினால், "உன் லட்சணம்தான் கல்யாணத்தில் தெரிஞ்சு போச்சே, அனாதைக் கழுதை. எத்தனை வரதட்சிணைக் கொடுத்து வர இருந்த பெண்களையெல்லாம் ஒதுக்கி என் தலையெழுத்து உன்னை என் பையனுக்குக் கட்டி வைத்தேனே" என்று என் மாமியார் திட்டிக் கொண்டே இருப்பாள். என் கணவரும் "உனக்கு இஷ்டமிருந்தால் இங்கே இரு. இல்லையென்றால் எங்கேயாவது ஒழிந்து விடு!" என்று இரக்கமின்றி கூறுவார். பட்ட காலிலேதான் படும் என்பதை உணர்ந்து வாயை ஊமையாக்கி, காதை செவிடாக்கிக் கொண்டேன். இல்லையென்றால் இந்தப் புதிய சூழலில் என் வாழ்க்கையைத் தக்கவைத்துக் கொள்வது அவ்வளவு எளிதல்ல என்பதை அறிந்தேன்.

புகுந்த வீட்டின் கஷ்டங்களுக்கெல்லாம் வடிகாலாகத் தேடிப் போக பிறந்த வீட்டுச் சுதந்திரம் இல்லாத பாவி நான். இதற்கிடையில் என் கணவர் விரும்பும் வேளையில் அவருக்கு ஒரு நல்ல மனைவியாக இருக்கத் தவறியதில்லை. அதன் விளைவாக கர்ப்பத்தில் என் ஒரே பெண் குழந்தையைச் சுமந்தேன்.

தலைப்பிரசவம் தாய் வீட்டில் நடக்க வேண்டும் என்பது நியதி. அதுவே என் மாமியாரின் கட்டளையும் கூட. என் கணவரும் ஆமோதித்தார். உடனே என் அண்ணன், அண்ணியை நாடினேன். நிறைமாத கர்ப்பிணியாக இருந்த நான் தாய், தந்தை உயிரோடிருக்கும்போதே அண்ணியின் காலில் விழுந்து பிரசவத்துடன் மூன்று மாத காலம் அவர்கள் வீட்டில் தங்குவதற்குப் பணம் கொடுத்து விடுவதாகக் கூறி அழுது மன்றாடி அனுமதி பெற்றேன். அதன்படி பிரசவச் செலவு, மற்றும் சாப்பாட்டுச் செலவு இத்யாதிக்குக் கம்பெனியில் இருந்து கடனாகப் பெற்று அண்ணன் அண்ணியிடம் கொடுத்தேன். இதுபோன்ற அனுபவம் வேறெந்த பெண்ணுக்கும் வரக் கூடாது. அண்ணன், அண்ணி நன்கு கவனித்துக் கொண்டதாக புகுந்த வீட்டில் நாடகம் நடித்தேன்.

பிரசவ பேறுகாலம் முடிந்து மீண்டும் புக்ககம் வந்தபின் என் பொருட்டு நான் பெற்ற குழந்தையையும் வெறுக்கத் தொடங்கினர் என் புகுந்த வீட்டினர். குழந்தையை வளர்க்கும் பொருட்டு நான் வேலையை விடத் தீர்மானித்தேன். கணவரிடம் என் விருப்பத்தைக் கூறியதற்கு, "வேலையையும் விட்டு விட்டால் உனக்கு யாரு தண்டச்சோறு போடுவது?" என்று திட்டினார். இந்தச் சொல்லினால் நான் எப்படியும் வாழ்ந்தாக வேண்டும், குழந்தைக்காகவாவது வாழ வேண்டும், அவளை வளர்த்து அவளின் நிழலிலாவது சுகம் பெற வேண்டும் என்று

# ஸ்ரீராம் பதில்கள்

உண்மைதான். இன்னிக்கு சேமிக்கணும்னா பல கம்பெனி இருக்கு. எதில பணம்போடறது, எதில போடக்கூடாதுங்கறதுதான் ஒரே குழப்பம். அதில சிறந்ததும் சரியானதும் எதுன்னு இப்போ பாக்கலாம்.

**வங்கிகள்:** இவற்றில் டெபாசிட் செஞ்சா 12% வட்டிதான் கிடைக்கும். அதிக லாபம் வேணும்னா மற்ற நிறுவனங்களத்தான் தேர்ந்தெடுக்கணும்.

**பெனிஃபிட் ஃபண்டுகள் :** இவை எப்படி தெரியுமா? பெரும்பாலும் நிலத்தின் பேர்ல கடன் கொடுக்கிறதுக்கு உங்களோட டெபாசிட்டுகளை பயன்படுத்துறதாக சொல்றாங்க. ஆனா, கடன் வாங்கினவங்க தொகையை திருப்பித்தர தவறினா, அந்த சொத்துக்களை கையகப்படுத்தி, விற்று அதுக்கப்புறந்தான் உங்க பணத்தை மீட்கணும். உங்களுக்குத் தேவைப்படும்போது உங்கள் பணத்தை திருப்பிக் கொடுப்பதற்கு கஷ்டப்படுவாங்கனு தோணுது.

**உற்பத்தி நிறுவனங்கள்:** இவை லாபகரமா இயங்கினாதான் உங்களுக்கு வட்டி. விற்பனையில் தேக்கமோ, வசூலில் தடங்கலோ, இல்ல வேலை நிறுத்தமோ ஏற்பட்டா



சேமிக்கணும்னு சொல்றீங்க, சரி. ஆனா எதிலேன்னு சொல்லலியே?

– ப. ஆனந்தி, ஆதம்பாக்கம்

உங்க டெபாசிட்டுகளை திரும்பப் பெறுவது ரொம்ப கஷ்டங்க. உதாரணமா, ஆந்திரா சிமெண்ட்ஸ், ஸ்டான்டர்ட் மோட்டார் புராடக்ட்ஸ் ஆப் இந்தியா போன்ற உற்பத்தி நிறுவனங்கள் டெபாசிட் - தாரர்களின் பணத்தை திருப்பித் தரவே இல்லீங்க.

**நிதி நிறுவனங்கள்:** நிதி நிறுவனங்களுக்கு இந்த பிரச்சினைகள் இல்லை. ஆனால், நிதிநிறுவனங்களுடைய நிதியை எந்த தொழிலில் ஈடுபடுத்துகிறார்கள் என்பதை பொறுத்துதான் உங்கள் டெபாசிட்டுக்கு பாதுகாப்பும், வட்டியும் கிடைக்கிறது. கூடுதலான வட்டி கிடைக்கிறது என்று டெபாசிட் செய்துவிட்டு அசலை தொலைத்தவர்கள் பலரை உங்களுக்கே தெரிந்திருக்கும். எந்த நிதி நிறுவனத்தில டெபாசிட் செய்யலாம்ங்கிற முடிவை விளம்பரங்களை பார்த்து மட்டும் எடுத்தால், பண நஷ்டம்தான் ஏற்படும் என்று உறுதியாக சொல்ல முடியும்.

**(இரண்டாம் பகுதி 62 ம் பக்கத்தில்)**



என்னை குழந்தைகள் காப்பகத்தில் குழந்தையை வளர்த்தேன். அப்பொழுது எனக்கு வாழ்க்கையை எதிர்த்துப் போராடும் தைரியம் இரட்டிப்பானது. இனி அடுத்த குழந்தைகளை கர்ப்பத்தில் சுமக்க விருப்பமில்லாமல் நானே சென்று கருக்கலைப்பும் செய்து கொண்டேன். பெற்ற குழந்தையை சுகமான சுமையாகக் கருதினேன்.

நாளடைவில் கொடுமைக்கார மாமியார் நோயினால் படுத்த படுக்கையானாள். அந்தச் சிறிது காலத்திலேயே என் மாமனாரும் பாரிச வாயுவால் உடல்நலம் நலிந்தார். ஆக வயதான இருவருக்கும் பணிவிடை செய்து, வீட்டு வேலைகளையும் முடித்துக் கொண்டு, குழந்தையைக் காப்பகத்தில் விட்டு விட்டு, வேலைக்கும் ஆஜராகி விடுவேன். "இவ்வளவு கொடுமைகள் செய்தும் உன்னால் எப்படிச் சலனமில்லாமல் சேவை செய்ய முடிகிறது" என்று கூறி குழந்தையைப் போல் என்னிடம் சொல்லி அழுதார் என் கணவர்.

இதையே என் வாழ்வின் வெற்றிக்கு முதல் படியாக நினைத்துக் கொண்டு, "நான் இருக்கும் போது நீங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம்" என்று ஆறுதல் கூறுவேன். என் மாமி இறந்த பிறகு நாத்தனாருக்குக் கல்யாணம் செய்து தாய் வீட்டில் நான் அடையாத சுகத்தை அவள் அடைய இன்றளவும் உபசாரம் செய்து கொண்டுதான் இருக்கின்றேன். நாத்திகளை நன்கு கவனித்தால்தான் கணவனின் நன்மதிப்பைப் பெற முடியும். இன்று நல்ல நிலையில் இருக்கும் என் நாத்தனார்,

"உங்கள் அருமை தெரியாமல் என் அம்மா உட்பட அனைவரும் உங்களை கேலிப் பொருளாக்கினோம்" என்று உணர்ந்து என்னிடம் மன்னிப்பு கேட்டாள். இந்த வார்த்தைகள் என்னை மேலும் உயர்த்தின.

கணவர் இப்பொழுது "நீ இல்லையென்றால் என்னால் எதுவும் செய்திருக்கவும் முடியாது. இனி செய்யவும் முடியாது" என்றும் கூறிக் கொண்டிருக்கின்றார். அதைவிட நான் மனக்குழப்பத்திலேயே வயிற்றில் சுமந்து ஈன்ற என் பெண் குழந்தை அறிவிலும், ஆற்றலிலும் மற்ற குழந்தைகளை விட தனித்துவம் மிக்கவளாக, ஆண்டவன் எனக்கு அளித்த பரிசாகத் திகழ்கின்றாள். இன்று குடும்பத்தில் நானே தலைமை அங்கம் வகிக்கிறேன்.

எந்த ஒரு பெண்ணுக்கும் மனவலிமை என்பது ஆணைக் காட்டிலும் மிக அதிகம். 'சக்தி இல்லையேல் சிவம் இல்லை.' எனவே பெண் கல்வி, பெண் சுதந்திரம், சம உரிமை என்று பேச்சளவில் இல்லாமல் வாழ்க்கைத் துணைவிக்கும் சரிபங்கு உரிமை குடும்ப நிர்வாகத்தில் உண்டு என்பதை நிரூபிக்க அவள் சக்தியாக, சாமுண்டியாக, சண்டியாக, காளியாக, அபிராமியாக பல அவதாரங்கள் எடுக்க வேண்டியவளாகிறாள். ஆமாம், மனதில் உறுதி வேண்டும்! மனதில் உறுதி வேண்டும்.

**- கஸ்தூரி சேஷகுமார்.**

# முதுகுவலியா?

**நா**ன் எனது குடும்ப டாக்டரை வாரா வாரம் பார்த்துவிடுவேன். ஏனென்றால் மருத்துவத் துறை மிக வேகமாக முன்னேறி வருகிறது. சிகிச்சை முறைகளும் மருந்துகளும் ஒரே வாரத்தில் மாறி விடுகின்றன. நான் பாட்டுக்குப் பழைய மருந்துகளையே சாப்பிட்டுக் கொண்டிருக்கக் கூடாது பாருங்கள்.

என்னைப் பார்த்ததும், "வாருங்கள், என்ன விஷயம்?" என்றார் டாக்டர்.

"இன்று காலை நான் தலை வாரிக் கொண்டிருந்த போது சீப்பு கீழே விழுந்து விட்டது. அதை எடுக்கக் குனிந்தேனா, சுரீரென்று அடி முதுகிலே வலி, பயங்கரமான வலி. காலெல்லாம் துவண்டு போச்சு. கீழே விழுந்து ஒரு சத்தம் போட்டேன். என் மனைவி உடனே உங்களிடம் காட்டச் சொன்னாள்."

"அடி முதுகு வலி! அவ்வளவுதானே. இன்று காலையிலேதானே வந்தது? ஒரு வாரம் கழித்து வந்திருக்கலாமே!"

**"என்ன சொல்கிறீர்கள்? இதையெல்லாம் உடனே டாக்டரிடம் காட்ட வேண்டாமா?"**

"அதெல்லாம் பழைய கருத்துகள். மருந்து சாப்பிட்டாலும் சாப்பிடாவிட்டாலும் முதுகு வலி, சுளுக்கு எல்லாம் தானாகக் குணமாகி விடும். ரெண்டு மூணு நாள் ஓய்வெடுத்தால் போதும். ஆஸ்பிரின் சாப்பிட்டால் வலி குறையும். ரெண்டு நாளைக்கப்புறம் சாதாரணமாக நடமாடி, வேலையெல்லாம் செய்யணும். ஆபீசுக்கு மட்டம் போட வேண்டாம். வலிக்கிற இடத்தில் ஒரு பத்து நிமிஷத்துக்கு ஐஸ் ஒத்தடம் கொடுத்து விட்டு உடனே வென்னீர் ஒத்தடம் கொடுக்கணும். வலி குறையும். இது மாதிரி ஒரு நாளைக்கு ரெண்டு மூணு தரம் செய்யலாம். ஒரு வாரம் கை வைத்தியம் பண்ணிப் பார்த்துட்டு, அப்படியும் வலி குறையலைன்னா என்னிடம் வந்தால் போதும்!"

**எனக்கு ஏமாற்றமாயிருந்தது. "இது சீரியசான கேசில்லை என்று எப்படித் தெரிஞ்சுக்கறது?"**

"பாத்ரூமிலே வழுக்கி விழறது மாதிரி விபத்து காரணமாக முதுகுலே வலி வந்தாலோ, கூடவே ஜுரமடித்தாலோ அது சீரியஸ் கேஸ். கால்களிலே மரத்துப் போன உணர்ச்சி, நிற்கக் கூட முடியாமல் வலுவிழந்து போவது, சிறுநீர் அல்லது மலம் கழிப்பதில் சிக்கல் இதெல்லாம் இருந்தாலும் அது சீரியஸ் கேஸ். உடனடியாக டாக்டரிடம் வர வேண்டும்.

சில சமயங்களில் உடம்பில் கோளாறு எதுவுமில்லாமலே அடி முதுகு வலிக்கும். மன உளைச்சல் ஜாஸ்தியானால் தசைகள் இறுகி வலிக்கத் தொடங்கும். மன உளைச்சலைத் தவிர்ப்பதுதான் அதற்கு சிகிச்சை."

**"அப்போ நான் படுக்கையில் ஓய் வெடுக்க வேண்டாமா?"**



"ஓய்வு ரெண்டே நாளைக்குத் தான். நடமாடினால்தான் வலி குணமாகும். சாதாரணமாக எல்லா வேலைகளையும் செய்து கொண்டு நடமாடிக் கொண்டிருங்கள்."

**"ஏதாவது மருந்து சாப்பிட வேண்டாமா?"**

"வெறும் ஆஸ்பிரின் போதும். அல்சர் இருக்கிறவர்கள் பாராசிட்டமால் சாப்பிடலாம். கடுமையான வலி நிவாரணி மருந்துகளால் தீமைகள்தான் அதிகமாக ஏற்படும்."





**"எக்ஸ்ரே எடுத்துப் பார்க்கலாமா?"**

"காசுக்குத் தண்டம்தான். முதுகு வலி என்பது தசையில் உண்டாகிற கோளாறு. தசைகள், தசை நாண்கள், முதுகெலும்பு வட்டுகள் ஆகியவை எக்ஸ்ரே படத்தில் சரியாகப் பதிவாகாது. எலும்பிலே கோளாறு இருப்பதாகத் தெரிஞ்சால்தான் எக்ஸ்ரே எடுக்கணும். ஸ்கான், மாக்னடிக் ரெசனன்ஸ் பிம்பம் இதெல்லாம் கூடச் சரியான தகவல்களைத் தராது."

**"சில பேர் ஆபரேஷன் பண்ணிக்கிறாங்களே?"**



"நூத்துக்குத் தொண்ணூற்றி ஒன்பது பேருக்கு அது தேவைப்படாது. தசைகளுக்குச் சரியானபடி பயிற்சி கொடுத்து வலுவேற்றினாலே முதுகெலும்பு வலி குறையும். ஆபரேஷன் பண்ணி ஒரு வட்டை எடுத்து விட்டால் அதற்கு மேலேயும் கீழேயுமிருக்கிற வட்டுகளுக்குச் சுமை அதிகமாகும். வட்டுகள் அதிர்ச்சி தாங்கிகளாகச் செயல்படுகிறவை. ஒரு வட்டை எடுத்தாலும் நஷ்டம் தான். கூடிய வரை அதைத் தவிர்க்கவே முயல வேண்டும்."

**"முதுகு வலியிருக்கிறவர்கள் உடம்பை அதிகமாக வருத்திக் கொள்ளக் கூடாதுன்னு சொல்கிறார்களே?"**

"முதுகெலும்பைச் சூழ்ந்திருக்கிற தசைகளுக்கு ஒழுங்கான தேகப் பயிற்சி மூலம் வலுவூட்டினால் முதுகு வலியே வராது. பிசியோதெராபி, மசாஜ், விரல் தேய்ப்பு (Chiropractic) போன்ற சிகிச்சைகள் தசைகளுக்கு வலுவூட்டும். வெறுமே படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தால் கோளாறு அதிகமாகும். உடம்பை வழித்து விடுகிற சிகிச்சை முறையைச் சில கிராமங்களில் காணலாம். அதுவும் நல்ல பலன் தரும். பிசியோதெரபி நிபுணர் சில பயிற்சிகளைச் சொல்லித் தருவார். அதையெல்லாம் ஒழுங்காகச் செய்து வந்தால் முதுகு வலி வராது. இதையெல்லாம் மீறி ஒரு மாதத்துக்கு மேல் முதுகு வலி நீடித்தால் டாக்டரிடம் கேட்க வேண்டும்."

**"முதுகு வலியே வராமலிருக்க என்ன வழி?"**

"நான்கு கால்களில் நடந்து கொண்டிருந்ததை விட்டு இரண்டு கால்களால் மனிதன் நடக்கத் தொடங்கியதுதான் முதுகு வலிக்குக் காரணம். நடந்தது நடந்து விட்டது. இனிமேல் முதுகு வலி வராமலிருக்க வேண்டுமானால் சில எளிய நடவடிக்கைகளை மேற்கொண்டால் போதும்."

"புகை பிடிப்பதால் முதுகெலும்பு வட்டுகளுக்கு ரத்தம் பாய்வது தடைபட்டு அவை சீக்கிரமாகச் சிதைந்து விடுகின்றன. புகை பிடிப்பதைத் தவிர்த்தால் நல்லது. அடுத்து பொருள்களைத் தரையிலிருந்து தூக்கும் போது முதுகை வளைக்கக் கூடாது. முழங்காலை மடித்துப் பொருளை உடம்போடு ஒட்டி வைத்துத் தூக்க வேண்டும்."

"ஆபீசில் உட்கார்ந்து வேலை செய்கிறவர்கள் அடிக்கடி எழுந்து நடக்க வேண்டும். கார்களில் அல்லது பஸ்களில் நீண்ட நேரம் பயணம் செய்கிறவர்களும் அடிக்கடி கீழே யிறங்கிச் சில நிமிஷங்கள் நடக்க வேண்டும்."

"நாற்காலிகளில் முதுகுக்குத் தாங்கலாக ஒரு மெத்தையை வைத்துக் கொள்ள வேண்டும். கைகளை வைத்துக் கொள்ளப் பிடிகள் அவசியமிருக்க வேண்டும்."

"உடம்பு எடை கூடுதலாயிருந்தால் முதுகுக்குச் சுமை அதிகம். எடையைக் குறைக்க வேண்டும். நடத்தல், சைக்கிள் விடுதல், நீந்துதல் ஆகியவை முதுகுத் தசைகளுக்கு வலுவூட்டுகின்றன."

டாக்டருக்கு நன்றி சொல்லிவிட்டு வந்தேன். அவரால் பணச் செலவு குறைந்தது.

**— கே.என். ராமசந்திரன்**

கேது பக்திநெறியிலும் பக்திக் கோட்பாடுகளிலும் மனதைச் செலுத்துபவன். அதனால்தானோ என்னவோ, பொருளை விரும்பும் இந்தக் காலச் சமூகம் கேது குடி கொண் டிருக்கும் கோயிலை கவனிக்காமல் விட்டுவிட்டார்கள்.

மயிலாடுதுறையிலிருந்து பூம்புகார் செல்லும் வழியில் உள்ள சிறிய ஊர் பெரும்பள்ளம். இதை வாணகிரி என்றும் அழைக் கிறார்கள். இந்த ஊரில் மிகச் சிறிய கோயிலாக அமைந்திருக் கிறது நாகநாதசுவாமி கோயில். கோயிலின் குளம் சகலவித மான அசுத்தங்களுடனும் காட்சியளிக்கிறது.

ஆனால் கோயிலினுள் நாகநாத சுவாமிக்கும், ஸ்ரீகேது மூர்த்திக்கும் நேர்த்தியாக 'பளிச்' சென்று அலங்காரம் செய்து வைத்திருக்கிறார்கள். கேது தன் பாவம் போக்க பெரும் பள்ளத்தில் நாகநாதஸ்வாமியைத் தஞ்சம் அடைந்ததாகவும், அவருக்கு பாப விமோசனம் அருளிய ஈஸ்வரன்,





• கேது - மூலவர்

“நீ இங்கேயே இருந்து உன்னால் பாதிக்கப்பட்டவர் களுக்கு வரமருளு வாய்” என அருளிய தாகவும் சொல் கிறார்கள். கோயி லின் வெளிப்ர காரத்தில் கேது வின் - மூலவரின் திருவுருவச் சிலை அமைந்து இருக்கிறது.

“கேதுவைத் தலையோடு பார்ப் பது அபூர்வம். வெறும் பாம்புத் தலையாகத்தான் இருக்கும். இங்கு நாகநாதஸ்வாமியை வணங்கிய நிலையில் கூப்பிய கரங்களுடன் இருக்கிறார். அருள் வேண்டி நிற்கும் இவர் அருள்தரும் மூர்த்தியாக இருப்பதில் ஆச்சரியமில்லை. ஜாத கத்தில் கேது பலவீனம் என்றால் இங்கே வந்து பரிகாரம் செய்து கொள்கிறார்கள். அப்படி வருபவர் கள் நிறைய பேர் இருக்கிறார்கள்” என்கிறார் இக்கோயில் காப்பாளர்.

கேது செந்நிறத்தோன். கலப்பு நிறத்தவனும் கூட. பஞ்ச பூதங்களில் நீராகவும், புளிப்புச்

# நவக்கிரகங்களை துதித்து நலம் பெறுவோம்!



களை பிரியனாகவும் இருப்பவன். கொள்ளு நிவேதனத்திற்கு உரிய பொருள். செவ்வல்லி கேதுக்கு உரிய மலர்.

ஒருவனுடைய ஜாதகத்தில் கேது பலம் பெற்றிருந்தால் இக, பரம் இரண்டிலும் உள்ள சுகத்தை அனுபவிக்கச் செய்வான். சிவபக்தனான கேது அதீதமான தவவேள்வியில் ஈடுபடுத்துபவனாகவும், உலகபந்தங்களிலிருந்து விடுவிப்பவனாகவும் அதேசமயம் சகல சௌபாக்கியங்களையும் தருபவனாகவும் விளங்குவான்.

ராகுவைப் போல கொடுப்பாரில்லை என்பது போல 'கேதுவைப் போல கெடுப்பாரில்லை' என்றும் சொல்லுவார்கள். ஏனெனில் கேது நீச்சமாக, பலவீனனாக இருந்தால் ஒருவனுடைய வாழ்வில் பல தொந்தரவுகளும் ஏற்படும். மனநோய், விபத்துக்கள், தகாத சகவாசம் என பல தொல்லைகளும் ஏற்படும். எனவேதான் அப்படிப்பட்டவர்கள் இந்தப் பரிகார க்ஷேத்திரத்தில் வந்து வழிபட்டால் மோக்ஷமூர்த்தியான கேதுபகவான் அருள்பாலிக்கிறான் என்கிறார்கள்.

அதே போல கேதுவை எண்ணும் போதெல்லாம் சுக்கிரனையும் எண்ணவேண்டும் ஏனெனில் இருவருடைய பலன்களும் ஒன்றாகவே அமைகிறது. ஜாதகத்தில் பாபக்கிரகமாகக் கருதப்படும் கேதுபகவானே பாபவிமோசனனாகவும் இருப்பது விந்தைதான்.

**ந**வக்கிரக நாயகர்கள் எனும் இத்தொடரை நான் எழுத ஆரம்பித்தபிறகு வாசக, வாசகிகளிடமிருந்து நிறைய எதிர்பாராத வரவேற்பு இருந்தது. எத்தனையோ வாசகர்கள் அவரவர்கள் ஊரில் இருக்கும் நவக்கிரகக் கோயில்களைப் பற்றியெல்லாம் எழுதி வழியை 'மேப்'பாகவே போட்டு அனுப்பியிருந்தார்கள். இங்கெல்லாம் வந்து இந்தக் கோயில்களைப் பற்றியெல்லாம் கூட நீங்கள் எழுதவேண்டும் என்று அன்புக்கட்டளை இட்டிருந்தார்கள்.

ஆனால் நாம் எடுத்துக் கொண்ட கோயில்கள் கும்பகோணம், மாயவரம் அருகிலுள்ள இந்த வியப்பிற்குரிய ஒன்பது கோயில்கள்தான். அதனால்தான் மற்ற இடங்களைப் பற்றி எழுத முடியாமல் போனது. தகவல்களை ஆர்வத்தோடு எழுதிய அனைவருக்கும் நன்றி.

அதே போல இந்தத்தொடரை ஆரம்பித்த பிறகு ஏப்ரல், மே-யில் போனபோது எல்லா

## மஞ்சுளா ரமேஷ்

கோயில்களிலும் சொன்ன தகவல், "நீங்கள் நவக்கிரகங்களைப் பற்றி எழுத ஆரம்பித்தபிறகு இந்த வீவுக்கு நிறைய பேர் குடும்பம், குழந்தைகளோடு வந்து போனார்கள். அவர்கள் ஆர்வத்தோடு மற்ற கோயில்கள் இருக்குமிடங்களைப் பற்றியும் விசாரித்துக் கொண்டார்கள்" என்றார்கள். தவிரவும் நவக்கிரக ஸ்தலங்களைத் தரிசிக்க நிறைய டூர் ப்ரோக்ராம்கள் ஏற்பாடு செய்யப்பட்டதையும் கேள்விப்பட்டோம். நவக்கிரக ஸ்தலங்களை ஒரே நாளில் தரிசிக்கும்படி சுற்றுலா துறையில் கூட ஆலோசிக்கப்பட்டு வருகிறது என்பதைக் கேள்விப்படும் போது



மகிழ்ச்சியாகத்தான் இருந்தது.

எப்படியோ, நம் சகோதர சகோதரிகள் கண் கண்ட தெய்வங்களையும், இஷ்டதெய்வங் களையும் வழிபட்டு, நம் வாழ்வில் பெரும்பங்கு வகிக்கும் நவக்கிரகங்களையும் துதித்து அருள்பெற்றால் நல்லதுதானே!

— படங்கள்: ராஜு நாராயண்



நவக்கிரகங்கள் என்றாலே சனிபக வானை மட்டுமே நினைப்பவர்கள் பலர். அடுக்குத்துயரில் அல்லாடுபவர்களை ஜோசியரோ மற்றவர்களோ, நவக்கிரகம் சுற்றுங்கள். எலுமிச்சம் அல்லது எள் விளக்கு ஏற்றுங்கள் என்பார்கள்.

நம் வாழ்க்கையின் ஏற்றத்தாழ்வு, இன்ப, துன்பங்களும் விதிவிளைத்தபடி என்றாலும், சுற்றிவரும் ஒன்பது கிரகங் களும் நம் வாழ்வில் பெரும்பங்கு ஏற்றுள் ளன. நவக்கிரக வழிபாடு, மிக உன்னத மான ஒன்று. வழிமுறைப்படி நவக்கிரக பூஜை செய்பவர்களுக்கு அருட் கடாட்சம் கிடைப்பது உறுதி. நவக்கிரகம் சுற்றும் போது, ஏழு சுற்றுகளை பிரதட்சண மாகவும், மீதி இரண்டு சுற்றுகளை அப்பிரதட்சணமாகவும் சுற்ற வேண்டும் என்று பெரியவர்கள் எழுதிய புத்தக வழி செய்தி.

தினமும் கோவில் சென்று தான் சுற்ற வேண்டும் என்பதில்லை. இடவசதி உள்ளவர் கள் வீட்டிலேயே நவகிரக பூஜை செய்து பலன் காணலாம். அதன் வழிமுறைகளை நன்கு அறிந்து, பூஜையில் ஈடுபடுவது நலம்.

பூஜை அறையைச் சுத்தப்படுத்தி, நீர் கொண்டு மெழுகி நவக்கிரகத்திற்குரிய கோலங் கள் போட்டு, விளக்கேற்றி ஒவ்வொரு கிரகத் திற்கும் உரிய ஸ்தோத்திரம் சொல்லி, கற்பூர ஆரத்தி எடுத்து, உதிரிபுஷ்பங்களை கோலத் தின் நடுவே வைத்து, வணங்கி வந்தால் சகல நன்மைகளுடன் மன நிம்மதியும் கிட்டும். இடவசதியில்லாதவர்கள் அந்தந்த நாளுக்குரிய கோலம் போட்டு, தினமும் பூஜை செய்யலாம்.

ஒவ்வொரு பகவானுக்கும் தனி தினம், மலர், சமித்து, உலோகம், தானியம், நவரத்தினத்தில் ஒவ்வொரு கற்கள், நைவேத்தியம், நிறம் உண்டு. நாம் சமித்து முதலானவற்றிற்கு அலைய வேண்டாம். பொதுவாக ஒரு தட்டில் வெள்ளி, தங்கம், செப்புக் காசுகளை வைத்தும், நவதானி யத்தை ஒரு தட்டில் பொதுவாக வைத்தும், கிடைக்காத மலருக்கு வருத்தப்படாமல் வாசம் மிக்க பூக்களைக் கொண்டும் பூஜை செய்ய லாம். எலுமிச்சம் பழ விளக்கும் ஏற்றலாம். எள் விளக்கு மட்டும் வீட்டில் ஏற்றக் கூடாது என்று பெரியோர் சொல்வார்கள். ஒவ்வொரு பக வானுக்கும் தனித்தனியே விளக்கும் அல்லது பொது கோலத்தில் ஒரு பெரியவிளக்கும் ஏற்ற லாம். நவக்கிரக பூஜைக்கு முன் விநாயர் பூஜையும், நம் விருப்ப தெய்வ பூஜை, துர்கா பூஜை செய்து, நவக்கிரக பூஜை செய்யலாம்.

கோவில்களில் நவக்கிரகம் சுற்றுபவர்கள் கீழே நமஸ்கரிக்கக் கூடாது என்றும், ஒரு நாளில் ஒரே இடத்தில் ஒருமுறைதான் சுற்ற வேண்டும் என்றும் பெரியவர்கள் சொல்லு வார்கள்

## ஸ்ரீ சூரிய பகவான்

நவக்கிரக நடுநாயகன். ஞாயிற்றுக்கிழமை பூஜைக்குரிய நாள். உலகம் வாழ ஒளி தருபவன் அவன். ஆதித்தன், ஆதவன், தானவன், இன்னும் பல பெயர்களுக்குரியவன். ஸ்ரீசூரியபகவானுக் குரிய நிறம்: சிவப்பு. மாணிக்கக்கல், தம்பாக்கு உலோகம், மலர்: செந்தாமரை, தானியம்: கோதுமை, சமித்து:எருக்கு, வாகனம்:தேர், மயில். சர்க்கரைப் பொங்கல் நைவேத்தியம். கோலமிட்டு விளக்கேற்றி,

"சீலமாய் வாழ சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சந்திரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்!"

என்ற ஸ்தோத்திரம் கூறி கற்பூர ஆரத்தி எடுத்து, வாசமிகு உதிரிப் பூக்களை கோலத்தின் நடுவிலோ, விளக்கின் பாதத்திலோ இட்டு வணங்கலாம். வீட்டில் செல்வச் செழிப்பு கூடும்.

## ஸ்ரீ சந்திர பகவான்

இரண்டாவது பகவான். நிறம்: வெள்ளை, நவரத்தினம்: முத்து, உலோகம்: ஈயம், சமித்து: முருக்கு, மலர்: வெள் அலரி, தானியம்: பச்சரிசி முத்து விமான வாகனன். நெய் பாயசம் நைவேத்தியம். சந்திரபகவானுக்குரிய கோல மிட்டு, விளக்கேற்றி,

"எங்கள் குறைகள் எல்லாம் தீர்க்கும்
திங்களே போற்றி திருவருள் தருவாய்
சந்திரா போற்றி சற்குணா போற்றி
சங்கடந் தீர்ப்பாய் சதுரா போற்றி!"

என்ற ஸ்தோத்திரத்துடன் கற்பூர ஆரத்தி எடுத்து, மலர் இட்டு வணங்கி வந்தால், நோயற்ற வாழ்வு வாழலாம்.

## ஸ்ரீ அங்காரக பகவான்

நவநாயகர்களில் மூன்றாவது ஸ்தானத்துக் குரியவன். செவ்வாய்க்கிழமை பூஜைக்குரிய நாள். நிறம்: சிவப்பு, கல்: பவளம், உலோகம்: செம்பு, சமித்து: கருங்காலி மலர்: சண்பகம், தானியம்: துவரை, அன்ன வாகனத்தான். சம்பா சாதம் நைவேத்தியம். கோலமிட்டு விளக்கேற்றி,

"சிறப்புறு மணியே செவ்வாய் தேவே
குறைவில தருள்வாய் குணமுடன் வாழ
மங்கள செவ்வாய் மலரடி போற்றி
அங்காரகனே அவதிகள் நீக்கு!"

என்ற ஸ்லோகம் கூறி கற்பூர ஆரத்தி எடுத்து மணமிகு உதிரிப்பூக்கள் இட்டு வணங்கி வருதலால் நம் சந்தோஷம் கூடும்.

## ஸ்ரீ புத பகவான்

நான்காம் இட அதிபதி. நிறம்: பச்சை, மரகதக்கல், உலோகம்: பித்தளை, சமித்து: நாயுருவி, மலர்: வெண்காந்தள் குதிரை வாக னத்துக்குரியவன். பால் சாதம் நைவேத்தியம். கோலமிட்டு, விளக்கேற்றி,

"இதமுற வாழ இன்னல்கள் நீக்கு
புத பகவானே பொன்னடி போற்றி
பதந்தாள்வாய் பண்ணொலி யானே
உதவியே அருளும் உத்தமா போற்றி!"

என்ற ஸ்தோத்திரம் சொல்லி கற்பூர ஆரத்தி

## தனியாக ஒரு வேலையும் இல்லாமல் போரடிக்கிறதா? இப்படிச் செய்யலாமே:

ஒரு வெள்ளைக் காகிதத்தில் பிரஷ்ஷினால் இங்க்கையோ வாட்டர் கலரையோ தெளித்துவிட்டு அள்ளித் தெளித்த அப்புள்ளிகளின் கோர்வை என்னதான் என்று விரி

முத்து விமான வாகனன். நெய் பாயசம் நைவேத்தியம். சந்திரபகவானுக்குரிய கோல மிட்டு, விளக்கேற்றி,
"எங்கள் குறைகள் எல்லாம் தீர்க்கும்
திங்களே போற்றி திருவருள் தருவாய்
சந்திரா போற்றி சற்குணா போற்றி
சங்கடந் தீர்ப்பாய் சதுரா போற்றி!"
னத்துக்குரியவன். பால் சாதம் நைவேத்தியம். கோலமிட்டு, விளக்கேற்றி,
"இதமுற வாழ இன்னல்கள் நீக்கு
புத பகவானே பொன்னடி போற்றி
பதந்தாள்வாய் பண்ணொலி யானே
உதவியே அருளும் உத்தமா போற்றி!"
என்ற ஸ்தோத்திரம் சொல்லி கற்பூர ஆரத்தி
தனியாக ஒரு வேலையும் இல்லாமல் போரடிக்கிறதா? இப்படிச் செய்யலாமே:
ஒரு வெள்ளைக் காகிதத்தில் பிரஷ்ஷினால் இங்க்கையோ வாட்டர் கலரையோ தெளித்துவிட்டு அள்ளித் தெளித்த அப்புள்ளிகளின் கோர்வை என்னதான் என்று விரி



வாகக் கற்பனையைத் தூண்டுங்கள். மேலும் அப்புள்ளிகளை ஒரு பென்சிலால் இணைத்து உருவம் கொடுங்கள். நமக்கா இவ்வளவு 'கிரியேடிவ் இமாஜினேஷன்' என்று அசந்து போவீர்கள். பொழுது போவதும் தெரியாது. பய னுள்ளதாகவும் பொழுது கழிந்திருக்கும்.

ரயிலில் தனியாக நீண்ட தூரம் பயணம் செய்யும்

# ஸ்ரீராம் பதில்கள்

நண்பர் கூறுவதற்கு பல காரணங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

- ஸ்ரீராமில் நீங்கள் டெபாசிட் செய்யும்போது, அத்தொகை முழுவதும் லாரிகளுக்கு நிதியுதவி செய்யும் தொழிலில் முதலீடு செய்யப்படுகிறது. வழங்கப்படும் கடன்தொகையோ 100% திரும்பப் பெறப்படுகிறது.
- நிர்வாக முறைகளை சீர்தூக்கிப் பார்க்க, டெல்கோ, அசோக் லேலண்ட், ஸிடி யூனியன் வங்கி இவர்களின் பிரதிநிதிகள் நிர்வாக அமைப்பில் (Board of Directors) இடம் பெற்றிருக்கிறார்கள்.
- 20 வருடங்களாக, லாரிகள் வாங்க கடனுதவி வழங்கி வரும் ஸ்ரீராம், ரூ.225 கோடி டெபாசிட்டுகளும், 2,00,000 டெபாசிட்தாரர்களின் நம்பிக்கையையும் பெற்றுள்ளது. உங்களுக்கு சேவை செய்ய நாடெங்கும் கிளைகள் திறந்துள்ளது.

எனவே, நீங்கள் ஸ்ரீராமில் டெபாசிட் செய்யும் போது, உங்கள் பணத்துக்கு அதிகபட்ச



டெபாசிட் செய்ய ஸ்ரீராம்தான் சிறந்த நிறுவனமென என் நண்பர் சொல்கிறாரே?

– க. ரகோத்தமன்,
உடுமலைப்பேட்டை

(மூன்றாம் பகுதி
68 ம் பக்கத்தில்)



காண்பித்து, உதிரி புஷ்பங்களிட்டு வணங்கி வந்தால், நல்ல அறிவு கிட்டும்.

## ஸ்ரீ குரு பகவான்.

ஸ்ரீ குருபகவான் ஐந்தாமிடத்தில் உள்ளவன். நிறம்: மஞ்சள், புஷ்பராகக்கல், சமித்து: அரசு, உலோகம்: பொன், மலர்:முல்லை, தானியம்: கடலை, யானை வாகனத்தான். கோலமிட்டு, விளக்கேற்றி,

"குணமிகு வியாழக் குரு பகவானே
மணமுள வாழ்வு மகிழ்வுடனருள்வாய்
பிரகஸ்பதி வியாழப் பரகுரு நேசா
கிரக தோஷமின்றி கடாட்சித் தருள்வாய்!"

ஸ்தோத்திரம் சொல்லி கற்பூர ஆரத்தியுடன் பகவானை வணங்கிவந்தால் துன்பங்கள் அகலும்.

## ஸ்ரீ சுக்கிர பகவான்

ஆறாமிட அதிபதி. வெள்ளிக்கிழமை பூஜைக் குரிய நாள். நிறம்: வெள்ளை, வைரக்கல்லுக் குரியவன். சமித்து: அத்தி, உலோகம்: வெள்ளி, மலர்: வெண்தாமரை, தானியம்: மொச்சை. கருட வாகனத்துக்குரியவன். வெல்ல சாதம் நைவேத்தியத்திற்கு உகந்தது.

"சுக்கிரமூர்த்தி சுகமிக மீவாய்
வக்கிரமின்றி வரமிக தருவாய்
வெள்ளிச் சுக்கர வித்தக வேந்தே
அள்ளிக் கொடுப்பாய் அடியார்க்கருளே."

மேற்கண்ட ஸ்லோகம் சொல்லி கற்பூர ஆரத்தி எடுத்து சிரத்தையுடன் வணங்கினால் நவமூர்த்திகளின் அருளுடன், நன்மைகள் உண்டாகும்.

## ஸ்ரீ சனி பகவான்

நவக்கிரகங்களிலேயே மிக அதிகமாக பேசப்படும் நாயகன். மனிதனின் காலகட்ட இருப்பு மற்ற கிரகங்களைவிட அதிகம். முதல் சுற்று ஏழரை வருடம் நன்மையும், தீமையும் அதிகம். இரண்டாவது சுற்று பொங்கு சனியின் ஏழரை வருட காலத்தில் நன்மைகள் சற்று அதிகம். ஆனால் முடிவில் பாதசனி சற்று படுத்தும். அப்பொழுதும் ஸ்ரீ சனிபகவானே துணையென்று பூஜித்தால் பலனுண்டு. இதற்கிடையில் இரண்டரை வருடம் அஷ்டமத்துச் சனி என்ற பெயரிலும் சிலரிடம் குடி கொள்வது பகவானின் விருப்பம். கருப்பு நிறம், நீலக்கல்லுக்குரியவன். உலோகம்: இரும்பு, சமித்து: வன்னி, மலர்: கருங்குவளை, தானியம்: எள். காக்கை வாகனம், எள் சாதம் நைவேத்தியம். வீடு மாறும் போது விலகல் சனியாக அருள் புரிபவனும் அவனே. தன்னம்பிக்கையுடன் பூஜை செய்து வந்தால் சகல சோதனைகளையும் வென்று வரலாம்.

"சங்கடம் தீர்க்கும் சனி பகவானே
மங்கலம் பொங்க மனம் வைத்தருள்வாய்
சச்சரவின்றி சாகா நெறியில்
இச்சகம் வாழ இன்னருள் தா! தா!"

என்ற ஸ்லோகம் கூறி வணங்கிவருதல் நலம்.

## நவக்கிரகக் கோலம்




### ஸ்ரீ ராகு பகவான்

ஏழாம் நாயகன். சற்று வக்கிர குணமுடையவன் வழிமுறையுடன் வழிப்பட்டு வந்தால் ராகு தேவனின் அருட்கடாட்சம் நிச்சயம். நிறம்: கறுப்பு, உலோகம்: கருங்கல், மலர்: மந்தாரை, அறுகு சமித்து, கோமேதகக் கல்லுக்குரியவன், ஆடு வாகனம். சித்ரான்ன நைவேதியம்.

ராகு கோலமிட்டு விளக்கேற்றி ஸ்தோத்திரம் கூறி கற்பூர ஆரத்தியெடுத்து உதிரி வாசனை பூக்களை பாதங்களிலிட்டு வணங்கி வந்தால் விரோதிகள் அழிவார்கள்.

"அரவெனும் இராகு ஐயனே போற்றி
இரவா தருள்வாய் கஷ்டங்கள் நீக்கு
ஆக அருள்புரி அனைத்திலும் வெற்றி
ராகுக் கன்னியே ரம்மியா போற்றி!"

### ஸ்ரீ கேது பகவான்

"கேதுத் தேவே கீர்த்தித் திருவே
பாதம் போற்றி பாவம் தீர்ப்பாய்
வாதம் வம்பு வழக்குக ளின்றி
கேதுத் தேவே கேண்மையாய் ரட்சி!"

நமது பூஜைக்குரிய நவக்கிரக பகவான்களில் ஒன்பதாகவும், இறுதியிலும் உள்ளவன் ஸ்ரீ கேது பகவான். நிறம்: சிவப்பு, உலோகம்: துருக்கல், தர்ப்பை சமித்து, மலர்: செவ்வள்ளி, தானியம்: கொள்ளு, வைடூரியத்துக்குரியவன், சிங்க வாகனத்தில் பவனி வருபவன். சித்ரான்ன பிரியன். கேது பகவானுக்குரிய கோலமிட்டு விளக்கேற்றி, ஸ்தோத்திரம் சொல்லி, கற்பூர ஆரத்தியுடன் வணங்கி வந்தால் சுகவாழ்வு கிட்டும்.

நவநாயகர்களின் வழிமுறைகளோடு ஒவ்வொருவரையும் வழிப்பட்டு, தெய்வ சிரத்தையுடன் வணங்கி வந்தால் அவர்களின் அருட்கடாட்சம் கிட்டும். தினமும் பூஜை செய்ய இயலாவிடினும், செவ்வாய், வெள்ளியன்று நவக்கிரகநாயகர்களுக்கு முறைப்படி பூஜை செய்து அருள் பெறுவது நமக்கு மிக மிக நல்லது.

— பரிமளவல்லி சீதாராமன்



## அன்பான வேண்டுகோள்!

மேலே புகைப்படத்தில் உள்ள இக் குழந்தைகள் சிவானந்த குருகுலத்தில் தங்களுடைய பெருத வியாலும், அரசு உதவியாலும் அடைக்கலம் பெற்று அமைதியான முறையில் வளர்கின்றனர். லாவண்யா என்று நாங்கள் பெயரிட்டு அழைக்கும் குழந்தையும் அஞ்சலி என்ற குழந்தையும் செங்கல்பட்டு மருத்துவமனை மற்றும் தாம்பரம் பூங்காவில் ஆதரவற்ற நிலையில் 60 நாள் சிசுவாக கிடைக்கப் பெற்று உங்களுடைய உதவியால் எல்லாப் பயனும் நல்கி தங்களுடைய எதிர் காலத்தை எதிர்நோக்கிக் கொண்டுள்ளனர்.

தீபாவளித் திருநாள் ஒரு தேசீய பண்டிகை. இத்திருநாளில் இக்குருகுலத்திற்கு உதவி செய்து வரும் அனைத்து நன்கொடையாளர்களுக்கும், பொது மக்களுக்கும் எல்லா நன்மைகள் கிடைக்கவும், இத் தீபாவளி திருநாளை கொண்டாடவும் இக்குருகுலக் குழந்தைகளும், முதியோர்களும் பிரார்த் திக்கின்றனர். வசதியுள்ளவர்கள் அவரவர் வசதிக்கேற்ப பண்டிகைகளும், விழாக்களையும் கொண்டாடும் போது ஆதரவற்றோர், கைம்பெண்கள், முதியோர், பார்வையற்றோர், காது கேளாதோர், மனநிலை பாதிக்கப்பட்டோர், ஊனமுற்றோர் மற்றும் பலர் யாரிடம் யாசிப்பது? கலியுகத்தில் இப்படிப்பட்ட வர்களுக்கு உதவி செய்வது ஆண்டவனுக்கு செய்யும் பணி என்று வேதங்களும், பைபிளும், குரானும் மற்ற மதங்களும் பறைசாற்றுகிறது.

சிவானந்த குருகுலத்தில் 250 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இத் தீபாவளி திருநாளை கொண்டாடவும் அவர்களுக்கு புத்தாடைகள், இனிப்புகள், பட்டாசுகள் வாங்க நிதியுதவி தேவைப் படுகிறது. இச் செய்தியை படிக்கும் ஒவ்வொரு அன்பரும் தலா ரூபாய் ஒன்று நன்கொடை அனுப்பி வைத்தால் கூட இப்புனித காரியம் சிறப்பாக நடந்தேறும். மேலும் துணியாகவோ, பட்டாசுகளாகவோ, இனிப்புகளாகவோ மனமுவந்து நன்கொடை கொடுத்து உதவி செய்யுமாறு வேண்டுகிறோம். காசோலை, டிராப்ட் மற்றும் மணியார்டர் மூலமாக நன்கொடை வழங்குமாறும் இவ்வேண்டுகோளை இக் குழந்தைகள் நலனை முன்னிட்டு கோரப்படுகிறது.

சிவானந்த ஆசிரமக் குழந்தைகளுக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமானவரி இலாகா வின் பிரிவு 80G படிவத்தின்படி வருமானவரி விலக்கு சான்றிதழ் உண்டு. நன்கொடையாளர்கள் அனுப்ப வேண்டிய முகவரி :

**நிர்வாகி,**<br>
**"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"**<br>
**நெ. 20, கம்பர் தெரு,**<br>
**கிழக்கு தாம்பரம், சென்னை - 600 059.**<br>
**தொலைபேசி எண் : 2369078, 402354**



• இராஜேஸ்வரி



• ஜெயலட்சுமி



• வசந்தாபாய்



• ராஜேஸ்வரி



• வள்ளி

# இம்மாத இல்லத்தரசி

**பொருள் : மருந்தாகும் உணவு**

**முதல் பரிசு ரூ. 300/-**

## வாய்ப்புண் வயிற்றுப் புண்ணுக்கு மருந்தாகும் உணவு

வாய்ப்புண், உணவை வாயில் போட முடியாமல் எரிச்சல். அப்படியே விழுங்கி வைத்தாலும் வயிற்றில் உள்ள புண்ணால் வயிற்று வலி! இந்த நேரங்களில் எங்கள் பாட்டி கொடுக்கும் உணவே மருந்துவசக்தி உள்ளதாகி விடும். அரிசிக் கஞ்சியும் தொட்டுக் கொள்ள, மணத்தக்காளி கீரை வதக்கலும்தான். மூன்று வேளை குடித்து புண் ஆறி விட்டால் கூட இன்னும் சில வேளைகள் குடிக்கத் தோன்றும். எப்போதாவது இந்தக் கஞ்சியின் சுவைக்கு நாக்கும் மணத்துக்கு மூக்கும் ஏங்கினால் உடனே வயிற்றுவலி என்று சொல்லிப் பாட்டியிடம் இந்தக் கஞ்சியைக் கேட்டு விடுவோம்.

***கஞ்சிக்குத் தேவையான சாமான்கள் :***

புழுங்கலரிசி – 1 கப்,
பாசிப் பருப்பு – ½ கப்,
உரித்த பூண்டு – 50 கிராம்,
தேங்காய் – 1,
வெந்தயம் – 2 டேபிள் ஸ்பூன்,
உப்பு – தேவையான அளவு.

***செய்முறை :***

பாசிப் பருப்பை மணம் வரும் வரை சிவக்க வறுக்கவும். வெந்தயத்தை எண்ணெய் விடாமல் சிவக்க வறுத்து ஒன்றிரண்டாகப் பொடி செய்யவும். உரித்த பூண்டு, உப்பு வெந்தயம், சுத்தம் செய்த அரிசி, பாசிப்பருப்பு எல்லாவற்றையும் சேர்த்து 5 கப் நீர் விட்டுக் குக்கரில் குழைய வேகவிடவும். தேங்காய்ப் பால் எடுத்து வைத்துக் கொள்ளவும். வெந்த சாதத்தை நன்கு குழைத்துக் கடைந்து தேங்காய்ப் பால் சேர்த்து மிதமான சூட்டில் குடித்தால் பசியும், புண்ணும் சேர்ந்து ஆறிவிடும். விருப்பமுள்ளவர்கள் கொட்டைப் பாக்கு அளவு வெண்ணெய் சேர்த்துப் பருகலாம்.

## மணத்தக்காளிக் கீரை வதக்கல்

***தேவையான பொருட்கள் :***

மணத்தக்காளிக் கீரை – 1 கட்டு,

# ஸ்ரீராம் பதில்கள்

டெபாசிட்டை மிக பாதுகாப்பான முறையில் உபயோகப்படுத்துவது, சரக்கு போக்குவரத்து தொழிலில் ஈடுபட்டுள்ள லாரிகளுக்கு நிதி உதவி அளிக்கும் நிறுவனங்களே. ஏனைய நிதிநிறுவனங்கள் பாதுகாப்பு குறைவான வழிகளில் பணத்தை கொடுத்துவிடுகிறார்கள். உதாரணமாக,

**பில் டிஸ்கவுண்டிங்** ஒரு குறுகிய கால வர்த்தகம் என்று நம்பி செய்கிறார்கள். பெரும்பாலும், இது போன்ற நிதி உதவி ஒரு அடைமான பொருள் இல்லாமல் கொடுக்கப்படுவதால், பண நஷ்டம் முற்றிலும் தவிர்க்க முடியாதது.

**'லீஸிங்'னு சொல்ற குத்தகை ஒப்பந்தம்:** இதில ஒரு சில தொழில்கள், பொருள்கள், இடங்களில் மட்டுந்தான் கடனுதவி அளிக்க முடியும். இந்த இரண்டிலுமே, கடன் வாங்கினவங்க திருப்பித்தர தவறினா, அவங்களோட சொத்துக்களை உடனடியா கையகப்படுத்தி விற்பனை செய்றது அவ்வளவு எளிதல்ல.



*ஒரு சந்தேகம், டெபாசிட் செய்றதுக்கு ஏற்ற நிதிநிறுவனத்தை எப்படி தேர்ந்தெடுக்கிறது ?*

*– பாரதி, நெல்லிக்குப்பம்*

ஆனா, லாரிகளுக்கு
தவணைமுறை நிதியுதவி செய்ற
வழிமுறை இருக்கே, அது
ரொம்ப பாதுகாப்பானது.
காரணம் தெரியுமா? லாரிப்
போக்குவரத்து தொழில் ரொக்க
அடிப்படையில் நடைபெறுது.
இது ஒரே ஒரு தொழில்
துறையை மட்டுமே நம்பி
செயல்படுவதில்லை. ஒரே ஒரு
பிராந்தியத்தில மட்டுமே
இயங்குவதும் இல்ல. அதனால,
இது ஆண்டுதோறும் நிலையான
வருமானம் தரக்கூடிய
லாபகரமான தொழிலா இருக்கு.
ஆக, லாரி உரிமையாளரால
தவணைகளை ஒழுங்கா
திருப்பித்தர முடியுது.

எனவே, இந்த மாதிரி
நிறுவனங்களில் டெபாசிட்
செய்யறதுதான் உங்க பணத்துக்கு
பாதுகாப்பு. அதிக
புத்திசாலித்தனமும்கூட.

(இறுதிப் பகுதி 78ம் பக்கத்தில்)



பெரிய வெங்காயம் – 1,
சிறிய மிளகாய் வற்றல் – 1,
தேங்காய்த் துருவல் – ¼ கப்,
குழையாமல் வெந்த பாசிப் பருப்பு – 1/4 கப்,
உப்பு – தேவையான அளவு,
கடுகு, உ. பருப்பு, எண்ணெய் – சிறிது.

*செய்முறை :*

கீரையை அலசிச் சுத்தம் செய்து பொடியாக நறுக்கவும். வெங்காயத்தையும் நறுக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, உ.பருப்பு, மிளகாய் வற்றல் தாளித்துக் கீரையை நீர் தெளித்து 5 நிமிடம் மூடி வேகவிடவும். வெங்காயத்தையும் சேர்த்து வதக்கவும். பிறகு தேங்காய்த் துருவல், உப்பு, பாசிப் பருப்பு சேர்த்து நன்கு வதக்கி இறக்கவும்.

கஞ்சி, கீரையில் உள்ள பூண்டு, பாசிப் பருப்பு, தேங்காய்ப் பால், வெந்தயம் இதோடு கீரையும் சேர்ந்தால் நாற்படையுடன் செல்லும் வீரனாகி விடும் அந்தக் கீரை. வாய்ப்புண், வயிற்றுப் புண் இவற்றைப் புறமுதுகு காட்டி ஓட வைத்துவிடும் போங்கள். நீங்கள் மருந்துக்காக இதை உண்டாலும் அருகில் இருப்பவர்களும் ஆசையோடு வாங்கிச் சாப்பிடும் உணவு இது.

– நா. ராஜேஸ்வரி, மதுரை – 14.

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

## சித்தர் சத்துணவு

கர்ப்பமாகி ஐந்தாவது மாதத்திலிருந்து வாரம் ஒருமுறை (ஞாயிறன்று) கொடுக்கப்படும் "சித்த சத்துணவால்" பெறப்படும் நன்மைகள் :

1. குழந்தை வளர்ச்சிக்கு வேண்டிய சத்துப் பொருட்கள் சேர்வதால் சிசுவுக்கு நன்மை.
2. இடுப்புப் பகுதி வலிமை பெறுவதால் நடப்பு வலி அதிகம் தெரிவதில்லை.
3. இயல்பான முழு அளவிலான பிரசவ வலியை ஏற்படுத்தி குழந்தை மிகச் சீக்கிரம் வெளிவர உதவுகிறது.
4. பிரசவத்திற்குப் பின் எழுந்து நடமாடும் உடலுறுதி உடனே கிடைக்கிறது.
5. கர்ப்பப்பை மற்றும் வயிறு மிக வேகமாகச் சுருங்கி இயல்பு நிலையை அடைய வைக்கிறது.
6. தாய்ப்பால் சுரப்பது தடைபடுவதே இல்லை. இது மிக மிக முக்கியம்.
7. தாய்க்கும் குழந்தைக்கும் சிறந்த நோய் எதிர்ப்புச் சக்தியை வழங்குகிறது.

***தேவையான மருந்துகள் :***
(நாட்டு மருந்துக் கடைகளில் கிடைக்கும்)



லாக்கரில் வெள்ளிச் சாமான்களை வைப்பவர்கள், மெல்லிய ப்ளைவுட் பெட்டி செய்து, அதில் வைத்தால், பாத்திரம் கறுக்காது. இரும்பு பீரோவில் வைப்பவர்களுக்கும் இது பொருந்தும்.

- ஆர். பார்வதி

மஞ்சள் - 25 கிராம்,
சுக்கு – 50 கிராம்,
பூண்டு – 100 கிராம்,
ஓமம் – 150 கிராம்,
கடுகு – 100 கிராம்,
மிளகு – 25 கிராம்,
காயம் – 10 கிராம்,
திப்பிலி – 10 கிராம்,
சதகுப்பை - 10 கிராம்,
சாளியல் – 10 கிராம்,
சன்னாயிறு - 10 கிராம்,
நறுக்குமூலம் – 10 கிராம்,
அக்கறா – 5 கிராம்,
அரத்தை – 5 கிராம்.

அக்கறா, அறத்தை இரண்டும் இடிபடா. அவை கடினமானவை. அவற்றை ஒருநாள் நீரில் ஊறப் போட்டு வைத்தால் எளிதில் உடைக்கலாம். மேற்கண்ட மருந்துப் பொருட்களை (பூண்டு தவிர) மிக மிகச் சன்னமாக – கவனம் மிக மிகச் சன்னமாக மாவாக்கி ஒரு கண்ணாடிப் பாட்டிலில் வைத்துக் கொள்க. மகப்பேறு வாய்த்த மங்கையர் இம்மாவை கருப்புக்கட்டி அல்லது வெல்லத்தில் நல்லெண்ணெய் விட்டுப் பிசைந்து கையுருண்டை அளவு உண்டு வர வேண்டும். இதுவே மருந்து. இது உணவாகும் விந்தையை இனிக் காண்போம்.

*பயன்படுத்தப்படும் உணவுப் பொருட்கள் :*
மருந்து மாவு – 4 டேபிள் ஸ்பூன்,
தேங்காய் – ½ மூடி,
வெங்காயம் – 100 கிராம்,
பூண்டு – 100 கிராம் (உரித்தது)
இஞ்சி – 1 துண்டு,
மஞ்சள் – ½ துண்டு,
நல்லெண்ணெய் - 100 மில்லி,
சீரகம் – விரற்பிடி அளவு,
உப்பு – தேவையான அளவு,
முட்டை – 5 அல்லது உலர்ந்த மீன் – வஞ்சிரம் 150 கிராம்.

*செய்முறை :*
தேங்காய், வெங்காயம், இஞ்சி, மஞ்சள், சீரகம் ஆகியவற்றை விழுது போல் அரைத்து எடுக்கவும். மருந்து மாவையும் மசாலாவையும் ஒரு லிட்டர் நீரில் கரைத்து பூண்டு அரிசியை (பல்லை) உள்ளே போட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சவும். உப்பிட்டு ருசி பார்த்துக் கொள்ளவும். நன்றாக வற்றியபின் சிறு தீயில் வைத்து முட்டைகளை ஒவ்வொன்றாக உடைத்துக் குழம்பினுள் ஊற்றவும். அவை தனித்தனியாக வெந்து கெட்டிப்படும். ஆகவே கிண்டக் கூடாது. இப்படி 5 நிமிடம் வேகவிட்டால் போதும். பிறகு நல்லெண்ணெயை விட்டு ஒரு கொதி வந்தவுடன் இறக்கவும். அப்படியே மூடிவைத்து அரை மணி நேரம் கழித்துப் பரிமாறவும். (அசைவ உணவுக்கார அன்பர்கள் உப்பிட்ட உலர்ந்த மீனை முட்டைக்குப் பதிலாகப் பயன்படுத்தலாம். வேகும் வரை கொதிக்க விடுவது அவசியம்.) ஆறும்முன் கடசகட இந்தக் குழம்பை நன்றாகக் குழைந்த சாதத்துடன் கலந்து சாப்பிட்டால் மணமாகவும் ருசியாகவும் இருக்கும். பிரசவம் ஆன பின்பும் தேவையான காலம் தொடர்ந்து சாப்பிட்டு பால் சுரப்பை நன்காக்கிக் கொள்ளலாம்.

– இராஜேஸ்வரி கோபாலகிருஷ்ணன்,
கோவில்பட்டி.

**மூன்றாம் பரிசு ரூ. 100/-**

## இஞ்சிப் பொலவு

*தேவையான பொருட்கள் :*
வடித்த சாதம் – 4 கப்,
இஞ்சி - 1 துண்டு,
புளி – எலுமிச்சை அளவு,
க. பருப்பு – 2 டேபிள் ஸ்பூன்,
மிளகாய் வற்றல் – 6,
மஞ்சள் – சிறிது,
பெருங்காயம் – சிறிது,
வெல்லம் – 20 கிராம்,
க. எண்ணெய் – 4 டேபிள் ஸ்பூன்,
உ. பருப்பு, கடுகு, கறிவேப்பிலை – தாளிக்க,
உப்பு – தேவையான அளவு.

*செய்முறை :*
அடுப்பில் வாணலி வைத்து சிறிது

# சரவணா ஸ்டோர்ஸ்

## உயர்தரமான தங்க நகைகள்
## வெள்ளி பாத்திரங்களுக்கு

# செய்கூலி இல்லை



15.11.95
வரை

**பட்டு புடவைகளுக்கு**
**10% தள்ளுபடி**

ஜவுளிகள்,
ரெடிமேட் ஆடைகள்,
பாத்திரங்கள்,
T.V., டேப்ரிக்கார்டர்,
ஃப்ரிட்ஜ்,
வாஷிங் மெஷின்,
ஃபேன், கிரைண்டர்,
மிக்ஸி, சூட்கேஸ்

**சரவணா**
**ஸ்டோர்ஸ்**

ரெங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை 600 017.

ஞாயிறு விற்பனை உண்டு.

L.R.Swami P/P

எண்ணெய் விட்டு அதில் (இஞ்சி சுத்தம் செய்து அரிந்து) அதில் வதக்கி எடுத்து, பிறகு கடலை பருப்பு, மிளகாய் வற்றல் வறுத்துக் கொள்ளவும். இவைகளை விழுதாக அரைத்து, அதில் புளி, உப்பு தண்ணீர் ஊற்றிப் பிசைந்து விழுதில் கரைத்து வெல்லம், மஞ்சள், பெருங் காயம் போடவும். பிறகு வாணலியை அடுப்பில் வைத்து எண்ணெயை ஊற்றி கடுகு, உ. பருப்பு, கறிவேப்பிலை தாளித்து கரைத்து வைத்து இருக்கும் கலவையை அதில் ஊற்றி நன்றாகக் கொதித்தவுடன் இறக்கி வைக்கவும்.

வடித்த சாதத்தில் ஊற்றிக் கிளறவும். இது சாப்பிட நன்றாக இருக்கும். சுரம், சளி, தலை வலி, ஜீரணம் ஆகாமல் இருந்தாலும் சாப்பிட் டால் இவைகளை போக்கும்.

இந்தக் குழம்பை தனியாக தோசைக்கும் தொட்டுக் கொள்ளலாம். வாய்க் கசப்பும் தீரும்.

– எம். வல்லி, போளூர் –3.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## குடிமக்கள் குடிக்கும் காப்பி : (இருவருக்கு உண்டான அளவு)

***தேவையான பொருட்கள் :***

சுக்கு அல்லது இஞ்சி (சீரணமாக்கி) – 1 துண்டு,
தனியா (சாராய வெறிபோக்குவது) – 1 டீஸ்பூன்,
சோம்பு அல்லது பெருஞ்சீரகம் (சீரணமாக்கி) – ¼ டீஸ்பூன்,
மிளகு (நச்சகற்றி) – 4 எண்ணிக்கை,
ஏலக்காய் (பசித் தீ தூண்டி வாந்தி அடக்கி) – 1 அல்லது 2 எண்ணிக்கை,
பால் (புரதச் சத்து உள்ளது) - தேவையான அளவு,
மஞ்சள் (கல்லீரல் உரமாக்கி) – 1 சிட்டிகை,
தண்ணீர் – 2 டம்ளர்,
வெல்லம் தூள் (பித்தத்தைப் போக்கும்) – தேவையான அளவு.

***செய்முறை :***

முதலில் இஞ்சி, அல்லது சுக்கை நன்கு இடித்துக் கொண்டு, தனியா, சோம்பு, மிளகு, ஏலக்காய் இவைகளை நன்கு பொடித்து 2 டம்ளர் தண்ணீர் விட்டு, மஞ்சள் பொடி சேர்த்து ½ டம்ளராக வற்றியபின் பால், வெல் லம், சேர்த்து வடிகட்டி காலை, மாலை அருந்த லாம். இந்தக் காப்பி சுறுசுறுப்பு தருவதோடு பசித் தீயைத் தூண்டும். மேலும் குடிப்பிரியர் களுக்கு, மூளை நரம்பைப் பலப்படுத்தி, கல்லீரலை நல்ல நிலையில் வைத்து, குடியைச் சிறிது சிறிதாக மறக்கச் செய்யும்.

## புகையிலை நஞ்சு மாற்றும் அகத்திக் கீரை சூப் : (ஒருவருக்கு உண்டான அளவு)

அகத்திக் கீரை (கிருமிநாசினி, புகையிலை நஞ்சு மாற்றி) – 1 கைப்பிடி அளவு,
தண்ணீர் – 2 டம்ளர்,
சீரகம் (சீரணமாக்கி), – 1 ஸ்பூன்,
பூண்டு (நஞ்சு நீக்கி) – 2 பல்,

***செய்முறை :***

முதலில் அகத்திக் கீரையை நன்கு கழுவி, காம்பு நீக்கி, திரும்பவும் கழுவி, இலையை மட்டும் எடுத்துத் தண்ணீருடன் கலந்து கொதிக்க வைத்து 1/2 டம்ளராக வற்றியபின், சீரகத்தையும், பூண்டையும் நசுக்கிப் போட்டு, ஒரு கொதி வந்ததும் இறக்கி வடிகட்டி, சிறி தளவு உப்பு சேர்த்து காலையில் அருந்த மலப் பூச்சிகள் வெளியேறும். புகையிலை அதிகம் பயன்படுத்துபவர்க்கு நஞ்சு முறிவாக செயல் படுவதோடு, மலச்சிக்கலையும் தவிர்க்கும்.

வடிகட்டின சக்கையை வறுத்து, 1 டீஸ்பூன் உளுத்தம் பருப்பு, 1/4 டீஸ்பூன் மிளகு சேர்த்து வதக்கி, பின் தேவையான உப்பு, பெருங்காயம், புளி சேர்த்து அரைத்து துவையலாகவும் பயன் படுத்த, வயிற்றில் சீரண சக்தியை உண்டு பண்ணும்.



**கலர் சேர்த்துச் செய்ய வேண்டிய ஸ்வீட் எதுவாகினும் கலரை ஒரு ஸ்பூன் தண்ணீரில் கலந்து சேர்க்க, கலர் நன்றாகக் கரைந்து எல்லா இடமும் ஒன்றுபோல் இருக்கும்.**

**– பூர்ணிமா**




உங்களைப் போன்ற, இன்றைய நவீன உலகத்தின் நவநாகரிகப் பெண்களுக்கென்றே வந்துள்ளது லக்மே அல்ட்ராஷியர். முக மேக்-அப்பில் இதுவரை கண்டிராத புதுமை.

மற்ற லிக்விட் மேக்- அப்களிலிருந்து தனித்து விளங்கும் அல்ட்ராஷியர், அறவே பிசுபிசுப்பற்றது. எனவே இது பளபளப்பாகவோ, திட்டு திட்டாகவோ தோன்றாமல், உங்கள் முகத்திற்கு ஒரே சீரான, இயல்பான பொலிவைத் தருகிறது. உங்கள் இயற்கையான அழகை மேலும் மிளிரச் செய்து, பார்ப்பவர்களுக்கு பிரமிப்பூட்டுகிறது. பார்வைக்குத் தெரியாத இந்த மேக்-அப்.

இதன் விசேஷ ஃபார்முலா சருமத்தின் நுண்துளைகளை அடைப்பதில்லை. உங்கள் முகமும் கசகசப்போ அல்லது எவ்வித இறுக்கமோ இன்றி நாள்முழுதும் புத்துணர்வுடன் விளங்குகிறது. அல்ட்ராஷியர் உங்கள் முகத்தழகை பாதுகாக்கவும் செய்கிறது. இதில் உள்ள டி-பன்தேனால் என்ற விசேஷப் பொருள், உங்கள் முகச் சருமத்திற்கு புதுச் செழுமையை அளிக்கிறது. இதிலுள்ள மாய்ஸ்ச்சரைஸர் உங்கள் முகத்தை மென்மையாகவும், மிருதுவாகவும் திகழச் செய்கிறது.

உங்கள் முக நிறத்திற்கு பொருத்தமுள்ள ஆறு வெவ்வேறு சாயல்களில் அல்ட்ராஷியர் கிடைக்கிறது. நீங்கள் வாங்கும்போது, அல்ட்ரா கலர் காஸ்மெடிக்ஸ் ஷேட் கார்டைக் கேட்டு வாங்கவும். உங்களுக்கு உகந்த சாயலைத் தேர்ந்தெடுக்க இது உதவும்.

சற்றே அல்ட்ராஷியர் தடவிப் பாருங்கள், பார்ப்பவர் பிரமிப்படைவதை.




LAKMÉ
ULTRASHEER
NATURAL MAKE-UP

**மனம் உணர்ந்திடும் மாற்றத்தை.**

இலவச அழகு வழிமுறை மற்றும் மேக்-அப் உத்திகளுக்காக எழுத வேண்டிய முகவரி: அழகு ஆலோசகர், த.பெ. எண். 6087 மும்பை-400 005

Trikaya Grey. LL. 11.95. TAM

## உடல் தேற்றும் அன்னப்பொடி :

பொட்டுக் கடலை (புரதச் சத்து) – 800 கிராம்,
சுக்கு (பசித் தீ தூண்டி) – 100 கிராம்,
மிளகு (நஞ்சு போக்கி) – 100 கிராம்,
சீரகம் (சீரணமாக்கி) – 100 கிராம்,
ஓமம் (இசிவகற்றி) – 100 கிராம்,
பூண்டு (மிகு கொழுப்பகற்றி) – 100 கிராம்,
சோம்பு (சீரணம் உண்டாக்கி) – 100 கிராம்,
பெருங்காயம் (வாயு அகற்றி) – 25 கிராம்,
கருவேப்பிலை (அயச்சத்து சேர்ந்தது) – 100 கிராம்,
உப்பு – தேவையான அளவு.

*செய்முறை :*

மேற்கண்ட சரக்குகள் எல்லாவற்றையும் சுத்தப்படுத்தி, பூண்டை தோல் நீக்கி, இளம் வறுப்பாக வறுத்து (தனித்தனியாக) மிக்ஸியில் பொடித்துக் கொள்ளவும், உணவு உண்ணும் போது முதல் சாதத்துடன் 1 ஸ்பூன் அன்னப் பொடி கலந்து நெய்யுடன் சேர்த்து உண்டால் உணவு எளிதில் சீரணமாவதுடன் உடலையும் தேற்றும். குழந்தைகளுக்கு 2 வயதிற்கு மேல் தகுந்த உணவாகும்.

– டாக்டர். ப. லலிதாபாய் பழநிசாமி,
பி.ஐ.எம்., சென்னை – 101.

### ஆறுதல் பரிசு ரூ. 50/-

## அம்ருத பொடி :

*தேவையான பொருட்கள் :*
ஓமம் – ½ கப்,
தனியா – 1 கப்,
மிளகு – ¼ கப்,
சீரகம் – 1 கப்,
சுக்கு – ஒன்றிரண்டாகத் தட்டி எடுத்தது – ¼ கப்,
நறுக்குமூலம் (அ) கண்டதிப்பிலி – 1 கப் (ஒடித்துக் கொள்ளவும்),
துவரம் பருப்பு – ½ கப்,
காய்ந்த கறிவேப்பிலை நொறுக்கியது – ½ கப்,
பெருங்காயம் : 1 கட்டி பொடித்துக் கொள்ளவும்.

*செய்முறை :*

மேலே கூறிய பொருள்களை வெறும் வாணலியில் தனித்தனியாக வறுத்து மிக்சியில் திரித்து, சலிக்க வேண்டும். காயப் பவுடரையும் கலந்து கொள்ளவும். ஒரு பாட்டிலில் வைத்துக் கொண்டால் எந்த பதார்த்தமும் செய்து கொள்ளலாம்.

1. வடித்த சாதத்துடன் 1 ஸ்பூன் நெய் ஊற்றி, 2 ஸ்பூன் பொடி, சிறிது உப்புத் தூள் சேர்த்துப் பிசைந்து சாப்பிடலாம். வாய்வுத் தொல்லை, அஜீர்ணத்துக்கு நல்லது.

2. பழம் புளி ஒரு கோலி அளவு எடுத்து வெயிலில் உலர்த்தினால் காய்ந்து போகும். இந்தப் புளியைப் பொடித்துக் கொண்டு உப்பு, மருந்துப் பொடி சேர்த்து 2 டம்ளர் தண்ணீர் ஊற்றி கொதிக்க விட்டால் ரசம் ரெடி. பூண்டு உரித்து தட்டிப் போடலாம். நெய்யில் சீரகம் தாளித்தால் ரசம் வயிற்றுப் பொருமலுக்கு நல்லது. நல்ல பசி எடுக்கும்.

3. வயிறு உபாதையாக இருந்தால் இந்த மருந்துப் பொடியை புளிக்காத மோரில் ஒரு ஸ்பூன் போட்டு, கொஞ்சம் உப்பு சேர்த்து குடிக்கலாம்.

4. பத்தியக் குழம்பு : பூண்டுப் பற்களை உதிர்த்துக் கொண்டு தோலை உரித்து நெய்யில் வறுத்துக் கொண்டு, தக்காளிப் பழம் 2, 3 அரிந்து போட்டு, (புளியில்லாமல்) 1 டம்ளர் தண்ணீர் ஊற்றி உப்பு, மருந்துப் பொடி 3 ஸ்பூன் போட்டு நன்கு கொதித்தவுடன் (கெட்டியாகும் வரை) இறக்கிக் கொண்டு சாதத்தோடு பிசைந்து சாப்பிடலாம்.

5. வற்றல் குழம்பு : புளி கொஞ்சம், உப்பு தேவைக்கேற்ப ஒரு துண்டு வெல்லம், மருந்துப் பொடி 4 ஸ்பூன், சுண்டைக்காய் வற்றல் 5,6. சுண்டைக்காய் வற்றலை வறுத்துக் கொண்டு அதோடு புளி, உப்பு, வெல்லம் வைத்து அரைத்துக் கொள்ளவும். மருந்துப் பொடியையும் சேர்த்து, வாணலியில் கொதிக்க விடவும். கெட்டியானவுடன் இறக்கி, கடுகு, கறிவேப்பிலை தாளித்துச் சாப்பிடலாம்.

– எஸ். ஜெயலட்சுமி சம்பத்,
ஸ்ரீவைகுண்டம்.



வாழைக்காய், உருளைக் கிழங்கு போன்றவற்றில் 'சிப்ஸ்' செய்யும் போது கொஞ்சம், கொஞ்சமாக போட்டு வறுத்து எடுக்காமல் எண்ணெய் தெரியாத அளவு நிறைய போட்டு வறுத்து எடுக்க நல்ல மொறு, மொறுப்பாக இருக்கும். இல்லையெனில் ஒருதரம் பாதி வேக்காட்டில் எடுத்து விட்டு, மறுபடி ஐந்து நிமிடம் கழித்து போட்டு எடுக்க நன்றாக இருக்கும்.

– பூர்ணிமா

டெல்ஃபின் சிட் பண்ட்ஸ் (பி) லிமிடெட்

# பெண்கள் மட்டும்

விஜயதசமி விழா

2வது ஆண்டு நிறைவு விழா

From **Sept 25th** Onwards.



## CHIT GROUPS

| | | | | |
|---|---|---|---|---|
| 400 | x | 25 | = | 10000 |
| 500 | x | 20 | = | 10000 |
| 500 | x | 30 | = | 15000 |
| 1000 | x | 25 | = | 25000 |
| 625 | x | 40 | = | 25000 |
| 2000 | x | 25 | = | 50000 |

PSO Nos. 860/95 861/95 862/95 863/95 864/95 865/95

ஏராளமான பரிசுகள் காத்துக் கொண்டிருக்கிறது.

டெல்ஃபின் சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

ஜி3, "பிரகதீஸ்வரா" அபார்ட்மென்ட்ஸ்
51, முதல் மெயின் ரோடு, சி.ஐ.டி. நகர்
நந்தனம், சென்னை - 600 035.
போன் : 45 41 88.

---

வழுக்கையா ! கவலை வேண்டாம் !
உபயோகியுங்கள்

# ஹேரோ

மும்முரமாய் முடிவளர்க்கும் மூலிகைத்தைலம்




வழுக்கைக்கென தயாரான
ஒரே விசேஷ மூலிகைத்தைலம்

முடி உதிராது ● நன்கு வளரும் ● நரை குறையும் ● கண்ணுக்கு நல்லது ● பக்க விளைவு அற்றது

அறிமுகம் !

## ஹேரோ 23

அலைகடல் கூந்தலின் ரகசியம்
தலைகளில் படைக்கும் காவியம்




அடர்த்தியான கூந்தலுக்கு ஹேரோ23

கருமையான கூந்தலுக்கு ஹேரோ23

முடி உதிர்வை தடுத்திட ஹேரோ23

இளநரையை போக்கிட ஹேரோ23

அனைவரும் விரும்புவது ஹேரோ23

Marketed by
GROW WELL MARKKETING PVT. LTD.,
10, Valluvar nagar, Annadhanapatty,
SALEM 636 002 PHONE: 448565

STOCKIST SOLICITED FOR UNREPRESENTED AREAS

பிரபல மருந்து & ஜெனரல் ஸ்டோர்களில் கிடைக்கும்.

# லல்லு ஜானு எனக் கூப்பிடாதீர்கள்...

"ஒலி, உச்சரிப்பு, சப்தம், நாதம் இவைகளே உலகை ஆட்சி செய்கின்றன. அதன் சக்தியை முன்னோர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். வேதத்தை மிகச் சரியான உச்சரிப்போடு சொல்லப்படுகின்ற மந்திரம் எனலாம். 'ஓம்' என்பதன் மகத்துவம் சொல்லில் அடங்காது. இவையெல்லாம் மிகவுயர்ந்த நிலை. நம்மைப் போன்ற நிலையில் இருப்பவர்களுக்குப் பெரியவர்கள் சொல்லுவார்கள், 'கெடுதல் வார்த்தைகளைப் பேசாதே!' என்று. எப்போதும் நல்ல வார்த்தைகளைச் சொல்ல வேண்டுமென்றுதான் கடவுள் பெயரை தன் குழந்தைகளுக்கு வைத்தார்கள். ஆனால் அதைச் சுருக்கி சுப்புணி, (சுப்ரமணியம்) கிச்சா (கிருஷ்ணசாமி) என்றெல்லாம் கூப்பிடுகிறோம். அது தவிர ஜில்லு, டிட்டி எனப் பெயர்கள்! 'நாசமா போ!' 'தொலைந்து போ' என்றெல்லாம் சொல்லவே கூடாது. இவைகளுக்கெல்லாம் பலிக்கும் சக்தி உண்டு..."

இப்படியெல்லாம் சொல்கிறார் 'நேமாலாஜி' (Namaelogy) எனும் துறையில் டாக்டர் பட்டம் பெற்றுள்ள சி. வி. ராஜராஜன். இவர் நாம் கூப்பிடும் பெயர்கள் மூலமாக நம் தலையெழுத்தையே மாற்றலாம் என்பதில் மிகத் தீவிர நம்பிக்கையுடன் அடித்துச் சொல்கிறார். தவிரவும் குழந்தைகளுக்கு வைக்கும் பெயர்களும் அவர்கள் பிறந்த தேதி எண்ணுக்குத் தகுந்தாற்போல இருக்க வேண்டும் என்கிறார். அவர் சொல்லும் சுவையான தகவல்கள் –

பொதுவாக இந்துக்கள் நட்சத்திரங்களுக்குரிய அட்சர எழுத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, பெயர் சூட்டுகிறார்கள். அது எந்த வகையில் சரி அல்லது சரியில்லை?

பிறந்த நட்சத்திரத்திற்கு ஒப்ப மனமும், உடலும் அமைந்திருக்கிறது என்ற சோதிட சாத்திரத்தின் அடிப்படையில் ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும், 4 எழுத்துக்கள் முதல் எழுத்துக்களாக கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனினும் அவ்வாறு இந்துக்கள் அனைவருமே பெயர்களை வைத்துக் கொண்டால் அவர்கள் அனைவரின் பெயர்களுமே 108 முதல் எழுத்துக்களுடன் அமைந்து விடும். கோடிக்கணக்கான இந்துக்கள் வாழும் இந்நாட்டில், அவ்வாறு அமைப்பது சாத்தியமில்லை.



* ராஜராஜன்

பெயரின் முதல் எழுத்து என்பதைத் தலை எழுத்து என்றும் எடுத்துக் கொள்ளலாம். சில பெயர்கள் முற்றிலும் சரியில்லை என்னும் போது, முழுப் பெயரில் கவனம் செலுத்தி அதைச் சரியாக அமைத்து, சகல சௌபாக்கியங்களையும் அடைய முடியும். பெயர் ஒருவருக்குச் சரியாக அமைந்து விட்டால் அல்லது சரியாக அமைத்துக் கொண்டு விட்டால், அவரது மனம், மொழி, மெய், வாக்கு இவை அனைத்துமே சீரான நிலையில் இயங்கி, வாழ்வில் எல்லா வளங்களையும் பெற முடியும்.

பெயரே மந்திரம். மந்திரங்கள் எனக் குறிப்பிடும் போது, மந்திரங்களை எழுதி வைத்துக் கொண்டு கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தால் பயனேது. அவை சரியாக உச்சரிக்கப்பட வேண்டும். காஞ்சி மாமுனி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் 'மந்திரங்களை சரியாக உச்சாடனம் செய்யாவிடில் பலன் கிடைக்காது' என்று கூறியிருந்ததை ஒருமுறை பத்திரிகையில் படித்தேன். (பெயரே மந்திரம் என்ற என்னுடைய கருத்துக்கொப்ப, மந்திரமாகிய பெயரைச் சரியாக உச்சரித்தால் அல்லது சரியாகத் தன்னாலும் மற்றவர்களாலும் உச்சரிக்கப்

# ஸ்ரீராம் பதில்கள்

இப்போ சில நிறுவனங்கள்ல 24%, 30% வட்டி தர்றதா சொல்றாங்களே. அவங்ககிட்ட பணத்தை டெபாசிட் செய்யலாமா?

— எம். மூர்த்தி, மதுரை.



24%, 30%, 35% வட்டி கொடுக்கிறதா சில நிறுவனங்கள் சொன்னாகூட, அந்த அளவுக்கு அதிகபட்ச வட்டியை தொடர்ந்து அவங்களால கொடுக்க முடியுமாங்கிறத நீங்க யோசிச்சு பாக்கணும். இருபது வருஷத்துக்கு முன்னால அப்படிச் சொன்னவங்கெல்லாம் இப்ப திவாலாகி இருக்கிறதைப் பார்க்க முடியுது. உதாரணமா, வங்காளத்தில் சஞ்சய்தா, தமிழ்நாட்டில் உம்மிடி பேங்க்கர்ஸ், இந்து ஃபைனான்ஸ், ஸுகேஸன், ஜெயசக்தி ஃபைனான்ஸ், கேரளாவில் ஸமரியாஸ், லாபெல்லா, கர்னாடகாவில் மன்ஜோக். அந்த மாதிரி கம்பெனியில டெபாசிட் செஞ்சவங்க பணத்தை பறிகொடுத்துட்டு தவிக்கிறத இப்பவும் நாம பாக்கிறோம். இப்படி எத்தனையோ சொல்லலாம். நீங்க பாடுபட்டு சேர்த்த பணத்தை பாழாக்கிடக் கூடாது. உங்க பணத்துக்கு பாதுகாப்பும், வட்டிக்கு

படக்கூடிய பெயராக அமைத்துக் கொண்டால், வாழ்வில் எல்லா வளங்களையும் பெறலாம் என்பதே எனது கொள்கை.

காஞ்சி மாமுனிவரின் திருவாக்கு என் ஆராய்ச்சியில் ஒரு திருப்புமுனையை உருவாக்கிற்று. மந்திரமாகிய பெயரைச் சரியாக அமைத்துக் கொண்டாலே போதுமானது. நட்சத்திர நாம அட்சர எழுத்துக்களின் படி, பெயரின் முதல் எழுத்தை அமைத்துக் கொண்டு, சரியான வகையில் பெயர்களை அமைத்துக் கொள்வதே முற்றிலும் சிறந்த வழியாகும்.

**பெயரில் தத்துவத்தின் அடிப்படை என்ன? எண் இயல் மட்டும்தானா?**

பெயரில் தத்துவத்தின் அடிப்படையே சப்தம் என்றழைக்கப்படும் ஒலிதான். நாதம் என்றும் கூறலாம். ஓம் எனும் ப்ரணவம் கூட ஒலி வடிவம்தானே! எனவே அனைத்திற்கும் அடிப்படையே நாதம் எனும் ஒலிதான்.

**பெயருக்கு மட்டும் என்ன தனி முக்கியத்துவம் வந்து விடப் போகிறது? அவர்கள் பிறந்த தேதி, மாதம், வருஷம் மற்றும் லக்னம், ராசி, நட்சத்திரம் என்று எவ்வளவோ இருக்கின்றனவே?**

எல்லாமும் இருக்கட்டும். ஒருவரைக் குறிப்பிடும் போது பெயரை வைத்து மட்டும்தான் பேசுகிறோம்.

**மனம் போல் வாழ்வு, மனம் போல் மாங்கல்யம் என்றெல்லாம் கூறுகிறோமே அவ்வகையில் மனதை ஒருநிலைப்படுத்தி நல்ல எண்ணங்கள், நற்சிந்தனைகள், நல்ல செயல்கள் என்று நம் வாழ்வை அமைத்துக் கொண்டால் போயிற்று. ஏன் பெயரை மாற்றிக் கொள்ள வேண்டும்?**

பெயர் சரியாக அமையாவிடில், மன, மொழி, மெய், வாக்கு இவையனைத்தும் ஒருங்கிணைந்து செயல்பட முடியாது. எனது கண்டுபிடிப்பே அதுதானே! ஏனெனில் பிறந்த நாள் எண்கள் என்பவை உடலையும், உயிரையும் ஒருங்கே குறிக்கும் எண்களானும், அவ்விரு எண்களுக்கும் ஒத்ததாக அமையப் பெறாத பெயரினால் மன, மொழி, மெய் (உடல் மற்றும் செயலாக்கம்) வாக்கு இவைகளுக்குள் ஒற்றுமை வரப் போவதில்லை. எனவே வழங்கு பெயர் சரியாக அமைந்தால்தான் மன ஒருமைப்பாடு, நல்ல எண்ணங்கள், நல்ல சிந்தனைகள், நல்ல செயல்கள் நல்லோர் கூட்டுறவு என்பனவெல்லாம் சாத்தியமாகும்.

**பரிகாரங்களையும் செய்து கொண்டு பெயரையும் மாற்றி அமைத்துக் கொண்டால் பலன் அதிகம் கிடைக்குமல்லவா?**

பரிகாரங்கள் எனும் போது அவை பூஜை, புனஸ்காரங்கள், தீர்த்த யாத்திரை என்பனவாகும். பூஜைகள் என்னும் போது அவைகளுக்கான வழிமுறைகள், மந்திரங்கள் மற்றும் பூஜைப் பொருட்கள் இவையனைத்தும் மிகவும் சரியாகவும், தூய்மையானவையாகவும் இருத்தல் வேண்டும். மந்திரங்களைச் சரியான

# BINNY
# சில்க்ஸ்

நெஞ்சில் நிலைக்கும்
நிமிடங்களில்
எல்லாம்
''பின்னி''
இருக்கும்
உங்களுடன்.



அன்று உங்கள் அழகுப் புன்னகை
பின்னி பட்டுப் புடவையுடன்.



இன்று உங்கள் மகளின் புன்னகை
பின்னி பட்டுப் புடவையுடன்.

**BINNY**
உங்கள் புதிய கனவுகளின் உருவாக்கம்

# இன்றைய சிறுமி



## நாளை .... ?



சிறுமியவள் தேவையும் சிறிது.



பெரிய பெண்ணாகி பவனி வருங்கால்,
அவள் தேவைகளும் பெருகி
விட்டதோ ?



உங்கள் சிறார்களின் சிறந்த



எதிர்காலத்திற்கு **சியுபி யின் "வாமன விஸ்வரூப திட்டம்"**
**மற்றும் " V.I.P. திட்டம் "**



மேலும் விவரங்களுக்கு எங்கள் வங்கியை அணுகவும்

CUB

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**
(அந்நியச் செலாவணி அங்கீகாரம் பெற்ற வங்கி)
பதிவு அலுவலகம் : கும்பகோணம் 612 001.

MCS/CUB/1370/95

**CUB யின் இதர சேமிப்புத் திட்டங்கள் :**

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டம்
- நிரந்திர வைப்புத் தொகை
- ரொக்கப் பத்திரங்கள்
- ஸ்ரீ சக்ரா திட்டம்
- CUB ஸ்டாக்இன்வெஸ்ட்
- NRI சேமிப்புத் திட்டம்

**CUB - உங்கள் வளர்ச்சிக்கு வழிகாட்டும் வங்கி !**

முறையில் உச்சாடனம் செய்யும் வேதவித்பன்னர்கள் தற்காலத்தில் குறைவு. முற்காலத்தில் இவையனைத்தும் சரியான முறையில் நடந்து வந்தன. ஏனெனில் அவரவர் தம்தம் தொழில்களில மட்டும் கவனம் செலுத்தி வந்ததனால் சமூகத்தில் சமாதானம், அன்பு, தயை பெருகியிருந்தன. எங்கும் எதிலும் கலப்படமில்லை. அனைத்துப் பொருட்களும் தூய்மையானவைகளாய் இருந்தன. வேத வித்யாப்யாசம், பக்தி, பாராயணம் இவை பரிபூரணமாய் விளங்கி வந்தன. கல்வி, வேள்வி என்பன குருகுல முறையில் கற்பிக்கப்பட்டு வந்தன. ஆகவே முற்காலத்தில் தோஷ பரிகாரங்கள் வெற்றி பெற்றன. தற்காலத்தில் ஏதும் சொல்ல வேண்டியதில்லை.

எனினும் பரிகாரங்கள் எந்த முறையில் அல்லது வகையில் இருந்தாலும் அவை சரியாக நடந்தேற முடியாத நிலை தற்காலத்தில் நிலவி வருகிறது. பெயர் மாற்றம் என்பது எனது முறைப்படி நிரூபிக்கப்பட்ட வழிமுறையாகும். அதற்கு இதுகாறும் என் மூலம் பெயர் மாற்றம் பெற்ற பல நூற்றுக்கணக்கான நண்பர்களே சாட்சி சொல்வார்கள்.

ஒவ்வொருவரும் அவரவர் பிறந்த தேதி எண்களுக்குப் பொருத்தமாக பெயரை அமைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும். உதா ரணமாக 5, 14, 23 தேதிகளில் பிறந்தவர்களுக்குச் சில பொருத்தமான பெயர்கள் ஜனனி, அக்ஷயா, அர்ச்சயா போன்ற பெயர்கள் சிறந்ததாகும்.

8, 4, 5 போன்ற கூட்டு எண் வரும் தினங்களில் திருமணம் செய்வது துரதிர்ஷ்டமானது. பொதுவாக தேதி, மாதம், வருடம் இம் மூன்றையும் கூட்டி வருகின்ற கூட்டு எண் 1, 6, 9, 3 போன்றவையாக வரும் தினங்களில் திருமணம் செய்தால் அவர்களது வாழ்க்கை சிறப்பாக அமையும். உதாரணமாக (28.8.1995 = 2+8+8+1+9+9+5 = 4+2=6) மேலும் அவர்களின் பிறந்த தேதிக்கு இந்தக் கூட்டு எண்கள் பொருத்தமானதாக இருப்பின் நல்ல சிறப்பான வாழ்க்கை அமையும்.

ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் பெயர்களுக்கான பலனை தெரிந்து கொள்வதில் ஆர்வம் இருக்கும். நீங்கள் ஒவ்வொருவரும் கீழ்காணும் அட்டவணைக் குறிப்பினைப் பார்த்து அதிலுள்ளபடி எழுத்துக்களுக்கு மதிப்பிட்டு ஆராய்ந்து உங்கள் பெயரை உங்களது பிறந்த தேதிக்குப் பொருத்தமானதா என்பதை ஆராய்ந்தறியலாம். இதில் ஒரு முக்கிய அம்சம் என்னவென்றால் அவரவர் பெயரின் உச்சரிப்புக்கு ஏற்றபடி சரியானபடி பெயரை எழுதி அதற்கு ஆங்கில எழுத்துக்களுக்கு மதிப்பிட்டு எழுத வேண்டுமே தவிர எழுத்துக்களை அதிகமாகக் கூட்டியோ, குறைத்தோ அல்லது இனிஷியலையும் இணைத்தோ மதிப்பிடக் கூடாது. இது முற்றிலும் தவறான அணுகு முறையாகும்.

உதாரணம் : 231111

BALAJI = 9

இதை மாற்றியமைப்பது தவறான அணுகு முறையாகும். 19 என்ற எண்ணில் இதை

21131155

BAALAJEE = 19

பெயரை அமைத்துக் கொள்வதாக கருதி பெயரில் எழுத்துக்களை கூட்டி மதிப் பிடுவதால் எந்தவித பயனும் ஏற்படாது. பெயரில் உச்சரிப்பில் மாற்றம் செய்வதே மிகவும் முக்கியமானதாகும்.

| | |
|---|---|
| A,I,J,Q,Y | 1 |
| B,K,R | 2 |
| C,G,L,S | 3 |
| D,M,T | 4 |
| E,H,N,X | 5 |
| U,V,W | 6 |
| O,Z | 7 |
| P,F | 8 |

மனிதர்களாகிய நாம் ஆருகாலம் முதற் கொண்டே படிப்படியாக முன்னேறிக் கொண்டுதான் வருகிறோம். நாளுக்கு நாள் விஞ்ஞானமும், நாகரீகமும் வளர்ந்து கொண்டேதான் செல்கிறது. ஆனால் அனைத்து வசதிகளையும் அடையத் துடிக்கும் ஒவ்வொருவரும் பெயரை மட்டும் மாற்றுவதற்குச் சிரமப்படுகிறோம். ஆம் இன்றும் நம் முன்னோர்கள் வைத்த பெயர்களையே கந்தசாமி, குப்புசாமி, முனுசாமி, தினகரன், திவாகர் என்ற பழைய பெயர்களையே வைத்துக் கொண்டுள்ளோம். இதை மாற்ற விரும்பவில்லை. இப்படிப்பட்ட பெயர்களை வைத்துக் கொண்டு இன்று சாதனைப் படைப்பவர் எத்தனை பேர்கள்? இதற்குப் பதிலாக அவர்களுக்குப் பொருத்தமாக புதிய பெயர்களை தேர்ந்தெடுத்து துணிந்து சூடுபவர்கள் சாதிக்கின்றனர். உதாரணமாக குற்றாலீஸ்வரன் என்ற பெயரில் சாதனை புரிந்த அச்சிறுவனை எடுத்துக் கொண்டால் அவனது பெயர் அவனுக்குப் பொருத்தமான நல்ல எண்ணில் அமைந்தது தான் காரணமாகும். நம் நாட்டைப் பொருத்தவரை பல திறமைகள் இருந்தும் திறமைகளை வெளிப்படுத்த இயலாமைக்கு பலரின் பெயர்களே காரணமாக இருக்கிறது.

இப்படிப் பல புதுமையான தகவல்களைச் சொல்லும் சி. வி. ராஜராஜன் 12பி/1 ஆற்காடு ரோடு, விருகம்பாக்கம், சென்னை - 92 (தொ. பே. 483 2242) எனும் முகவரியில் வசிக்கிறார். இன்னும் இவரிடம் நிறைய கேட்கத் தோன்றியது. அப்படியானால் என்ன தேதிக்கு என்ன பெயர் வைக்கலாம் என லிஸ்ட் கேட்கலாமா? அவர் பேசும் வேகத்தில் அதையும் பெரிய லிஸ்ட்டாகச் சொல்லுவார் போலிருந்தது. எனவே அத்தோடு விடைபெற்றுக் கொண்டோம்.

- அருள்மொழி ராமகிருஷ்ணன்


ஆரோக்கியம் மட்டுமல்ல!
பல ஆதாயங்களும் கூட...
Supreme
Pure, double refined Vegetable Oil
சுப்ரீம் சமையல் எண்ணெய் நலம் பல தந்திடும் சமையலின் தரம் உயர்ந்திடும்.
• வைட்டமின் 'ஈ' நிறைந்திருப்பதினால் சமைத்த உணவு பொருட்களை கெடாமல் அதிக நேரம் பாதுகாக்கிறது.
• மணமற்றது. உணவின் ருசியை மாற்றாதது.
• மெழுகுத்தன்மையற்றது. ஆகையால், குறைந்த அளவே தேவைப்படுகின்றது.
• பொரிப்பதற்கு மிகவும் சிறந்தது, சுப்ரீம்.
சுகம்... மேலான நலம்... சுப்ரீம்.
S.S.D. OIL MILLS COMPANY LTD.
• Madras Ph: 8281803 • Cochin Ph: 350640 • Bangalore Ph: 367330 • Guntur Ph: 223572 • Orissa Ph: 410362
Calibre 19-8-95

இன்றைய உலகில் எவ்வளவோ பணம் சம்பாதிக்கலாம்; புகழ் பெறலாம். ஆனால் மன அமைதி இதனால் எல்லாம் கிடைக்கிறதா என்றால் இல்லையென்றுதான் பதில் வருகிறது. பணத்தையும், புகழையும் தேடி ஓட ஓட மேலும் மேலும் வேண்டும் வேண்டும் என பைத்தியமாக பிரலாபிக்க ஆரம்பிக்கிறோம். மனம்... அது நிர்மலமாக இருக்க என்ன வழி... ஆன்மீகம் ஒன்றுதான் வழி.

நாம் மிகுந்த புண்ணியம் செய்தவர்கள். நம் முன்னோர்கள் அழியாத ஆன்மீகச் செல்வங்களை விட்டுச் சென்றிருக்கிறார்கள். நான்கு வேதங்களும், இரண்டு காவியங்களும், பகவத் கீதையும், இன்னும் எத்தனை, எத்தனை... கொஞ்சம் கொஞ்சம் அவற்றிலே ஈடுபாடு காட்டினாலே மனம் கட்டிய பசு போல அடங்குமே!

காதுகள் புண்ணியம் செய்திருக்க வேண்டும். கும்பகோணத்தில் 'ராஜா வேத காவ்ய பாடசாலாவில்' அந்தக் குழந்தைகள் அட்சர சுத்தமாக நான்கு வேதங்களையும் சொன்னார்கள். நூற்றி அறுபது குழந்தைகள் அங்கு வேதமும், காவ்யங்களும், ஆங்கிலமும் படித்து வருகிறார்கள்.

மற்ற படிப்புக்கள் தன் வயிற்றைக் கழுவச் சொல்லும் போது, இந்தக் குழந்தைகள் படிப்பது 'உலகம் உய்ய, உலக மக்கள் க்ஷேமமாக வாழ்க' என வரிக்கு வரி வாழ்த்தும், வாழ்க்கை முறையைக் காட்டும் வேதங்களை!

கும்பகோணத்தில் திரிபுவனம் பட்டுக் கூட்டுறவுச் சங்க மேலாளர் நடராஜன் வீட்டுக் கல்யாணத்தில் பத்மா சுப்ரமண்யம் தன் அழகிய கண்களை விரித்துச் சொன்னார், "இந்த வேதபாடசாலைதான் இந்தியாவில் முதன் முதலாக 450 வருஷங்களுக்கு முன் நிறுவப்பட்டது. நீங்கள் அவசியம் பார்க்க வேண்டும்" என்று.

இந்தப் பாடசாலையை ஒரு அரைப்பக்க விளம்பரமாக பத்திரிகைகளில் பார்த்ததாக நினைவு. ஆனால் அந்தி மயங்கிய அந்த மாலை வேளையில் கும்பகோணத்தின் பிரபல

# தர்மம் நம்மை காக்கட்டும்



பெண்மணி லலிதா சேதுராமனுடன் உள்ளே நுழைந்த போதுதான் எத்தனை சுநாதம்! காதுகள் அத்தனை சுத்தமாக வேதம் கேட்க பாக்கியம் செய்திருக்க, கண்கள் தேஜோமயமாக இருந்த அந்தக் குழந்தைகளைப் பார்த்துப் பரவசப்பட்டது.

நாயக்க மன்னர்கள் காலத்தில் ஆன்மீகத்திலும், அரசியலிலும் கொடிகட்டிப் பறந்த மகான் கோவிந்த தீட்சிதரும், அவருடனே நிழல் போல வாழ்ந்த நாகலாம்பாளும் செய்த தருமங்கள் கணக்கிலடங்காதவை. அவர் நிறுவிய பாடசாலைதான் அது.

சங்கல்பமாக நிதியுதவி வந்து கொண்டே இருக்கிறது. குழந்தைகள் க்ஷேமமாக இருக்கிறார்கள்" என்கிறார் ப்ரதான அத்யாபகர் ராமநாத ஸாமவேதி.

நாட்டிய மேதை பத்மா சுப்ரமணியமும் தனக்குக் கிடைத்த மகசேசே அவார்டில் கிடைத்த பணத்தைக் கொண்டு இப் பள்ளியில் வித்யார்த்திகளுக்குப் பரிசு தரும் வகையில் ஏற்பாடு செய்திருக்கிறார்.

வேதம் வாழ்க்கை நெறிமுறையைக் கூறுகிறது. வாழ வேண்டிய விதத்தைக் கூறுகிறது. வேதமே மந்திரமாக ஒலிக்கிறது. வேதமே மந்திரம் என்பதால் அதைச் சொல்லும் விதத்தில் சொல்லும் போதுதான் பலன் தருகிறது. அந்த வகையில் இங்கிருக்கும் மாணாக்கர்களை மிகச் சிறந்த முறையில் இவர்கள் பயில்வித்து வருகிறார்கள்.



உலகம் நன்முறையில் வாழ வேண்டி நாளும் ப்ரார்த்திக்கும் இவர்களை, இவர்களின் சௌகர்யங்களை உலகம் பார்த்துக் கொள்ள வேண்டும் இல்லையா? நான் மறை ஓதும் இந்தக் குழந்தைகளின் ஒருநாள் உணவுக்கு 500 ரூபாய் ஆகிறது. விருந்துடன் உணவளிக்க ரூபாய் ஆயிரம். இப்படிப் பல செலவுகளைத் திட்டங்களாக அமைத்திருக்கிறார்கள். 'தர்மத்தை நாம் ரக்ஷித்தால் தர்மம் நம்மை ரக்ஷிக்கும்' என்பார்கள். அந்த வகையில் 42, காமாட்சி ஜோசியர் தெரு, கும்பகோணம் - 612 001 என்ற முகவரியில் அமைந்துள்ள இந்த 'ராஜாவேத காவ்ய பாடசாலை'க்கு நாம் எத்தனையோ செய்யலாம்.

பூஜ்ய ஸ்ரீ பரமாச்சார்யார், கோவிந்த தீட்சிதர் பரம்பரையில் உதித்தவர் என்று சொல்வதை விட வேறென்ன வேண்டும்?

"மன்னராட்சியெல்லாம் போன பிறகு இந்தப் பாடசாலையை நடத்த ரொம்ப சிரமப்பட்டோம். வி.ஆர்.எல். சர்மா இதனை நடத்த அவஸ்தைப்பட்டு பரமாச்சார்யாரிடம் போய் முறையிட்ட போது, 'மஹான் ஆரம்பித்த பாடசாலைக்குக் கஷ்டமா? இனி ஒன்றும் வராது போ. உனக்குக் கவசம் தரேன்' என்று தான் அணிந்து இருந்த மாலையைக் கழற்றித் தந்தராம். அன்றிலிருந்து இன்று வரை தெய்வ

# பொன்னான தீபாவளி

'பொன்'னான மனசு..'தங்க'மான பெண் இப்படி உசத்தியான விஷயங்களுக்கெல்லாம் தங்கத்தைத்தான் உவமையாகச் சொல்கிறோம். நாம் கொண்டாடும் பண்டிகைகளிலேயே இப்போது முதலிடம் வகிப்பது தீபாவளிதான். உடை, பட்டாசு, பட்சணங்கள், போனஸ், ஷாப்பிங், சேமிப்பு என சமீப காலமாக தீபாவளியைச் சுற்றி எத்தனை விஷயங்கள் வளர ஆரம்பித்து விட்டன. அப்புறம் அதைப் 'பொன்'னான தீபாவளி எனச் சொல்லாமல் வேறு எதைச் சொல்வது?

'பொன்'னான தீபாவளிக்குப் 'பொன்' கடைக்காரர்கள் சொல்லும் விஷயங்களில்தான் எத்தனை சுவாரஸ்யமான செய்திகள். டெபாசிட் பற்றி, நகை அணியும் விதம் பற்றி, சேமிப்பு பற்றி என 'பொன்'னின் அனைத்து அம்சங்களையும் அலசினார்கள் இவர்கள்....

தி.நகர் எல்.கே.எஸ். கோல்ட் ஹவுஸின் உரிமையாளர்களில் ஒருவரான திரு. சையத் அகமது முதலில் சொன்னது, "உங்கள் வாசகர்கள் அத்தனை பேருக்கும் என்னுடைய பொன்னான தீபாவளி வாழ்த்துக்கள்!" என்பதுதான். அப்புறம்தான் விஷயத்திற்கு வந்தார்.

"தீபாவளிக்குத் துணிமணிகள், பட்சணங்கள் போல சிறிய நகையாவது வாங்குவது என்பது இப்போது வந்து விட்டது. ஏனென்றால் தீபாவளி சமயத்தில் எல்லோரிடமும் பணம் புழங்கும். நடுத்தர மற்றும் கொஞ்சம் பொருளாதார நிலையில் வசதி குறைந்தவர்கள் முதலில் தங்கள் சேமிப்பாக நினைப்பது நகைகளைத்தான். எனவே அப்படி வந்து வாங்குகின்ற வாடிக்கையாளர்கள் எங்களுக்கு நிறைய பேர் இருக்கிறார்கள். அவர்களுக்காகவே நாங்கள். தீபாவளிக்கு இந்த முறை எடை குறைந்த ஆனால் பார்ப்பதற்கு பெரிய நகை போல தோற்றமளிக்கும் நகைகளைக் கொண்டு வந்திருக்கிறோம்..." என்றார்.

"அது எப்படிச் சாத்தியம்?"

"மெஷின் கட்டிங்கில் அது சாத்தியம். ஒன்றரை சவரன், ரெண்டு சவரன் செயின் என்றால் முன்பெல்லாம் ட்விஸ்டட் செயின்தான் வாங்க முடியும். இப்போது நாங்கள் அறிமுகப்படுத்தும் நகை பட்டையாகக் கட்டிங் வரும். அதிலும் மெஷின் கட்டிங் என்பதால் பளபளவென ஜொலிக்கும். நெக்லஸ் போல, செயின் போல எனப் பல மாடல்கள் இருக்கிறது. அதே போல காது தொங்கட்டான்கள் அணிவது இப்போது ஃபேஷன். அதிலேயும் படகு போல, பல அடுக்காக, லஸ்தர் விளக்கு போல நிறைய மாடல்கள். அதுவும் இந்த வருட தீபாவளி ஸ்பெஷல்..."



• சையது அகமது

என்று கூறிக் கொண்டே போனவர்,

"அதெல்லாம் இருக்கட்டும். நம் பெண்கள் நகைகளை வாங்குகிறார்கள். அதை அதே கவனத்தோடு பராமரிக்க வேண்டும் என்பது ரொம்ப முக்கியம். அதே போல அதை அணியும் விதமும் ரொம்ப முக்கியம். நகைகளை ஒரு மொத்தமாக அள்ளி ஒரு டப்பாவில் போடாமல் அது அதற்குரிய பெட்டிகளில் மீண்டும் வைக்க ஒரு ஐந்து நிமிடம் ஆகுமா? அதைச் செய்வது முக்கியம்."

"அடுத்தது அணியும் விதம். இப்போதெல்லாம் நான் முன்பே சொன்னது போல எடை குறைந்த நகைகள் இருக்கின்றன. அவற்றை வாங்கி அணியும் போது 'வெரைட்டி' கிடைக்கும். ஒரே காசுமாலையையே அணியாமல் பல நிகழ்ச்சிகளுக்குப் பல அணியலாம். ஆனால் நாம் எந்த நிகழ்ச்சிக்குப் போகிறோம், அதற்கு எப்படிப் போக வேண்டும் என்பதை ஒரு நிமிஷம் யோசிக்க வேண்டும்.

மாலை நிகழ்ச்சிகளுக்குப் போகும் போது டார்க் கலர் புடவைகள், கல் பதித்த நகைகள் எடுப்பாக இருக்கும். ஆண்களும் ஆழ்ந்த நிற உடைகளைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும். பகல் நேர நிகழ்ச்சிகளுக்குப் போகும் போது

லைட் கலர் அணியலாம். நாம் ஒரு நிகழ்ச்சிக்குப் போகும் போது இருக்கின்ற நகையை யெல்லாம் போட்டுக் கொண்டு போகக் கூடாது. நாம் புடவைக்கு முக்கியத்துவம் கொடுக்கிறோமா அல்லது நகைக்கு முக்கியத்துவம் கொடுக்கிறோமா என யோசிக்க வேண்டும். புதி தாக ஒரு நகை வாங்கியிருந்தால் அதை அனைவருக்கும் காட்ட நினைப்பது இயல்பு. 'காடி'யாக ஒரு புடவை, நாலைந்து நகைகளோடு புதிய நகை இப்படி அணியக் கூடாது. புதிய நகை எடுப்பாகத் தெரியும்படி அணிய வேண்டும்.

அதே போல சுடிதாருக்குத்தான் கழுத்தோடு ஒட்டிய நகையும், 'ப்ரேஸ்லெட்'டும் அழகாக இருக்கும். இன்னொன்று நாம் எந்த நிகழ்ச்சிக்குப் போகிறோமோ அந்த நிகழ்ச்சியின் கலாசாரத்தை ஒட்டி நம் உடை இருப் பதுதான் பாந்தமாக இருக்கும். பார்ட் டிக்கும், கல்யாணத்திற்கும் வேறுபாடு இல்லாமல் உடை





அணிவது சரி யல்ல...

அதே போல சிறிய பொருளோ, பெரிய பொருளோ எதை வாங்கி னாலும் நாம் உழைத்துக் கஷ்டப்பட்டுத்தான் வாங்குகிறோம். அதை பராமரிப்பது மிகவும் முக்கியம். இப்போது அதற்கெல்லாம் எவ்வளவோ நவீன சாதனங்கள் வந்திருக்கின்றன. நகைகளைப் போலவே தங்கத்திலேயே கடிகாரம் கூட வந்திருக்கிறது. அதற்கு எவ்வளவு 'டிமாண்ட்' தெரியுமா? ரொம்ப காஸ்ட்லியே கிடையாது. ஒன்றரை

சவரத்தில் வருகிறது. அழகிய வேலைப் பாடமைந்த இவை இங்கேயும் கடையில் வைத்தவுடனேயே விற்றுப் போகிறது. ஆனால் பராமரிப்பு...?

அதில் பெண்கள் கவனமாக இருக்க வேண்டும். இப்போது வெள்ளி, முத்து, தங்கம் இவற்றையெல்லாம் துடைத்துப் பாலீஷ் போட்டுப் பளபளவென ஓரிரு நிமிடத்தில் கூட மின்னச் செய்யலாம். இதற்கு 'ஹெகட்டி' என ஒரு திரவம் வந்திருக்கிறது. இப்படி எத்தனையோ வசதிகள் வந்திருப்பதால் இவற்றைப் பெண்கள் பின்பற்ற வேண்டும்..." என்றார் புன்னகையோடு சையது அமகது.



• ஹரிலோகநாதன்





## கட்டித் தங்கமாக சேமிக்கலாம்!

தங்க நகை வாங்குவது இருக்கட்டும். நம் பொருளாதாரக் கொள்கைகளின் காரண மாக நிறைய பேர் சேமிப்பது அதிகமாகி விட்டது. அவர்களுக்கு நல்ல 'தங்க' சேமிப்பைப் பற்றிக் கூறுகிறார் 'அனுக்கிரஹா' ஜுவல்லர்ஸின் உரிமையாளர் ஹரி லோகநாதன். கோவையில் கே. ஆர். அண்ட் சன்ஸ் குருப் எனப் புகழ்பெற்ற இவர்கள் சமீபத்தில் சென்னை அண்ணா நகரில் சிந்தாமணி அருகே தங்கள் கிளையைத் திறந்திருக்கிறார்கள்.

"தங்க சேமிப்பு என்பது ஒரு லாபகரமான விஷயம்தான். 'புலியன் மார்க்கெட்' என்பார்கள். அதாவது தங்க நகையாக இல்லாமல் அப்படியே கட்டியாகச் சேமிப்பது. 'கட்டி' என்றவுடன் பயந்து விடாதீர்கள். முன்பெல்லாம் தங்கக் கட்டிகளை நேரடியாக பொது மக்களுக்கு விற்பதில்லை. இப்போது அரசு கொள்கைகளின் காரணமாக அதற்கு அனுமதி அளித்து விட்டார்கள். எனவே 'புலியன் மார்க்கெட்' எனப்படும் இந்த வியாபாரத்தில் ஒரு சவரன் கூட தங்கக் கட்டியாக வாங்கலாம். இப்படித் தமிழகத்தில் முதன் முதலாக விற்பவர்கள் நாங்கள்தான்.

இப்படித் தங்கக் கட்டியாக வாங்குவதில் பெரிய நன்மை உண்டு. சேமிப்பு என வரும்போது நகை என்றால் அதில் 100% தங்கம் இருக்காது. சுத்தத் தங்கத்தில் நகை செய்ய முடியாது என்றுதான் உங்களுக்குத் தெரியுமே! ஆனால் இந்தத் தங்கக் கட்டிகள் 100% கலப்பில்லாத தங்கம். இவற்றை உலகின் எந்த மூலையிலும் சென்று பணமாக மாற்ற முடியும். எனவே சேமிக்க என தங்கம் வாங்குபவர்கள் இப்படிப்பட்ட தங்கமாக வாங்கிக் கொள்வது நல்லது.

தீபாவளி போன்ற சமயங்களில் எல்லோருக்குமே பணம் வரும். இப்படிப்பட்ட தங்கக் கட்டிகளை வாங்கி வைத்துக் கொள்ளலாம். அதே சமயம் தங்க நகைகளாக வாங்க விரும்புபவர்கள் நல்ல கெட்டியான நகைகள் வாங்குவதுதான் நல்லது. டிசைன், வெரைட்டி என

வாங்க விரும்புபவர்கள் தங்க நகையாக வாங்காமல் இப்போது வந்திருக்கும் 'இமிடேஷன்' வாங்கு வது நல்லது. அதில் தவறு ஒன்றும் இல்லை. அழகுக்கு, ஆசைக்கு என அவற்றை நிறைய வாங்கலாம். அதே சம யம் நஷ்டம் வராமல் இருக்க தங்கத்தில் பெரிய நகையாக வாங்குங்கள்...'' எனும் இந்த இளைஞர் நகை வியாபாரத்தில் தலைமுறை யாக வருபவர்.

"ஆனால் எங்கள் மூதாதையர் இதை ஒரு நகை வியாபாரமாகச் செய்து வந்தார்கள். இப்போது காலம் மாறி விட்டது. இதனை பல நோக்குகள் கொண்ட தொழிலாக நாங்கள் செய்ய ஆரம்பித்து வருகிறோம். உதாரண மாகச் சொல்லப் போனால் தங்கத்திற்கு மட் டும்தான் எந்தவிதமான குறிப்பிட்ட தரநிர்ண யமும் இல்லை. ஒரு சாதாரண டூத்பேஸ்ட்டுக் குக் கூட ஒரு முத்திரை தேவை. ஆனால் நகை கள் என பார்த்தீர்களானால் ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொரு மாதிரி இருக்கும். இது தரம் குறைந்தது, தரம் நிறைந்தது என நான் சொல்ல வரவில்லை. ஒரேவிதமான நிர்ணயம் இல்லை என்றுதான் சொல்கிறேன். கோடிக் கணக்கில் பழம் புழங்கும் இந்தத் தொழிலில் அந்த நிர்ணயம் வர வேண்டும். அதனால்தான் நாங்கள் எங்கள் புலியன் மார்க்கெட்டிற்கு 'சர்வதேச தர நிர்ணயச் சான்றிதழ்' வாங்கக் கோரியிருக்கிறோம். அதுவும் கூடிய விரை விலேயே வந்து விடும்.

அதே போல கோவையில் எங்களுக்கு நகைகள் செய்ய எங்களிடமே பணிபுரியும் நூற் றுக்கணக்கான தொழிலாளர்கள் உண்டு. மெஷின் கட்டிங், கைவேலை இரண்டையுமே ஒரே இடத்தில் இரண்டு தளங்களில் வைத் திருக்கிறோம். எங்கள் நேரடிப் பார்வையில் நகைகள் செய்யப்படுகின்றன.

அதே போல சென்னை மட்டுமல்லாமல் விரைவிலேயே தமிழகத்தின் மற்ற முக்கிய ஊர் களிலும் எங்களுடைய கிளைகள் திறக்கப்பட இருக்கின்றன. இவை அனைத்தும் 'செயின் ஆஃப் ஸ்டோர்ஸ்' ஆக இருக்கும். அதனால் எங்கே நகை வாங்கினாலும் மற்ற இடங்களில் அதைப் பற்றிக் கேட்க முடியும். இப்படி இதை ஒரு விஞ்ஞானபூர்வமான தொழிலாக மாற்றி வருகிறோம்.

அதே சமயம் அழகுணர்ச்சி நிறைந்த தொழில் இது. சர்வதேச தரம் பார்க்கும் போதே சர்வதேச டிசைன்களை'யும் பார்க்கி றோம். அந்த அளவிற்கு டிசைன்களும் நாங்கள் கொண்டு வருகிறோம்...''

என இளையதலைமுறையின் தன்னம்பிக் கையோடு பேசுகிறார் ஹரி.

## நகை வியாபாரத்தில் டெபாசிட் செய்யலாமா?

நகை பராமரிப்பு, தங்க சேமிப்பு இவற் றைத் தாண்டி நகை சம்பந்தமாக டெபாசிட் என்பது இப்போது வளர்ந்து வருகிறது. இதைப் பற்றி பனகல் பார்க் அருகிலுள்ள உம்மிடி பங்காரு செட்டி & சன்ஸ் உரிமையாளர்களில் ஒருவரும் தங்க நகை வியாபாரத்தில் பல்லாண் டுகள் அனுபவம் வாய்ந்தவரும், இத்துறையில் மூத்த தலைமுறையைச் சேர்ந்தவருமான திரு. சுதாகர் சில அருமையான யோசனைகளைச் சொன்னார்.

"சந்தேகமில்லாமல் நகை என்பது நல்ல சேமிப்புதான். அதனால்தான் சொல்கிறேன் நகை வாங்கும் போது கெட்டி நகைகளாக வாங்குங்கள் என்று. அதில் தங்கம் 'சாலிட்' டாக இருப்பதால் உங்களுக்கு நஷ்டம் வராது. ஆனால் டெபாசிட் என்று வரும் போது பொது மக்கள் சிந்தித்துச் செயல்பட வேண் டும்...'' என்கிறார் இவர்.

"இப்போது உலகிலேயே இந்தியாவில்தான் அதிகமாக தங்கம் வாங்குகிறார்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. எனவே, லாபகர மான வியாபாரமாகத் தங்க வியாபாரம் இருக் கிறது. எனவே இங்கு 'டெபாசிட்' போடு வது என்பதில் தவறில்லை. ஆனால் எங்கே அதனை டெபாசிட் செய்கிறோம் என பார்த் துக் கொள்ளுங்கள். இன்னொரு விஷயம் தங்க வியாபாரம் என்பது காலை பத்து மணி யிலிருந்து மாலை எட்டு மணி வரைதான். அந்த நேரத்தில்தான் பணப்புழக்கம். அது இருபத்தி நாலு மணி நேரம் உழைக்கும் முதலீடு அல்ல. மற்ற நேரங்களில் நீங்கள் தங்கத்தில் போடும் முதலீடு உழைப்பதில்லை. தொழிலில் முதலீடு செய்பவர்கள் இதையெல் லாம் கவனிப்பார்கள். நாம் போடும் பணம் எத்தனை மணி நேரம் நமக்காக வேலை செய் கிறது' என்பதைப் பார்ப்பது சரியான கணிப்பு. அந்த வகையில் இதனையும் கருத்தில் கொண்டு டெபாசிட் செய்யுங்கள் என்றுதான் சொல்கிறேன்.

மற்றபடி நகைகளில் முதலீடு செய்வது சிறந்ததுதான். ஏனென்றால் நம் அவசரத் தேவைக்கு உலகின் எந்த மூலையிலும் வெகு எளிதாக மாற்றக்கூடியது தங்கம்தான். ஏன், நம் அரசாங்கத்தையே ஒரு சமயம் பொரு ளாதார நெருக்கடியிலிருந்து காப்பாற்றியது தங்கம்தானே! மற்ற கடன் உதவிகளுக்குக்கூட தங்கத்தை வைத்துக் கொண்டுதானே கடன் தருகிறார்கள். அந்த வகையில் நாம் சேமிக்க

ஆரம்பிக்கும் போது ஓரளவு தங்கத்தில் சேமித்து வைப்பது சிறந்ததுதான்" என்கிறார் சுதாகர்.

புகழ்பெற்ற பாரம்பர்யம்மிக்க தங்க வியாபாரிகளான இவர்கள் இத்துறையில் பெயர் பெற்றவர்கள். அப்படியும் இந்த முதல் தேதி தள்ளுபடியெல்லாம் செய்வதில்லை. ஏன் இவர் கள் இந்தப் போட்டியில் இறங்க வில்லை?

"அதில் எங்களுக்கு நம்பிக்கையில்லை. நகை வியாபாரம் என்பது திருமண காலங்களில்தான் அதிகம். வருடம் பூராவும் தங்களுக்கு அடுத்த நகை வாங்க விரும்புபவர்கள் 'ரொக்'கமாக வாங்கிக் கொண்டுதான் இருக்கிறார்கள். வருடம் முழுக்க இப்படி வியாபாரம் நடந்து கொண்டு தான் இருக்கும். அந்த முழு வருட வியாபாரத்தை ஒப்பிடும் போது இந்த ஒண்ணாந்தேதி சேல்ஸ் என்பது குறைவு தான். அதற்காக இந்த 'பரபரப்பில்' நாங்கள் கலந்து கொள்ள விரும்பவில்லை" என்கிறார்கள்.

இவர்களின் நகைகளின் தரம், நாணயம் பற்றிக் கவலையே படவேண்டியதில்லை. ஏனெனில் தரமான தங்கம், சிறந்த டிசைன்ஸ் என்பதில் வெகு கண்டிப்பாக இருப்பவர்கள் இவர்கள். எனவே இவர்களுக்கென்றே வரும் வாடிக்கையாளர்களும், அவர்கள் சொல்லக் கேட்டு வருகின்ற வாடிக்கையாளர்களுமாக எப்போதும் இவர்கள் கடையில் கூட்டம்தான்.

* உம்மிடி பங்காரு கடையில்...



* சுதாகர்



'பொன்'னான தீபாவளி வாழ்த்துக்களைத் தேடிச் சொல்லப் போய் ஒரு தங்க பஜாரில் சுற்றி வந்த மாதிரி எண்ணம். நிறைய செய்திகள், நிறைய யோசனைகள் கிடைத்தது. நாமும் சொல்லிக் கொள்ளலாம், பொன்னான மனதோடு, புன்னகையின் சிறப்போடு தீபாவளியைக் கொண்டாடுவோம்!

தொகுப்பு : **லீனா, பவித்ரா**

நகை புகைப்படங்கள் உதவி : **எல்.கே.எஸ். கோல்ட் ஹவுஸ்**

அட்டை வண்ணப்படத்தில் நகைகளை அணிந்துள்ள மழலைப் பட்டாளம் : **ஜனனி, அரேபானு, ஷஹானா, சமந்தா, ஷரத், சாய்ஹரி.**

படங்கள் : **சுரேஷ்**



**நாம் தீபாவளிக்கு பால்கோவா செய்யும் பொழுது, 6 லிட்டர் பாலையும் அடுப்பில் வைத்துக் காய்ச்சலாம். அப்பொழுது, பாலின் அடியில் சிறிய தட்டு ஒன்று போட்டு விட்டால் பால் அடிபிடிக்காது. நீண்ட நேரம் நின்று கிளற வேண்டாம்.**

**- சித்ரா ஸ்ரீதரன்**


உங்கள் மழலைச் செல்வம் அவனது
மென்மையான மிருதுவான உலகம்.
Nestlé
NESTUM
Baby Cereal
Processed Cereal Based Weaning Food
Rice
mix with milk
அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல்
திட உணவும் அவனைப் போலவே
மிருதுவாக இருக்கட்டும்.
இப்பொழுது உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆகிவிட்டது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.
ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.
பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.
உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுவையாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம், காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.
நெஸ்டம்
எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.
லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.
இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள், போஸ்ட் பேக் 25, புது தில்லி-110016.
IMPORTANT NOTICE: MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. AFTER 4 MONTHS OF AGE GIVE BABY CEREAL FOODS IN ADDITION TO MOTHER'S MILK
महत्वपूर्ण सूचना: माँ का दूध आपके बच्चे के लिए सर्वोत्तम है। चार महीने की उम्र के बाद बच्चे को माँ के दूध के साथ-साथ अतयुक्त आहार दीजिए।


L.K.S GOLDHOUSE
L.K.S. GOLDHOUSE






# தீபாவளிக்குத் திட்டமிடுவோம்

'அரிசி விலை ஆகாசத்திலே பறக்குது. எண்ணெய் விலை பார்த்தால் கண்ணை மறைக்குது. நெய் விலை மெய்யே நடுங்குது!' அதற்காக தீபாவளி வராமல் இருக்குமா? பலகாரம் செய்யாமல் முடியுமா? பயப்படாதே தங்கச்சி. ஒரு பங்கு திட்டமிடல் + 1 பங்கு முன்யோசனை + தேவையான பொறுமை + 1 சிட்டிகை புதுமையான எண்ணங்கள் இது போதுமே சிக்கனமாகப் பலகாரங்கள் செய்ய!

## என்ன, என்ன, என்ன..?

எந்தப் பலகாரங்கள் செய்ய வேண்டும் என்று முதலில் தீர்மானித்து விடுங்கள். அடுத்த வீட்டில் செய்கிறார்கள் பக்கத்து வீட்டில் சொன்னார்கள் என்று நினைத்து நினைத்து செய்ய ஆரம்பித்தால் சாமான்கள் வாங்கவும் அரைக்கவும் கடைக்கும் மாவு மில்லுக்கும் ஓடவுமே நேரம் போதாது. போக்குவரத்துச் செலவு, தூக்குக் கூலி என்று வேறு செலவுகள் கையைப் பிடிக்கும்.

## எவ்வளவு, எவ்வளவு?

சில பேருக்கு எது செய்தாலும் டப்பா நிறைய செய்தால் தான் திருப்தி. தீபாவளிக்குப் பல பொருட்களை செய்யும் பொழுது எல்லாம் செலவாகுமா? எவ்வளவு நாட்களுக்கு வைத்திருக்க முடியும்? யார்யாருக்குக் கொடுக்க வேண்டும் என்பதை யோசனை செய்து தீர்மானித்துக் கொள்ளுங்கள். மைசூர்பாகும் 100 செய்து ஜாங்கிரியும் 100 செய்தால் மைசூர் பாகு 10 நாட்களுக்குக் கெடாமல் இருக்கும். ஆனால் ஜாங்கிரி இருக்குமா? சீக்கிரம் கெட்டு விடும். அதை 50 செய்தால் போதாதா? சில வீடுகளில் எவ்வளவு பட்சணம் செய்தாலும் தீபாவளிக்கு உக்காரை, பஜ்ஜி செய்வது சம்பிரதாயம். ஆனால் அதை யெல்லாம் குழந்தைகள் இந்தச் சமயத்தில் விரும்பிச் சாப்பிடுவார்களா? இல்லை மறுநாள் சாப்பிடலாம் என்று வைத்திருக்க முடியுமா? இவற்றையும் டப்பா நிறைய செய்ய வேண்டியது அவசியமா?

## எப்படி?

பட்சணம் எதை முதலில் செய்யலாம், எதை இரண்டாவது செய்யலாம் என்பதையும் தீர்மானிக்க வேண்டும். இந்த வழியிலும் பொருட்களைச் சேமிக்கலாம். சோமாசி போன்ற இனிப்புகளை நெய்யும், ரிபைன்ட் ஆயிலும் கலந்து வைத்துப் பொரிக்கிறோம். இவற்றை முதலில் செய்து கொண்டால் மிச்சமாகும் சுட்ட எண்ணெயில் கார பட்சணங்களைச் செய்யலாம். நெய்யின் சுவையும் காரத்தில் கலந்து தெரியும். எண்ணெய்ச் செலவும் குறையும். பூந்தி தேய்க்கும் போது முதலில் லட்டுக்கு எடுத்து பாகில் கலந்து விட்டுப் பிறகு கடைசியில் செய்யும் பூந்தியை மிக்சருக்கு எடுத்துக் கொள்ளலாம்.

மிக்சருக்குத் தேவையான நிலக்கடலை, பொட்டுக் கடலை, அவல் பொரி முதலிய வற்றைச் சுத்தம் செய்து வெயிலில் வைத்து டப்பாவில் போட்டு விட்டு பிறகு பூந்தியைச் செய்யலாம். பூந்தியை எவ்வளவுதான் வடிய விட்டாலும் சிறிது எண்ணையாக இருக்கும். அதை இந்தக் கலவையில் போட்டு குலுக்கி விட்டுக் கொண்டே வந்தால் எண்ணையும் சரியாகிவிடும். கடலை இவற்றைத் தனியாக வறுக்கவும் வேண்டாம். பூந்தி தேய்க்கும் போது எண்ணெயில் பரவலாக விழ வேண்டும். அதனால் முதலில் நிறைய எண்ணையை வைக்கும் போது அதைச் செய்து விட்டால் பிறகு ஓமப் பொடியை சின்னச் சின்னதாகப் பிழியலாம்.

அதற்கு அடுத்து அந்த எண்ணெயை வடி கட்டி விட்டு மேலும் சிறிது எண்ணைய் சேர்த்து வைத்துத் தேன் குழலைப் பிழியலாம். இவையெல்லாம் செய்து முடித்த பிறகு மிச்சமாகிற சுட்ட எண்ணெயில் காராசேவை அல்லது தட்டை செய்யலாம். காராசேவு என்றால் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்க்கலாம். தட்டையை இரண்டு மூன்றாகப் போட்டுச் சிறிது சிறிதாக வேகவிடலாம். இன்னொரு ரகசியம் தெரியுமா? தட்டை மாவுக்குத் தனியாக வெண்ணைய்ச் சேர்க்க வேண்டாம். முன்னால் செய்த பட்சணங்களில் இருந்து வடிய வைத்த சுட்ட எண்ணையே போதும். இந்த வரிசைப்படி பட்சணம் செய்தால் சுட்ட எண்ணை அதிகமாக மிஞ்சாமல் செய்யலாம். இருக்கும் கொஞ்சம் சுட்ட எண்ணெயில் தீபாவளி அன்று வடை செய்து வடகம் அப்பளம் பொரித்து விடலாம்.




## எந்த வடிவம்?

சில பேர் தங்கள் பாட்டி மைசூர்பாகு செய்தால் செங்கல் சைஸில் (சுவையில் அல்ல) வில்லை போடுவார். தட்டை பூரி சைஸில் இருக்கும். நானும் அதுபோல் செய்வேன் என்றும் சொல்வார்கள். லட்டு கிரிக்கெட் பால் அளவில் இருக்கும் என்பார்கள். சரி பாட்டி லட்டையோ மைசூர் பாகையோ பாதியாக விண்டு கொடுத்தால் நீங்கள் வாங்கிக் கொண்டீர்கள் அந்தக் காலத்தில். ஆனால் இன்றைக்கு உங்கள் பேரன் முழு லட்டு இல்லையா என்று கேட்கிறான். செல்லப் பேரன் என்றாலும் அவ்வளவு பெரியதை சாப்பிட முடியாவிட்டால் அது வேஸ்ட்தானே இன்றைய விலைவாசியில் அப்படி வீணாக்க முடியுமா? சற்று சிறிய சைஸிலேயே உருண்டைகளும் வில்லைகளும் இருக்கட்டுமே! எதற்கு வீண் பெருமை? வரும் விருந்தினர்களும் சிறிது சாப்பிட்டுவிட்டு மீதி வைக்காமல் இருப்பார்கள்.

## எந்த முறையில் உபசரிப்பது?

தீபாவளியன்று வீட்டிற்கு வருபவர்களுக்கு பட்சணம் கொடுப்பது வழக்கம். நமக்கு நாம் செய்ததை எல்லாம் கொடுக்க வேண்டும் என்ற ஆதங்கம்! தட்டு முழுவதும் நிரப்பி விடுகிறோம். அவர்களால் போகும் எல்லா வீட்டிலும் முழுவதுமாகச் சாப்பிடவா முடியும்? சிறிது கடித்தோ விண்டோ சாப்பிட்டுவிட்டு மிச்சம் வைத்து விடுவார்கள். அதை இன்னொருவருக்குக் கொடுக்க முடியுமா அல்லது வீணாக்க முடியுமா? பாக்கெட் செய்து எல்லாவற்றையும் கொடுங்களேன்

இதையெல்லாம் திட்டமிட்டால் பண்டிகையும் நிறைவாக இருக்கும். வீணாகி விட்டதே, அனாவசியமாகச் செலவு செய்தேனோ என்ற குறையும் இருக்காது.

— சுகன்யா ஜானகிராமன்


திறமையைத் தவிர,
இவர்களுக்குள்ள ஒற்றுமை
பொடுகில்லா கவர்ச்சிகர தலைமுடி.
"நடிப்புத் தொழிலுக்கு கடின உழைப்பு, திறமை என்பதை தவிர மிக முக்கியமான விஷயம் நல்ல வசீகரமான தோற்றம். எந்த நேரத்திலும் கவர்ச்சியாக விளங்க வேண்டும். ஒருதுளி பொடுகு கூட எங்களது இமேஜை பாதித்து விடும். அதனால்தான் நாங்கள் இருவரும் தொடர்ந்து உபயோகிக்கிறோம் ஆல் க்ளியர் க்ளினிக். பொடுகின் தொல்லையே இல்லை. நல்ல கவர்ச்சியான ஆரோக்கிய தலைமுடிதான் எப்போதும்"
அனுராதா மற்றும் கன்வல்ஜீத் - டிவி நட்சத்திரங்கள்
CONTROLS
FLAKING
ITCHING
CONDITIONER ENRICHED
ALL CLEAR
Clinic
DANDRUFF CONTROL SHAMPOO
ஆல் க்ளியர் க்ளினிக் உபயோகிக்கும்முன் தலையின் சருமம்.
இதமான ஆல் க்ளியர் க்ளினிக்கின் தொடர்ந்த உபயோகத்தால் தலை சருமம், ஈரப்பதமும் ஆரோக்கியமும் பெறுகிறது.
பொடுகில்லா கவர்ச்சிகர தலைமுடி.
ஆல் க்ளியர்
க்ளினிக்
பொடுகில்லா கவர்ச்சிகர தலைமுடி
ஆரோக்கிய தலைமுடிக்கு
க்ளினிக் பராமரிப்பு.
LINTAS Cl Alc P 1 2416

# எப்படித்தான் பேசுவதோ?

போனை கீழே வைத்தவுடன் பிடித்துக் கொண்டாள் சுமதி. "என்னவாம்? எப்ப வராளாம்?"

"சாயந்திரம் ஆறு ஏழு மணிக்கு வராளாம்."

"யார் யாரு?"

"மாலுவும் வாசுவும் தான்."

"சாப்பிடத்தானே?"

"ஆமா. அவ்வளோ லேட்டா வரச்சே இங்கேயே சாப்பிடுங்கன்னு நான்தான் சொன்னேன்."

"எப்பவுமே என்னை ஒரு வார்த்தை கேட்கணும்னு தோணாதே உங்களுக்கு. அவனவன் பொண்டாட்டி கண் ஜாடை காட்டினா புரிஞ்சுண்டு அதுப்படி செய்யறான். உங்களுக்கென்ன? நான்தான் சமைக்கணும். அக்கடான்னு டிவி பாத்துண்டு நீங்க அரட்டை அடிச்சுண்டு...."

"எப்பவோ ஒரு தடவை வர்ரா. சாப்பிடக் கூப்பிடலைன்னா எப்படி? அதுவும் சொந்த சித்தப்பா பொண்ணு..."

"ஆமா. இந்தக் கடமை... ஃபார்மாலிடியெல்லாம் எனக்குத்தான். நாம்பளும்தான் வருஷா வருஷம் மெட்ராஸ் போறோம். ஒரு தடவையாவது நம்மளை அவா கூப்பிடறாளா? நாம் போனாலும் பேருக்கு ஒரு காபித் தண்ணி... இல்லே ரஸ்னா. போதுமே. எல்லாம் ஒன் வே டிராஃபிக்தான்."

"சரி. இப்ப விடு."

"விடாம பிடிச்சுண்டா இருக்கப் போறேன். எது என் இஷ்டப்படி நடக்கறது இந்த வீட்டிலே. கிடைக்கறது ஒரு ஞாயிற்றுக்கிழமை. அதுலேயும் ரெஸ்ட் எடுக்க முடியாம விருந்தாளி..."

"உனக்கு என்ன ஸண்டே... நீ என்ன வேலைக்கா போகிறே...?"

"ஏன் வேலைக்குப் போனாதான் ஸண்டே ரெஸ்ட் எடுக்கலாமா... நாங்க மாத்திரம் வாரம் முழுக்க உழைக்கலே."

காலை எட்டு மணிக்குத் தர்க்கம் ஆரம்பம். தொடர்ந்து நாள் முழுக்க தொணதொணப்பு.

"சரி. என்ன சமைக்கட்டும்?"

"எதானா சமை. இப்பவேவா சமைக்கப்போறே."

"மதிச்சு சஜெஷன் கேட்டா உருப்படியா ஒண்ணு சொல்லாம பெரிசா அலட்டிக்கறீங்க."

"ஏதோ சமைச்சுப் போடணும். பண்ணு, சாம்பார் கறி..."

"சீச்சி. அதெல்லாம் போர்."

"அப்ப ஏதாவது கலந்த சாதம்...."

"ஆடிப் பண்டிகையா என்ன. சரியான பழங்காலம்."

"அப்ப பிஸிபேளாபாத் பண்ணு."

"அது வேணாம். மாலு என்னை விட நல்லா பண்றா."

இந்த சோதனையிலிருந்து எப்படி கழண்டு கொள்வது? ஐடியா!

"நீ எது வேணா பண்ணு சுமி. நீ ஜீரா ரசம் வெச்சா கூட விரலைத் திங்கலாம் போல அப்படி ஒரு ருசி..." என்று தூக்கி வைத்தேன்.

இல்லை என்றால் நான் ஏதாவது சொல்லப் போக... "ஏதோ ஹோட்டல் மெனு போல நீட்டிக்கிட்டே போறீங்க. உங்க மனுஷாளை பார்த்தா தலைகால் புரியாதே..." என்று சாடுவாள்.

எனக்கேம்பா வம்பு. அதான் ஐஸ்

பானு குமார்

வெச்சேன்.

லேசான பெருமிதச் சிரிப்புடன் "சரி சரி. காக்கா பிடிச்சது போதும். சமையலை மெதுவா பார்த்துக்கறேன். இப்ப மசமசன்னு உக்காராம வீட்டை க்ளீன் பண்ண ஹெல்ப் பண்ணுங்க. அவா வந்தா நம்மளைப் பத்தி என்ன நினைப்பா."

"அவங்க வீடு இருக்கிற லக்ஷணத்திற்கு நாம ஒண்ணும் குறைஞ்சு போயிடலை."

"அவா வீடு எப்படி இருந்தா என்ன? நாம சுத்தமா இருக்கறது நமக்குத்தானே நல்லது" என்றவாறு எல்லோரையும் விரட்டி தானும் மாங்கு மாங்கென்று உழைத்துச் சுத்தம் செய்தாள்.

அங்கே துடைச்சு இங்கே துடைச்சு... அவசரத்தில் எல்லா சில்லறை சமாச்சாரங்களை, பேப்பர்களை ட்ராயருக்குள் அள்ளித் திணித்து... கொடியிலும் நாற்காலியிலும் லாலியாகத் தொங்கிய துணிமணிகளை கப்போர்ட்டுக்குள் சுருட்டி அடைத்து... கிச்சன் பாட்டில் மூடிகளை அழுந்தத் துடைத்து... அலமாரி சுத்தப் படுத்தி, ஹாலில் புதிய கர்ட்டன் மாற்றி... ஸோபா உறைகளை தட்டிப் போட்டு... பூ அலங்காரம் செய்து வாசனை ஊதுபத்தி ஏற்றி... வீடு சும்மா மேக்கப் பூசிய நடிகை மாதிரி பளபளவென்று மின்னியது.

நாங்கள் எல்லோரும் ரிலாக்ஸ் செய்ய சுமதி சமையலில் மூழ்கிவிட்டாள். மூன்று தடவை மெனு மாற்றி முன்னே பின்னே யோசித்து, கடைசியில் முடிவு பண்ணி உணவு தயாரித்து டேபிளில் ஜம்மென்று வைத்து விட்டாள்.

'வெஜிடபிள் ஃப்ரைட் ரைஸ், தயிர்ப் பச்சடி, சேமியா பகாளாபாத், உருளைக் கிழங்கு ஃப்ரை, வற்றல் குழம்பு, மாங்காய்த் தொக்கு... குலாப் ஜாமூன்...' என்று பார்க்கவே அமர்க்களமாக இருந்தது. ஃப்ரைட் ரைஸ் குக்கரில் நிதானமாக சூட்டுக் கொண்டிருந்தது. குலாப் ஜாமூன் ஃப்ரிட்ஜில் குளிர்ந்து கொண்டிருந்தது.

ஏழு மணிக்கு மாலுவும் வாசுவும் வந்தார்கள். நுழைந்த உடனேயே மாலுவின் புகழாரம்.

"மன்னி என்னமா வீடு வெச்சிருக்கீங்க... படு சுத்தமா..."

"போறுமே... சொல்லாத மாலு... மூணு மாசமாச்சு... வீட்டை தூசு தட்டி...ஃபர்னிச்சர் துடைச்சு. ஒண்ணு செய்ய முடியல்லே. முந்தியெல்லாம் எவ்வளவு வேலை செய்வேன். வாராவாரம் க்ளீன் பண்ணி, உறை மாத்தி, பித்தளை சாமானுக்கு ப்ராஸ்ஸோ போட்டு அப்ப குழந்தைகளும் சின்னவா... அவா பின்னாடி ஓடி... ஒண்ணு ஸ்கூலுக்குப் போகும். இன்னொண்ணு வரும்... நானா பண்ணேன்னு ஆச்சரியமா இருக்கு. இப்ப ஒரு வேலை முடியல்லே. முதுகு வலி... சரி இருப்பது இருக்கட்டும் போட்டது போட்டபடி வெறுமன ஏத்தி இறக்கறேன். வயிறு இருக்கே. சாப்பிட்டாகணுமே... யார் கூப்பிடறா நம்மளை ஒரு வாய் சோத்துக்கு..."

"வாஸ்தவம்தான்... ஏன் மன்னி டாக்டர் கிட்ட காமிக்கக் கூடாதா?"

"என்ன சொல்வார் டாக்டர்? எட்டு டெஸ்ட் எடுத்தாகவுட்டு ஒண்ணுமில்லே. ரெஸ்ட் எடுக்கணும்பார். உங்கண்ணா சவரணைக்கு நான் படுக்கை போட்டா இந்த வீடு என்னாகும்?"



**தேங்காய் பர்பி (அ) மிக்ஸர் பர்பி செய்யும்போது கிளறி நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டிவிட்டு மேல்பாகத்தை ஒரு காபி டபரா பின்பக்கம் நெய் தடவி பர்பியின் மேல்பாகத்தில் லேசாக தடவி விட்டால் மேல் பாகம் மேடு பள்ளம் இல்லாமல் வில்லைகள் ஒரே சீராக பார்க்க அழகாக வரும்.**

**– ஆர். லலிதா**

அது என்ன சார் நான் அப்படி இளப்பம்? இவள் வீட்டு மனிதர்கள் வந்தால் என்னைப் பற்றி குறை கூறுவாள். என் வீட்டு மனிதர்களிடமும் என்னைப் பற்றி குறை கூறுவாள். அசடு வேஷம் பழகிவிட்டது.

மாலுவும் வாசுவும் வயிறு முட்ட சாப்பிட்டார்கள். ஒரே பாராட்டு மழைதான்.

"மன்னி, சாப்பாடு பிரமாதம். ஃப்ரைட் ரைஸ் தூள்... மாலு மன்னிகிட்ட ரெஸிபி வாங்கிக்க..."

"குபால்ஜாமூன் பிரமாதம்... அதுவும் வெனிலா ஐஸ்க்ரீம்ல போட்டுத் தந்தீங்களே... அப்படியே தூக்கிடுச்சு..."

சுமதிக்கு வாயெல்லாம் பல். முகம் தாமரையாகப் பூத்தது.

"பாவம். உங்களுக்கு எங்களால வீண் சிரமம். அதிகப்படி வேலை"

"ஐயோ. என்ன பிரமாத வேலை. கூட ஒரு இட்டம். ஸ்வீட்... மத்ததெல்லாம் தினப்படி சமையல்தான். நீங்க இரண்டே பேர். ஒரு அரை மணி அதிகப்படி வேலை. இது என்ன பிரமாதம். உங்கண்ணா நினைச்சா நாலு பேரை இழுத்துண்டு வந்துடுவார் சாப்பிட. சமையல்ல பதினெட்டு வருஷமா ஊறி எல்லாம் பழக்கமா போயிடுச்சு. இதெல்லாம் ஒரு சிரமமா? இன்னொரு நாள் நிதானமா வாங்க...விருந்து இன்னும் பெரிசா பண்ணிப் போடறேன்."

அவர்கள் புகழ இவள் மறுக்க ஒருவாறாக முகம் பூவாய் மலர அவர்களை வழி அனுப்பி வைத்தாள்.

அவள் வாசலில் டாடா சொல்லிவிட்டு உள்ளே வருவதற்குள் நான் என் பிள்ளைகளை உசுப்பி மேசையை ஒழித்து பாத்திரம் தேய்க்கப் போட்டு மேசையைத் துணியால் சுத்தம் செய்தேன். மேடையைத் துடைக்க ஆரம்பிக்கும்போது சுமதி வந்து துணியைப் பிடுங்கிக் கொண்டாள்.

"போதும்... நீங்க வெளில போங்க... இவ்வளவு வேலை பண்ணவளுக்கு மேடையை துடைக்கத் தெரியாதா...?" என்று படபடத்தாள். நான் துருப்புச் சீட்டை எடுத்து வீசினேன்.

"பாவம் சுமி நீ. காத்தாலேர்ந்து உக்காரலே. ஒண்டியா எவ்வளவு வேலை. ஆனா பிரமாதப் படுத்திட்டே...." என்று புகழ்ந்தேன்.



தட்டை செய்யும் போது சில இடம் கரகரவென்றும் சில இடம் சவுக்கென மெத்தென்றும் இல்லாமல் இருக்க ஒரு குச்சியினால் நடுபாகத்தில் 4 ஓட்டைகள் போட்டு விட்டால் அதுவழியாக எண்ணை வந்து நன்கு பொரிந்து கரகரவென்று இருக்கும்.

– ஆர். லலிதா

"போறும் அசடு வழியாதீங்க. நீங்க போய் பசங்களோட உக்காந்து டிவி பாருங்க. குலாப்ஜாமூன் ஐஸ்க்ரீம் சாப்பிடுங்க. பசங்களுக்கும் தாங்க. நான் பத்து நிமிஷத்திலே பாத்திரம் தேய்ச்சு அலம்பிட்டு வந்துடறேன்." என்று துரத்தினாள்.

இதே நாங்க தானாக டிவி பார்க்க உக்கார்ந்தால், "இந்த வீட்ல நான் ஒண்டியா சாகணும். கூடமாட வேலை செஞ்சா குறைஞ்சு போயிடுவீங்களா? மூக்கைப் பிடிக்கத் தின்னுட்டுப் போனது உங்க தங்கையும் அவ புருஷனும்தான். அவதான் உதட்டால வெறும் வார்த்தையால புகழ்ந்துட்டு மன்னி டேபிள் துடைக்கட்டுமான்னு கூட கேக்காம, அலம்பிய கையோட கிளம்பிட்டா. உங்களுக்காவது... ஐயோ பொண்டாட்டி ஒண்டியா அல்லாடறாளேன்னு அக்கறை வேணாம்? ஒரு வேலைக்காரியான்னா எங்கப்பா என்னை பெத்துப் போட்டிருக்கார். இப்படி ஓடா உழைச்சு ஒரு நா பொட்டுனு போயிடுவேன்...." என்று புலம்பியவாறு வேலை செய்வாள்.

பதினெட்டு வருஷ அனுபவத்திலே நான் இப்ப சாமர்த்தியமா பேசக் கற்றுக் கொண்டு விட்டேன். பெண் ஒரு புதிர் என்று சொல்வது சரியாகத்தான் இருக்கிறது.

**1973** ஆம் ஆண்டு நூறு பெண்களுடன் ஆரம்பிக்கப் பட்ட ஜனநாயக மாதர் சங்கம் இன்று வேரூன்றி கிளைகள் பரப்பி லட்சக்கணக்கான பெண்மணிகளை உள்ளடக்கிய மாபெரும் இயக்கமாக வளர்ந்திருப்பதே பெண்களின் முற்போக்குச் சிந்தனைக்கு அடையாளம் எனலாம்.



''பல மாதர் அமைப்புகள் பெண்களின் பொதுவான நலனுக்காக பாடுபட்டு வந்தாலும் யாரும் எடுத்துக் கொள்ளாத முக்கியமான பிரச்னைகளை, (ரேஷன் கடைகளில் பிரச்னை, கார்டு விநியோகத்தில் தில்லு முல்லு, கழிப்பறை இல்லை, பலாத்காரங்கள்) பிறர் அணுகத் தயங்கக் கூடிய பிரச்சனைகளை நாங்கள் எடுத்து உதவ ஆரம்பித்தோம்'' என்கிறார் இதன் உப செயலாளரும், மீடியா பொறுப்பாளருமான உவாகசி.

''கழிப்பறை இல்லாத காரணத்தால் பெண்கள் கருக்கலிலும், இரவிலும் மட்டும் தங்கள் இயற்கை உபாதைகளை செய்து கொண்டு அடக்கி வைப்பதால் ஏற்படும் பலவித கொடுமைகளைக் கேட்டு நெஞ்சு துடித்தது. டாங்கர் கிடையாது, குடி தண்ணீர் பற்றாக்குறை, மாதவிலக்கு சமயங்களில் கூட இயற்கையாக இருக்க முடியாத நிலை எங்கள் நெஞ்சங்களை ரணமாக்கியது. உடனே அதற்குரிய நடவடிக்கைகளை எடுத்து, விளம்பரப்படுத்தி கொண்டு பரபரப்பாக பேசிவிட்டு, பின் கண்டு கொள்ளாமல் இருக்க நாங்கள் விரும்பவில்லை. சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் அந்தப் பகுதி பெண்களை அழைத்துச் சென்று, பேச்சுவார்த்தை நடத்தி, அவர்களைத் தங்கள் பிரச்சனையை முழுமையாக உணர வைத்து, ஈடுபாடு ஏற்படுத்தி, பிறகு அதற்குண்டான தீர்வுகளை செய்ய ஆரம்பித்தோம். எங்கள் சங்கத்தின் மீது மதிப்பும், மரியாதையும், நம்பிக்கையும் ஏற்பட இதுவே காரணமானதுடன், கடந்த இருபத்தி இரண்டு வருடங்களில் இரண்டு லட்சம் ஆண், பெண் அங்கத்தினர்களாக விரிவடையவும், பல எதிர்ப்புகளை சமாளிக்கவும் கூட காரணமானது'' என்கிறார் பெருமிதத்துடன்.

தங்கள் பிரச்சனைகளை இந்த இயக்கத்தினரிடம் முறையிட்டால் தீரும் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கையை இவர்கள் விதைத்துள்ளனர்! வரதட்சணை கொலைகள், சிறுமியர் பலாத்காரம், காவல் நிலையக் கொலைகள் எதுவாக இருந்தாலும் அந்தந்த மாவட்டத்தில், தொகுதியில் உள்ள இந்த அமைப்பினர் கோஷமிட்டு, ஊர்வலம் சென்று, மறியல் நடத்தி, கூட்டங்கள் போட்டு கலக்கிவிடுகின்றனர். அபலைப் பெண்களுக்கு அரவணைப்பும், பாதுகாப்பும் கிடைக்கும் திருப்தியை உண்டாக்கியுள்ளனர்.

இந்த மாபெரும் அமைப்பு மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை மாநில மாநாடு ஒன்று நடத்தி அனைத்து மாவட்டங்களிலிருந்தும் பிரதிநிதிகளைக் கூட்டி விழிப்புணர்வு விழா

# புதிய விதி செய்ய புறப்படுவோம்!


ரசிக்க! ருசிக்க!! புசிக்க!!!
மாறாதய்யா
மாறாது!
மணமும் சுவையும்
மாறாது!!
வாருங்கள்
சுவைத்து மகிழுங்கள்
எங்களிடம் மில்க் ஸ்வீட், மிருதுவான மைசூர்பாகு, பெங்காளி ஸ்வீட்ஸ், சூடான காரவகைகள், சமோசா, கச்சோரி, பானிபூரி ஆகியவைகள் வாங்குவதற்கும் குடும்பத்துடன் அமர்ந்து சாப்பிடுவதற்கும், மற்றும் பிறந்தநாள் கேக், ஐஸ்கிரீம் வகைகளும் கிடைக்கும்.
ஸ்ரீ கணபதி ஸ்வீட்ஸ்
37, ஆற்காட் ரோடு வடபழனி சென்னை -26
✆ 4836670 (A.V.M. ஸ்டுடியோ அருகில்)
88/4 ஆற்காட் ரோடு வடபழனி
சென்னை - 26. ✆ 4831479
(வடபழனி பஸ் நிலையம் அருகில்)
107, ஆற்காட் ரோடு வடபழனி
சென்னை - 26. (மார்க்கெட் அருகில்)
✆ 4842154
தரம் நிரந்தரம்
தீபாவளி ஆயுத பூஜை விழாக்கால ஆடர்கள் வரவேற்கப்படுகின்றன.

Komala Ads


SHARAVANA
28 Years of Glorious Service
Estd in 1967, Sharavana is pioneer in manufacturing Wet Grinders, right from 1 litre to 20 litres.
Models Available : Regular model, Tilting & Table Top model grinders,
• Exporting since 1980. • High quality finish with Taper & Double Ball Bearing System with AUE Motor • Long lasting & Durable
Available in different colours with stainless steel body finish with sun glass finish
TRADE ENQUIRES SOLICITED
Mfrs: SHARAVANA ENGG. TRADERS
Mudaliar Road, R.S Puram, Coimbatore - 641 002
Phone : 445117, 435118 Fax : 445119

நடத்துகின்றனர். மூன்று நாட்களும் முறையே பொது நிகழ்ச்சி, மாபெரும் பெண்கள் ஊர்வலம், பொதுக் கூட்டம் நடத்தி பெண்களுக்கு மென்மேலும் தைரியத்தையும், தன்னம்பிக்கையையும் வளர்க்கின்றனர். நமது அரசியல், சமுதாய, மதப் பிரச்னைகளைப் பற்றிய அக உணர்வுகளைத் தூண்டும் ஒரு கருவியாக செயல்படுகின்றனர். எட்டாவது மாநில மாநாட்டை இந்த வருடம் ஆகஸ்ட்டு 21, 22, 23ந் தேதிகளில், சென்னையில் வெற்றிகரமாக நடத்தியுள்ளனர்.

முதல் நாள் பொது நிகழ்ச்சியில் மாதர் சங்கத்தின் மத்திய, மாநிலத் தலைவர்கள் பலரும் கலந்து கொண்டனர். "பெண்ணினத்தின் பேருரிமையைப் பெற்றிட, பேரெழுச்சியாய் வாரீர்!" என்பது எங்கும் கோஷமாக



ஒலித்தது. பெண்கள் மீது கட்டவிழ்த்து விடப்படும் வன்முறை பற்றி மிகக் கடுமையாக சாடிப் பேசினார் மைதிலி சிவராமன். 'தொட்டில் குழந்தைகள் நாலைந்தினை கான்வென்ட் படிப்பு படிக்க வைப்பதாக அரசு சொல்வது தவறான விளைவை உண்டாக்கும். குடும்பச் சூழலில் தந்து கொடுக்கப்படாமல் வளர்க்கப்படும் குழந்தையின் வளர்ச்சி உடல், மன அளவு ஆரோக்கியமானதாக இருக்க முடியாது. மேலும் அரசுத் தொட்டிலில் குழந்தைகள் போடப்படாததால் மட்டும் பெண் சிசுக் கொலைகள் குறைந்து விட்டதாக பெருமைப்பட முடியாது. அரசின் புள்ளி விவரப்படி பெண்கள் பிறப்பு விகிதமே குறைந்துதான் காணப்படுகிறது' என்றும் தன் எண்ணங்களை வெளிப்படுத்தினார்.

பாராளுமன்ற உறுப்பினர் கமிலா கோபால் (இவர் இந்தச் சங்கத்தின் அகில இந்தியத் தலைவர்) "அரசின் புதிய பொருளாதாரக் கொள்கை பெண்களுக்கு அநீதியானது. விலைவாசி ஏறும், பெண்கள் வேலை வாய்ப்பு குறையும். வீட்டிலே மீதம் உள்ளதைத்தான் ஒரு பெண் உண்பது வழக்கம். ஏறிவிட்ட விலைவாசியால் அவளது உணவு மேலும் குறைந்து நோய்வாய்ப்படும் நிலைதான் உருவாகும். பெண்களின் பிரச்னை , சமுதாயப் பிரச்சனையாகும். தனிப்பட்ட பிரச்னையல்ல. மேலும் பெண்களின் முன்னேற்றத்துக்கான செயல்பாடுகள் அனைத்தும், அரசியல் செயல்பாட்டோடு இணைந்ததே ஆகும். பெண்கள் அரசியலில் பெருமளவு ஈடுபட வேண்டும். சமுதாய மாற்றத்துக்காக நடத்தப்படும் போராட்டங்களில் பெண்கள் பங்கு கொண்டால்தான் பெண் விடுதலை எனும் கனவு நனவாகும்" என்றார் தன் தலைமை உரையில்.

இப்போதுள்ள சிவில் சட்டம் பற்றி, அகில இந்திய பொதுச் செயலாளர் பிருந்தா கராத் விளக்கினார். "இன்றைக்கு சிவில், கிரிமினல், மதம் சார்ந்த சட்டங்கள் நல்ல விஷயத்தை மட்டும் உள்ளடக்கியதல்ல. ஒரே மாதிரி சிவில் சட்டம் என்று பேசுவதைவிட, ஆண், பெண் சமத்துவ அடிப்படையில் குறிப்பிட்ட விஷயங்களில், தனித்தனி சட்டம் இயற்ற வேண்டியது கடமையாகிறது. உதாரணமாக, திருமணத்துக்குப் பிறகு சொத்து சேர்க்கும்போது பெண்ணின் பங்கு அதில் நேரிடையாகவோ (அலுவலகம் சென்று சம்பாதித்து) மறைமுகமாகவோ (வீட்டு வேலைகள் அனைத்தையும் செய்து) கிடைக்கின்றது. அதனால் சொத்தில் சமபங்கு கிடைக்க வேண்டும். இதுபோன்ற சமயத்தில் பெண்ணுக்கு அநீதி நடக்கின்றது. ஒரு டாக்டர் தன் குடும்ப உறவு முறிந்ததன் காரணமாக தன் மெடிகல் உபகரணங்கள், வங்கி சேமிப்பு அனைத்தையும் விட்டுவிட்டு கட்டிய புடவையுடன் வெளிவந்து எங்களிடம் முறையிட்டார். சமசொத்துரிமை இல்லாத அநியாயம் இங்கு வெளிப்படையாகத் தெரிகிறதல்லவா? அதற்கு உடனடி சட்டம் தேவை. திருமணம் மதச் சடங்குடன் நடந்தாலும் பதிவு செய்யப்பட வேண்டும். நேச்சுரல் கார்டியன் அப்பாவாம்! அப்பா இல்லாவிடில்தான் அம்மாவாம்! யார் சொன்னது? நேச்சுரல் கார்டியன் அம்மாதானே? அவள் சொல்லித்தானே அப்பாவையே தெரியும்!"

என்றதும் பலத்த கை தட்டல்கள் எழும்பி அடங்க பல மணித்துளிகள் ஆனது.

"பாலின சமத்துவத்தின் அடிப்படையிலான குடும்பச் சட்டம் வரவேண்டும். மதம் சார்ந்த சட்டங்கள் இருத்தப்பட வேண்டும்.

இருஸ்துவப் பெண்கள், சொத்துரிமைக்கும், விவாகரத்து உரிமைகள் விஸ்தரிக்கப்பட வேண்டும் என்றும் போராட ஆரம்பித்து விட்டதே நல்ல அறிகுறியல்லவா? மூன்று முறை 'தலாக்' சொல்லி விவாகரத்து செய்வதிலும் மாறுதல் தேடுங்கள் என்பதுடன், ஜீவனாம்சம் கேட்க முடியாது எனும் சட்டத்தை முஸ்லீம் பெண்கள் மாற்ற முயற்சித்திருப்பதும் சந்தோஷமான செய்தி" என்றார் பலத்த கரகோஷத்தினிடையே.

அடுத்து, வன்முறைக்கு உட்படுத்தப்பட்டும், துணிந்து வாழ்ந்து காட்டும் பெண்களை மேடையில் அழைத்து அறிமுகப்படுத்திய போதும், அவர்கள் தமக்கு நேர்ந்த கொடுமைகளை, சித்திரவதைகளை விவரித்தபோதும் அரங்கம் முழுவதும் காத்த அமைதி அவர்களின் உள்ளக்குமுறல்களாக எதிரொலித்தது. இனம்புரியாத பாரம் நெஞ்சை அழுத்தி நின்றது.

கோவை மாவட்டம், சின்னம்பதியில் சந்தனக்கடத்தல் வீரப்பனைப் பிடிக்க அனுப்பபட்ட சிறப்புக் காவல் படையினரால் பலாத்காரம் செய்யப்பட்ட பாப்பாத்தி, மலிலாள், இச்சம்பவம் வெளிவர உதவிய ராஜாத்தி மூவரும் மேடைக்கு வந்தபோது கரகோஷம் விண்ணைப் பிளந்தது!

"எங்களுக்குக் குடும்ப கார்டு கூட இல்லை. அடிப்படை வசதியில்லை. ஆனால் எங்களுக்குக் கொடுமை நடந்த பிறகு, எதையும் வெளியே சொல்லக் கூடாது. உங்களுக்கு ரேஷன்காார்டு தருகிறோம். (கற்பின் விலை ரேஷன்கார்டுதானா என்று கொதித்தது உள்ளம்) என்று மிரட்டி வெள்ளைத்தாளில் கையெழுத்து வாங்கினர். ஜனநாயக மாதர் சங்கம் எங்களுக்கு ஆதரவாகப் பேச வந்த போது நாங்கள் பயந்து ஒத்துழைக்கவில்லை. மீண்டும், மீண்டும் விடாமல் வந்ததுடன், வேறு ஒரு பெண்ணுக்கு இதுபோல கொடுமை வரக் கூடாது என்று கண்டிக்க முயல்வதை எடுத்துச் சொல்லி தைரியம் தந்தபிறகுதான் ஒத்துழைத்தோம். பிறகு எங்களுக்குப் பாதுகாப்பும், ஆதரவும் தந்தனர். இவர்கள் தந்த தைரியம் எங்களை உற்சாகப்படுத்தியுள்ளது. இந்த இயக்கத்துடன் எங்கள் இனம் முழுவதும் சேர்ந்து ஒத்துழைப்போம். தன்னம்பிக்கையுடன் இனி வாழ்வோம்" என்று பேசியதும் கூட்டம் உணர்ச்சிவசப்பட்டது.

தூத்துக்குடி மகளிர் காவல் நிலையத்தில் அடித்துக் கொலை செய்யப்பட்ட பார்வதியின் சகோதரி சுப்பத்தாய் தனது தங்கைக்கு மகளிர் காவல் நிலையத்தில் இழைக்கப்பட்ட கொடுமையை விவரித்தபோது அனைவரின் கண்களும் குளமாயின.

வாச்சாத்தியில், வீரப்பனைப் பிடிக்கச் சென்ற காவல் துறையினர் அந்த கிராமத்தில் நடத்திய அட்டூழியங்களை, வீடுகளைத் தகர்த்து, பண்ட பாத்திரங்களைத் தூக்கியடித்து, பலாத்காரம் செய்து, கொட்டாங்கச்சியில் நீர் அருந்தும் நிலைக்குத் தள்ளிய கொடுமைகளை, பாதிக்கப்பட்டு, பலாத்காரம் செய்யப்பட்ட பதினெட்டு பெண்களில் ஒருவரான சித்ரா உள்ளம் உருக விவரித்ததும் அரங்கம் ஸ்தம்பித்தது.

சென்னை மயிலையில் பதினாலு வயது சிறுவன் சதீஷ்குமாரை விசாரணைக்கு அழைத்துச் சென்று, அடித்தே கொன்று வீதியில் போட்டதை அதன் தாய் வள்ளி கடைசியாகக் கூறி முடித்ததோடு,

"இங்கு வந்துள்ள பெண்களின் சோகத்தை ஒப்பிடும்போது இருகோடுகள் தத்துவம் போல என் சோகம் ஒன்றுமேயில்லை என்று ஆகிவிட்டது" என்று மனம் வருந்தியதுடன், பெண்கள் கொடுமையை எதிர்த்துப் போராடும் பெண்களில் ஒருத்தியாக இனி நிச்சயம் நான் இருப்பேன் என்று உணர்ச்சிக் கொந்தளிப்புடன் சூளுரைத்தார்.

---



புளிக்காச்சல் செய்யும் பொழுது அது பதமாகிவிட்டதா என்று தெரிந்து கொள்ள ஒரு ஐடியா. கொதித்து முடித்தபின் எண்ணெயெல்லாம் மேலே வந்து தெளிவாக மிதக்கும். அதுதான் அடையாளம். உடனே இறக்கிவிட வேண்டும்.

– ஆனந்தவல்லி

## வீட்டிலேயே கிளைன்சிங் மில்க்'

இரவு படுக்கப் போகுமுன் ஒரு கிண்ணத்தில் கொஞ்சம் காய்ச்சாத பால் எடுத்து ஃப்ரிட்ஜில் வைத்து அடுத்த நாள் காலை எழுந்தவுடன் கொஞ்சம் பஞ்சை எடுத்து அதில் முக்கி முகத்தில் மென்மையாக ஒற்றி எடுத்தேன். அதன் பிறகு கஸ்தூரி மஞ்சள், பச்சைப் பயிறு மாவு கலந்து முகத்தைக் கழுவினேன். முகத்தில் உள்ள அழுக்குகள் நீங்கி முகம் மாசு மறுவின்றி 'பளிச்' என்று 'பேஷியல்' செய்தது போலாகி விட்டது!

— விஜயா சுப்பிரமணியம்



அடுத்து சாதனை படைத்த பெண்களை மேடைக்கு அழைத்தனர். விளையாட்டு வீராங்கனை அமுதா, பஸ் டிரைவர் புஷ்பம், புதுக்கோட்டை அறிவொளி இயக்கத்துக்கு ஒற்றைக் கையால் புத்தகங்களைச் சுமந்து சென்று சேவை செய்யும் கன்னியாகுமரி இவர்கள் கௌரவிக்கப்பட்டனர்.

"ஆணுக்குப் பெண் சமம் என்ற அறை கூவல் விடுக்கும் நம் நாட்டிலே நான் டிராக்டர், பஸ் ஓட்டக் கற்றுக் கொண்டுள்ளேன். டயர் மாத்துவேன். ரிப்பேர்கள் செய்வேன். இருந்தும் லாரி லைசென்ஸ் பெண்களுக்குக் கிடையாதாம். சிறு விபத்து ஏற்பட்டாலும் இதுக்குத்தான் பெண்ணுக்கு லைசென்ஸ் தரக் கூடாது என்று பாய்ந்து, வரிந்து கட்டிக் கொண்டு வருகின்றனர். இத்தனை தெரிந்தும் எனக்கு வேலையில்லை. சரி! பஸ், டிராக்டர், லாரி வேண்டாம். அரசு மருத்துவமனை ஆம்புலன்ஸ்கள், அரசு அதிகாரிகளின் ஜீப்புகள் ஓட்டும் வேலையாவது தரலாமே! இன்னும் ஆறுமாதத்தில் அரசு வேலைக்கான வயது வரம்பும் தாண்டிவிடும். இன்னும் ஏன் பெண்களுக்கு இந்த நிலை" என்று தன் ஏக்கத்தின் மூலம் கோரிக்கை விடுத்தார்.

ஜனநாயக மாதர் சங்கத்தினர் பதினைந்து வருடங்களாக 'மகளிர் சிந்தனை' எனும் மாத இதழை நடத்துகின்றனர். கோவை, வட ஆற்காடு, புதுக்கோட்டை அறிவொளி இயக்கத்தினரும், தமிழகத்திலும் விற்பனை யாகும் இதில் தொடர்ந்து படைப்புகள் தரும் புதுக்கோட்டை மு.முருகேஷுக்கும், டாக்டர் ஜெயம் கண்ணனுக்கும் மரியாதை செய்து கௌரவித்தனர்.

மூன்றாம் நாள் மாலை வட பழனி விஜயராணி மஹாலிலிருந்து தியாகராய நகர் பனகல் பார்க் வரை ஊர்வலம் நடந்தது. பெண்கள் கைகளில் சமத்துவம், ஜனநாயகம், பெண் விடுதலை என்று எழுதப்பட்ட பெண் உருவம் பதித்த அட்டைகள் இருந்தன. பதினைந்தாயிரம் பெண்களும், ஆர்ப்பாட்டம், சத்தமின்றி, ஆரவாரமின்றி அமைதிகாத்து ஊர்வலத்தின் முன்னே தப்பாட்டம் கலைகுழுவினர் செல்ல நடந்து சென்றது அனைவரின் பாராட்டுக்குரியது.

பொதுக் கூட்டத்தில் பேசிய அனைவரும் முதல் இரண்டு நாட்கள் மாநாட்டில் நடந்ததை விவரித்தனர். "ஈவ் டீசிங்" என்பது இன்று அதிகமாகிவிட்ட சூழ்நிலையில் இளைஞர்கள், மாணவர்களை அழைத்து அதற்குத் தூண்டுதலாக இருப்பது எது? என்று முதல் கட்டமாக விவாதிக்கவும், பேச்சு வார்த்தை நடத்தவும் இருக்கிறோம். பேருந்து களில் இந்தத் தொல்லை அதிகம் இருப்பதால் முன்பாதி முழுவதும் பெண்களுக்கும், பின்பாதி முழுவதும் ஆண்களுக்கும் இருக்க வேண்டும் என்ற கோரிக்கையைப் போக்கு வரத்துச் செயலாளர் திரு. ஆறுமுகம் ஐ.ஏ.எஸ். அவர்களின் முன் வைத்ததில் செப்டம்பர் மாதம் பரிசோதனை செய்ய உத்தரவிடுவதாக வாக்களித்தார்" என்றார் வாசுகி.

அனல் வீசும், உணர்ச்சிப் பிழம்பாகப் பேசிய பிருந்தா கராத்தின் அழகிய ஆங்கில உரையை வாசுகி அதே உணர்வுகள் பிரதிபலிக்க எளிமையான, சீரான தமிழில் மொழி பெயர்த்து அனைவரின் பாராட் டையும் பெற்றார்.

விஷன் 2000 மதர் தெரஸாவால் ஆரம் பிக்கப்பட்டு இரண்டு வருடமாகியும் அதன்படி எதுவும் நடக்கவில்லை. சமவேலைக் குச் சமகூலி என்பது ஏட்டில் மட்டுமே

உள்ளது. நடைமுறைப்படுத்தப்படவில்லை. பெண்கள் வீட்டில் செய்யும் வேலைகளைக் கணக்கெடுப்பதில்லை. உத்திரபிரதேசத்தில் நடந்த ஆய்வின்படி ஒரு ஆண் 730 மணி நேரமும், ஒரு கால்நடை 1030 மணிநேரமும் வேலை செய்தால் ஒரு பெண் வயலிலே, வீட்டிலே, குழந்தைப் பராமரிப்பிலே, கால்நடை பேணுவதிலே அதைவிட மூன்றில் ஒருபங்கு வேலை அதிகம் செய்கிறாள். பாவம், பெண்களாம்! எதற்குப் பாவம்! அந்த வார்த்தையையே எடுத்துவிடுங்கள். சமூக, பொருளாதார, அரசியல் அமைப்பை நாங்கள் மாற்றி இந்தியாவின் நிலையை உயர்த்தப் போகிறோம்" என்றும் முழங்கினார்.

''திரைப்படங்களில், விளம்பரங்களில் ஆபாசம் பற்றி நாங்கள் தட்டிக் கேட்ட பிறகு தான் சென்சார் போர்டில் பெண்கள் தேவை என்று வலியுறுத்தியதால்தான் எங்கள் அமைப்பிலிருந்து பத்துபேர் தணிக்கைக் குழுவில் இருக்கின்றனர். தற்போது- தொடர்ந்து இருப்பத்திநாலு மணிநேரமும் தொலைக் காட்சி நிகழ்ச்சிகளால் குடும்பச் சூழல், பாசம், உபசரிப்பு, ஆரோக்கியம் அனைத்தும் கெடுவதால் போராட இருக்கிறோம்" என்றார் மைதிலி சிவராமன்.

ஐம்பது ஆண்டுகளாக மாதர்சங்கப் பணியில் அனுபவம், அரசியல் அனுபவம் உள்ளவர் பாப்பா உமாநாத். அரசியல் காரணமாக சிறை சென்றவரும் கூட! சிறுவயது முதல் பாலர் சங்க உறுப்பினராகி, ரயில்வே, விவசாயக் குடும்பத்தினர் சங்கத்தில் சேர்ந்து பின் போர்க்காலத்தில் கும்மியடித்துப் பாடி நிதி திரட்டியும் துணிமணிகளை வசூலித்து பஞ்சத்தில் இருந்த நாடுகளுக்கு அனுப்பி வைத்து தன்னை முழுநேர சேவகியாக ஆக்கிக் கொண்டவர். 73ம் வருடம் ஜனநாயக மாதர் சங்கம் தொடங்கியதிலிருந்து பொதுச் செயலாளராக இருந்து தற்போது தலைவராகி உள்ளார். "பெண்கள் நிறைய முன்னேறியுள்ளனர். போலிஸைக் கண்டு பயப்படுவதில்லை. விசாரணைக்கு அழைத்தால் வாரண்ட் உள்ளதா என்று கேட்கிறார்கள். மாலை ஐந்து மணிக்கு மேல் ஏன் காவலில் வைக்கிறீர்கள்? என்று கேள்வி கேட்கின்றனர். இவையெல்லாம் எங்கள் சங்கத்தின் பெரும் சாதனை என்று சொல்லலாம்" என்கிறார் மகிழ்வுடன்.

பெண்ணை போதைப் பொருளாக சுமப்பவளாக, சோதனைக் கூடமாக நினைக்கும், ஆக்கும் சமூகத்தை மாற்ற இவர்கள் அணி அணியாய்ப் போராட ஆரம்பித்து விட்டனர்.

**- பானுமதி ராமச்சந்திரன்**







வழங்குகிறோம்... கேசப் பராமரிப்பில் ஒரு புதுமை... இயற்கையாகவே
இயற்கை மூலிகைகளின் நன்மை
+
உபயோகிக்க மிகவும் எளிது
Raaga
P-L-U-S
இயற்கை மூலிகைகளாலான சீயக்காய், செம்பருத்தி, மருதாணி, நெல்லிக்காய் மற்றும் பல சிறந்த மூலிகைகளுடன்+சோற்றுக் கற்றாழையின் (Aloe Vera) நேச்சுரல் கண்டிஷனரின் நலனுடன் மிகவும் எளிதான வடிவில் உங்களுக்கு வழங்குகிறோம் புதிய ராகா ப்ளஸ் நேச்சுரல் ஹேர் வாஷ் பேஸ்ட்.
சோற்றுக் கற்றாழையின் (Aloe Vera) நேச்சுரல் கண்டிஷனரின் நலனை கொண்ட ராகா ப்ளஸ் உங்கள் கேசத்திற்கு தருகிறது நம்ப முடியாத மென்மை + பளபளப்பு.
BEAUTY
Raaga
P-L-U-S
NATURAL HAIR WASH
ஆரோக்கியம் + அதிமென்மை, உங்கள் கேசத்திற்கு... இயற்கையாகவே!

# உஷா ஸ்ரீகுமார்



"ஆக மொத்தம் இருபத்தியெட்டு ரூபாய் கோவிந்தாவா? குட். இதுவரைக்கும் இப்படி ஒரு ரெண்டு மூணாயிரம் ஏமாந்து தொலைச் சிருப்பியா?"

என் கணவரின் குரலில்தான் எத்தனை எகத்தாளம்...

"பழக்காரன்கிட்டே சேஞ்ச் வாங்குவதற்குள்ளே நீங்கதானே எட்டு தடவை ஹாரனை அழுத்தினீங்க. அந்தப் பதட்டத்துலதான் காசை விட்டேன். இல்லாட்டி நான் எதை ஏமாந்து விட்டே னாம்?"

"ஏண்ம. ஆர்த்தி... போன வருஷம் அந்த கோமளாகிட்டே புடவை சீட்டு சேர்த்தியே, நான் சொல்வதைக் கேட்காம... அவ கடைசில உன் தலைல ஒரு சாயம் போற பீத்தலைக் கட்டி னாளே. எண்பது ரூபாய் கூட பெறாதே. நீ முன்னூறு கட்டி னியா, ஐநூறு கட்டினியா? என் பிள்ளை சம்பாத்தியமெல்லாம் எப்படி எப்படியோ போறது... ஹூம்!"

என் மாமியார் சமயம் பார்த்து எண்ணெய் ஊற்று வதில் எக்ஸ்பர்ட்!

"ஆமாம் நான் ஏமாளி தான். இருக்கட்டும். உங்க கதையெல்லாம் எனக்குத் தெரியாதா என்ன? கட்டை மாதிரியிருந்த பாம்பே வளை யலை 'பாலீஷ்' போட்டு கம்பி வளையலா யார் மாற்றி னாளாம்? சொன்னால் பொல்லாப்பு."

"உங்க ஏமாளித்தனம் புரிஞ்சுதான் தினமும் ஆபீஸ்ல ஒவ்வொருத் தரா ஐம்பதும், நூறு மாய் கைமாற்று வாங் கிண்டு போறா... யார்கிட்டேயாவது

திருப்பிக் கேட்டு வாங்கியிருக்கீங்களா குடுத்த காசை? உங்க டியர் ப்ரெண்டு சம்பந்தமூர்த்தி இதுவரை அட்லீஸ்ட் ஒரு மூவாயிரமாவது வாங்கியிருப்பாரே... உங்களால அதுல ஒரு முன்னூறு ரூபாயையாவது திருப்பி



# எகிப்து நாட்டின் இளவரசி

வசூல் செஞ்சு காட்ட முடியுமா?"

நான் பேசி முடிக்கவில்லை. என் மாமியாருக்குக் கோபத்தில் நுனி மூக்கு சிவந்தது. கன்னம் துடித்தது.

"டேய் கோபி.. உடனே கிளம்பு. பணத்தை வசூல் பண்ண உடனடியா ஏற்பாடு பண்ணு. பணமா பெயரவில்லையென்றால் அவன் வீட்டிலிருந்து எதையாவது 'அட்டாச்' செய்துண்டு வா!"

என் மாமியார் அந்தக் கால 'மைலாப்பூர் வக்கிலாத்து மாட்டுப் பெண். 'சிற்சில' லா பாயிண்ட்டுகள் அறிந்தவர். அவ்வப்போது 'அட்ஜர்ன்', 'ஸ்டே' 'நோ மோர் க்வெஸ்டியன்ஸ்', 'டிக்ரீ' போன்ற எனக்குப் புரியாத வார்த்தைகளை அள்ளி வீசுவதில் சமர்த்தர்!

வீராவேசமாக போன என் கணவர் திரும்பி வந்தார், கையில் ஒரு மூடி போட்ட கூடையுடன்.

"அட, சம்பந்தமூர்த்தி மூவாயிரத்தையும் சில்லறையாகத் தந்துட்டானா?" என்றபடி கூடைக்குள் கையை விட்டேன். விட்ட சுருக்கில் அலறிக் கொண்டு கையை வெளியே இழுத்தேன்.

பின்னே... கூடையிலிருந்த காக தய்க்... தய்க்..." என்று கத்தினால் நீங்கள் பயப்பட மாட்டீர்களா, என்ன?

"ஷ்ஷ்ஷ்... அலறாதே. மூவாயிரத்துக்குப் பதில் ஐயாயிரம் பெறுமான உசத்தி நாய்க்குட்டி. 'லாப்ரடார்' வகை."

"இதொண்ணுதான் குறைச்சல். இனிமேல் நான் இது கூடவும் அல்லாடணுமா?"

சந்தடி கேட்டு எழுந்து வந்தார் என் மாமியார்.

"ஏண்டா, அவன் வீட்டு பீரோ, ஸ்கூட்டர், டீவி, எதையாவது



எங்கள் வீட்டில் விருந்துக்குச் செய்த கேசரி, வடை, பஜ்ஜி நிறைய மீதியாகி விட்டது. அப்படியே எல்லா வற்றையும் ஃப்ரிஜ்ஜில் வைத்து மூடினேன். காலையில் இட்லி பாத்திரத்தில் தண்ணீர் வைத்துக் கொதித்தவுடன் கேசரியை ஒரு பாத்திரத்தில் வைத்து 5 நிமிடம் சூடேற்றித் திறந்தால் நெய், இளகி, புதிதாக செய்தது போன்ற கேசரி ரெடி. இதைப் போல இட்லி தட்டுகளில் மெதுவடை, பஜ்ஜியை வைத்து சூடு பண்ணினேன். மெதுவடை மிக மெதுவாக நன்றாக இருந்தது.

- எம். குமுதம்

'அட்டாச்' பண்ணிண்டு வருவேன்னு நினைச்சா இப்படி அசட்டுத்தனமாய் நாய்க்குட்டியை கொண்டு வந்திருக்கியே. என் தலையெழுத்து!" அவர் தோள் பட்டை ஓரிரு முறைகள் முகவாய்க் கட்டை வரை ஏறி இறங்கியது.

"அம்மா, இது சாதா நாய்க் குட்டியில்லை. ரொம்ப உசந்த ஜாதி. நம்ம வீடு தேடி வந்த லட்சுமி. வருஷம் பத்து குட்டி போடும். ஒரு குட்டியின் விலை ஐயாயிரம்னா நீயே கணக்குப் போடேன்."

"ஹை! நாய்க்குட்டி..." என்று கத்திக் கொண்டே உள்ளே ஓடி வந்தனர் அஷ்வினும், அகல்யாவும்.

"ப்ளீஸ்ம்மா. நான் தூக்கிக்கறேனே."

"போடா. இது என் பெட். இல்லேப்பா?"

"ஹாய் ஆர்த்தி! நாய்க்குட்டி வாங்கியிருக் கீங்களா?" என்றபடி உள்ளே வந்தவள் என் தோழி சந்தியா. சரித்திர ஆசிரியை.

"என்ன பெயர் வைக்கப் போறே?"

பெயர்கள் அலசப்பட்டன.

ஜூலி, ஸ்நோயி, ஜில், டினா, மின்னி, மோலி, லிஸ்ஸி, சூஸி, பெட்ஸி...

"ஏன் இங்லீஷ் பெயர் வைக்கணும்? இது ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தின் தாக்கம்" ஆணித்தரமாய் முழங்கினாள் சந்தியா.

"வேறென்ன பெயர் வைக்கலாம், நீதான் சொல்லேண்டி."

அப்போதுதான் அந்தச் சின்னக் குட்டி லேசாய் கண்விழித்து ஒருவித ஸ்டைலாகக் கொட்டாவி விட்டது.

"அட, ஜோராய் பார்க்கிறது பாரு. பெரிசானா ரொம்ப மெஜஸ்டிக்காக ஒரு ராணி மாதிரி, இளவரசி மாதிரி இருக்கும் பாரேன். 'நெஃப்ரிடீட்டீ'ன்னு பேரு வைய்யேன்."

"என்ன டீட்டீ?"

"நெஃப்ரிட்டீட்டீ. அந்தக் கால எகிப்திய இளவரசி. ரொம்ப அழகானவள். கி.மு. இரண்டாயிரத்து..."

சந்தியா சரித்திரக் கிளாஸ் ஆரம்பித்தாள்.

ஆக...

அந்தக் கூடையிலேயே அந்தப் பச்சிளம் குட்டிக்குத் தொட்டில், காப்பு, ஜாதகரணம், நாமகரணம் எல்லாம் இனிதே நடந்து முடிந்தது.

வீடெங்கும் 'நெஃப்ரிடீட்டீ' என்ற நாமமே எதிரொலித்தது.

என் கணவர் கேட்டில் ஒரு பெரிய 'நாய் ஜாக்கிரதை' போர்டை மாட்டினார்.

நெஃப்ரிடீட்டீ வந்த முதல் மூன்று நாட்களில் அவள் பாதமே தரையைத் தொடவில்லை.

அஷ்வினும், அகல்யாவும் மாற்றி மாற்றி அந்தக் குட்டியைத் தூக்கிக் கொண்டே அலைந்தனர். அவ்வப்போது டீவி மேல் உட்கார்த்தி வைத்து அழகு பார்த்தனர். சாட்டின் ரிப்பனால் 'போ' கட்டி விட்டனர். ஐநூறு முத்தங்கள் கொடுத்தனர். ஒரு முழு காட்பரீஸ் சாக்லேட்டை கையில் வைத்துக் கொண்டு "தின்னு டீட்டீ!" (வசதி கருதி வீட்டார் பெயரைச் சுருக்கி விட்டனர்)

"சமர்த்து டீட்டீ. செல்லக் குட்டி டீட்டீ. கண்ணு ஸ்வீட் டீட்டீ" என்று கொஞ்சினர்.

என் மாமியார் "வெதுவெதுப்பாய் பால்ல சர்க்கரை போட்டுக் கொடு. கொஞ்சம் வைட்டமின் சொட்டு மருந்து கொடு. புஷ்டியா வளரும்" என்றார் மிகக் கரிசனத்துடன்.

தன் தோழிகள், தங்கை, ஓர்ப்படி, சம்பந்திக்கு சம்பந்தி, அத்தை மகள் என்று அனைவருக்கும் போன் செய்து வீட்டுக்கு வந்திருக்கும் 'ரொம்ப உசத்தி' நாயின் புராணம் பாடினார். அது போடும் குட்டிகளை சல்லிசாய் நாலாயிரத்துக்குத் தருவதாய் பலருக்கு வாக்களித்தார். கிட்டத்தட்ட பதினேழு குட்டிகளுக்கு 'அட்வான்ஸ் புக்கிங்' செய்து கொண்டார்.

டீட்டீ தளர்நடை போட்டபடி வீடெங்கும் திரிய ஆரம்பித்தாள். கண்ணில்படாத இண்டு, இடுக்குகளில் இயற்கை உபாதைகளை ஆற்றிக் கொள்ள ஆரம்பித்தாள்.


அன்று,
ராதையின் கழுத்தை
அலங்கரித்திருக்கும் இந்த ஆரம்...
பண்டைப் பாரம்பரியத்திலும் புராணச் சிறப்பிலும் ஆழ்ந்து எழுந்தது
அன்று கல்லிலே செதுக்கப்பட்ட மகத்தான கலைப் படைப்புகள் தந்த
ஆர்வத்தால் உருவானது. ராதா - ருக்மிணி சமேத கிருஷ்ண
பகவானின் அழகிய தோற்றத்தை எழிலுற எடுத்துக் காட்டும் அற்புதப்
படைப்பு. இயற்கையான சிவப்புக் கல் மாணிக்கங்களும்,
பச்சைக் கல் மரகதங்களும் எழில் சேர்க்க, மாசற்ற தங்கத்தில்
அழகு வடிவத்தில் அற்புதமாய் அமைந்த பதக்கம்.
பாரம்பரியில் 100 ஆண்டுகளுக்கும் மேலாக இணைந்து பெற்ற
சிறந்த அனுபவத்திற்கு இது மற்றுமொரு சான்று. அந்த
அனுபவம் மேத்தா ஜுவல்லரியில் மேலும் தொடருகிறது --
சுரேந்திர மேத்தா, துஷார், நரேஷ் மற்றும் அஜய் ஆகியோரால்.
நேரம் : காலை 10.00 முதல் பிற்பகல் 1.30 வரை.
மற்றும்
பிற்பகல் 2.30 முதல் இரவு 7.00 வரை.
Mehta
JEWELLERY
40, திருமலைப் பிள்ளை ரோடு, தி. நகர், சென்னை 600 017. தொலைபேசி : 8283130 ஃபேக்ஸ் : 044-8277885
ARTIG/1873

எனக்கு பெண்டு நிமிர்ந்தது.

"அஷ்வின். டிட்டியை கொஞ்சம் பிடிடா. ஓடுகிறது."

"போம்மா. என் டெஸ்ட்டுக்குப் படிக்க றேன்."

"அகல்யா, டிட்டிக்குப் பால் தரணும். சாசரை எடுத்துண்டு வா."

"டிட்டி அஷ்வின்னோட செல்லக்குட்டி. அவனையே கூப்பிட்டுக்கோம்மா."

"ஏண்டிம்மா... இந்த சனியனை கொஞ்சம் பிடியேன். என் மடிப் புடவையில் வந்து விழப் போறது!"

"அந்த நாயை வாயை மூடச் சொல்லு ஆர்த்தி. 'நியூஸ் டுடே' பார்க்கறேன். விடாமல் கத்தறது பார்."

ஆகமொத்தம்....

டிட்டி முழுக்க முழுக்க என் பொறுப்பானது!

நெஃப்ரிடிட்டி பால், ரொட்டி, சாதம், பிஸ்கட் தவிர புத்தம் புதிய செய்தித்தாள், தபால்கார்டு, அழுக்கு சாக்ஸ், பழைய ஷூக்கள், கர்ட்டன் துணி, சோபா, மேஜைக் கால்கள், அஷ்வினின் கணக்கு நோட், அகல்யாவின் கிரேயான் என்று பலவித சத்து நிறைந்த உணவு வகைகளை ருசித்துப் புசித்து நாளொரு மேனி, பொழுதொரு வண்ணம் என்று வளர ஆரம்பித்தது.

"அதென்ன பழக்கம்... பூஜை ரூமுக்குள் வருவதும், சமையல்கட்டில் மோப்பம் பிடிப்பதும்? கட்டிப் போடு வாசலில்," என்று என் மாமியார் உத்தரவிட புதுச்சங்கிலியால் பிணைக்கப்பட்டு ஜன்னல் கம்பியில் கட்டப்பட்ட டிட்டி, "இது நியாயமா? தர்மமா?" என்ற பொருள்பட என்னைப் பார்த்தாள்.

'கட்டுண்டோம், காத்திருப்போம்' என்பதில் டிட்டிக்கு அதிக நம்பிக்கையில்லை போலும். இல்லாவிட்டால் விடிய விடிய அதிபயங்கரமாய் ஊளையிட்டு அக்கம் பக்கத்தினரை கதி கலங்க அடித்திருக்கமாட்டாள்.

"சார், நாய் ஊளையிடாம பாத்துக்குங்க. ப்ளீஸ். எங்க பாட்டி வேற இப்பவோ, அப்பவோன்னு இருக்காங்க" என்று பக்கத்து வீட்டு சுந்தரேசன் வந்து முறையிட டிட்டிக்கு மீண்டும் விடுதலை!

"டிசிப்ளினே இல்லாம வளர்க்கறே. நான் பழக்கறேன் பார்," என்ற என் கணவர் நான்கு நாட்கள் டிட்டிக்கு 'ஸ்டாண்ட்', 'சிட்', 'ஜம்ப்' 'ஷேக்ஹாண்ட்ஸ்', 'ரன்' போன்ற உத்தரவுகளை தொண்டை வரள இட்டுக் கொண்டிருந்தார்.

"என்னமா ட்ரெய்னிங் கொடுத்திருக்கேன் பார், முன்னாடி ரொட்டியை வைத்து விட்டு நான் 'சாப்பிடு'ன்னு சொல்லும் வரை தொடாது" என்றபடி வித்தை காட்ட ஆரம்பித்தார்.

"டிட்டி, ஸ்டாண்ட்."

டிட்டி முறுக்கிக் கொண்டு சோம்பல் முறித்தது.

"சிட்டௌன்."

எங்கோ பார்த்து வாலை ஆட்டியது.

"ஷேக் ஹேண்ட்ஸ்."

'வள்' என்று குலைத்தபடி அவர் கையிலிருந்த ரொட்டித் துண்டை பிடுங்கிக் கொண்டு என் மாமியாரின் கட்டிலுக்கடியில் ஓடி ஒளிந்து கொண்டது.

என் கணவர் முகத்தைத் துடைத்துக் கொண் டார்.

தீபாவளிக்கு இரண்டு வாரம் முன்பே அஷ்வின் ஒரு பெரிய பார்சல் பட்டாசு வாங்கி வந்தான். அவை நன்றாக சத்தமாக வெடிக்குமா என்று பார்க்க ஒரு சின்ன ஹைட்ரஜன் பாம்மை வெடிக்க எங்கோ மாமரத்துக் கடியே உலாத்திக் கொண்டிருந்த டிட்டி பயந்து நடுங்கி வாலைக் குழைத்துக் கொண்டு நாலு கால் பாய்ச்சலில் வீட்டுக்குள் ஓடி வந்து பத்திரமாக சோபாவுக்குக் கீழே ஒளிந்து கொண்டவள், தீபாவளி முடியும் வரை வெளியே தலைகாட்டவில்லை!

இல்லையில்லை... நான் தீபாவளி பட்சணம்

காலையில் இட்லி, தோசை சாப்பிட்டுப் பழக்கப்பட்டவர்களுக்கு கோதுமை தோசை என்றால் அதன் வழவழப்பின் காரணமாக பலருக்குப் பிடிக்காது. எனவே கோதுமையுடன் சம அளவு மைதா, ரவை இரண்டையும் சேர்த்து தோசை சுட்டால் கோதுமையின் வழவழப்பு நீங்கி, ரவையின் மொற மொறப்புடன், மைதாவின் சுவையும் சேர்ந்து ருசியாகவும் நிறையச் சாப்பிட வேண்டும் என்ற ஆர்வமும் தோன்றும். முச்சுவைத் தோசை என்று செல்லப் பெயரிட்டும் அழைக்கலாம்.

— கே. பாமா





வீட்டில் தண்ணீர் காயவைக்க உதவும் பாய்லரின் அடித்தட்டு சல்லடை உடைந்து விட்டால் அதற்குப் பதிலாக சைக்கிளின் பெடல் பற்சக்கரத்தை பயன்படுத்தினால் நீண்ட நாள் உதவும். மேலும் இது எளிதாக விலை மலிவாக காயலான் கடைகளிலும், சைக்கிள் கடைகளிலும் கிடைக்கும்.

– ஜெயாசின்னராஜ்

செய்த போது மட்டும் மோப்பம் பிடித்தபடி வெளியே வரத்தான் செய்தாள்.

ரகத்திற்கு நான்காக ஒவ்வொருவித ஸ்வீட்டையும், காரத்தையும் சப்புக் கொட்டிக் கொண்டு ருசிபார்த்து விட்டு ஒவ்வொருத்தர் தட்டிலிருந்தும் பாதியையாவது கெஞ்சிக் கெஞ்சி கேட்டு வாங்கித் தின்றதனாலோ என்னவோ டிட்டிக்கு உடம்பு சரியில்லாமல் போனது. மூக்கு வரண்டது. உடல் கதகதத்தது. பசி மந்தித்திருந்தது.

"வெறும் அஜீரணம்தான். நாய்களுக்கு ஒரே நாள் பட்டினியில் சரியாகி விடும்," என்றேன்.

"வேண்டாம்... உசத்தியான நாய். உடம்பு தாங்காது. பாவம். நம்ம சீனு டாக்டருக்கு போன் பண்ணி வந்து பார்க்கச் சொல் வேண்டா கோபி..."

"வேண்டாம்மா. சீனு எம்.பி.பி.எஸ்., ஒரு நல்ல வெட்டினரி டாக்டரைப் பார்ப்போம்" என்றார்.

"பேசாம வெட்டினரி ஹாஸ்பிடலுக்குக் கூட்டிண்டு போவோம்."

"சேச்சே... அண்ணாநகர்ல ராஜுவுக்குத் தெரிஞ்சவர் ஒரு 'வெட்' க்ளினிக் நடத்துகிறார். பெரிய சினிமா ஸ்டார், மினிஸ்டர் வீட்டு நாய்க்கெல்லாம் வைத்தியம் பார்க்கிறவர். விசாரிக்கிறேன்."

விசாரித்தார். அப்பாயிண்ட்மெண்ட் கிடைத்தது இரண்டு நாட்களுக்குப் பிறகு!

தம்பதிசமேதராய் தெஃப்ரிடிட்டியுடன் ஆட்டோவில் கிளம்பினோம் அண்ணா நகருக்கு...

அசந்து விட்டேன். க்ளினிக் வாசலில் நிற்கும் பலவகைக் கார்களைப் பார்த்து...

ரிசப்ஷன் ஹாலில் காத்திருந்த பலவகை நாய்களை வைத்து ஒரு நாய்க் கண்காட்சியே நடத்தலாம்!

அவைகளைக் கண்ட பயத்திலோ என்னவோ டிட்டி பாய்ந்து ஏறி என் மடியில் படுத்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டாள்.

டாக்டரின் அசிஸ்டெண்டிடம் முதலில் டிட்டியின் பெயர், விலாசம், உயரம், எடை, நிறம் பற்றிய விவரங்களைப் பதிவுசெய்து கொண்டோம். அவர் டிட்டியை ஏற இறங்கப் பார்த்தார்.

"இது என்ன ரக நாய், சார்?"

"லேப்ரடார். உசந்த வெரைட்டி" என்று என் கணவர் பெருமைபொங்கச் சொல்ல அவர் டிட்டியை உற்றுப் பார்த்து விட்டு,

"இதோட 'பெடிகரி சர்டிபிகேட்' இருக்கா சார்?" என்றார்.

"என்ன 'கிரி' சர்டிபிகேட்?"

"இதன் அப்பா, அம்மா, அவங்க அம்மா மற்றும் வம்சாவளியினரின் டிடெய்ல்ஸ் உள்ள சான்றிதழ் உங்களிடம் இந்தக் குட்டியை விற்றவர் கொடுக்கலியா?"

"அப்படி எதுவும் தந்ததாக நினைவில்லையே..."

"குடுத்திருக்க முடியாது. ஏன்னா இந்தக் குட்டி லேப்ரடாரே இல்லை. யாரோ உங்களை நல்லா ஏமாத்தி இதை உங்க தலைல கட்டியிருக்காங்க. இது சாதாரண அக்மார்க் முத்திரை குத்தப்பட்ட தெருநாயின் குட்டி! எவ்வளவு கொடுத்து வாங்கினீங்க? இப்போதைக்குக் குட்டியா இருக்கும்போது கொழுகொழுன்னு அழகாயிருக்கும். பெரிசாயிட்டா வால்சுருண்டு, காது மடங்கி ஒரிஜினல் லுக் வந்துடும்."

க்ளினிக்கை விட்டு வெளியே வந்த என் கணவரின் முகத்தில் ஈயாடவில்லை.

"இப்ப என்ன ஆச்சுன்னு இப்படி அப்செட் ஆகியிருக்கீங்களாம்? நெஃப்ரிடிட்டி லேப்ரடார் ஜாதியா இல்லாட்டி என்ன? இதுவும் நல்லா வாலாட்டுற, நாம கூப்பிட்ட குரலுக்கு ஓடிவந்து அன்பு காட்டுற நன்றியுள்ள நாய்க்குட்டி. மனுஷன்களைத்தான் உசந்த ஜாதி, தாழ்ந்த ஜாதின்னு பிரிச்சுப் பிரிச்சு இன்று அதிலிருந்து மீள முடியாம தவிக்கிறோம். நாலு கால் ஜீவன்களுக்கும் ஜாதி, குலம், கோத்திரம் பார்க்கும் கூட்டத்தில் நாம சேர வேண்டாம். டிட்டி எப்படியிருந்தாலும் நம்ம குடும்பத்தில் ஒண்ணு. இனிமே இதோட பரம்பரையை பற்றிய பேச்சை எடுக்கவே கூடாது புரிஞ்சுதா..."

"சரி விடு. இது பாட்டுக்கு இருக்கட்டும்,"

என்றார் ஹீனஸ்வைடூர்.

எனக்குத் தெரியும், இனி இவர் எப்போதுமே டைட்டீயின் பரம்பரைப் பெருமையைப் பற்றிப் பேச மாட்டாரென்று. ஏனெனில், இவர் என்றுமே தான் செய்யும் அசட்டுத்தனங்களைப் பற்றி வெளியே யாரிடமும் பேச மாட்டார்!

"எப்படியும் இன்னும் ஒரு வருஷத்துல நாய் குட்டி போடும். முதல் குட்டி உனக்கேதான்," என்று தன் மகளிடம் என் மாமியார் சொல்லிக் கொண்டிருந்தார்!

டைட்டீ ஜாலியாக அவ்வப்போது நகர் வலம் சென்று எங்கள் தெருவாசிகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டாள். அகல்யாவின் மேப் டிராயிங் நோட்டை சுக்கல் சுக்கலாய்க் கிழித்து விட்டு வாங்கிக் கட்டிக் கொண்டாள். எதிர்வீட்டு கதிர் மோட்டார் பைக்கைக் கிளப்பும்போதெல்லாம் நான்-ஸ்டாப்பாய் அலறினாள். நான் "சாப்பிட வா டைட்டீ" என்று குரல் கொடுத்த ஒரு நொடியில் எங்கிருந்தோ ஓடிவந்து வாஞ்சையுடன் என்னைப் பார்த்து வாலாட்டியபடி தயிர்சாதத்தை விழுங்கினாள்.

என் மாமியார் பார்க்காத போது பூனை போல சத்தமின்றி சிம்மாசனத்தில் அமரும் ஒரு இளவரசியின் தோரணையோடு ஹால் ஃசோபாவில ஏறி அமர்ந்தாள்!

நேற்று...

என் கணவரின் ஆபீஸ் அட்டெண்டர் மணி வந்திருந்தான்.

"சார் இல்லியாம்மா? நம்ம ஆபீஸ் கேஷியர் தணிகாசலம் அடுத்த மாசம் டிரான்ஸ்பர் ஆகிப் போறாரு. நம்ம சார்கிட்டே ஏறக்குறைய ஐயாயிரம் வாங்கியிருக்காரு. மனுஷன்கிட்டே கனுவா காசு பெயராதும்மா. அவர் வீட்டுல நல்ல பசு மாடு ஒண்ணு இருக்கும்மா. வேளைக்கு எட்டு லிட்டர் பால் கறக்கும். நாம வேணா கொடுத்த காசுக்குப் பதிலா ஓட்டிக்கிட்டு வந்துடலாம்" என்றான்.

எனக்கு ஷாக் அடித்த மாதிரி இருந்தது.

"யாரு மணி, நம்ம தணிகாசலம்தானே... போன வாரமே பணத்தை வட்டியோட திருப்பித் தந்துட்டாரே. உங்கிட்ட சார் சொல்ல மறந்திருப்பாரு. இந்தா பத்து ரூபாய். டிபன் சாப்பிட்டுட்டுப் போ. ஒரு விஷயம், ஐயாகிட்டே தயவு செஞ்சு இந்த மாட்டு விஷயத்தை சொல்லாதே..." என்றபடி அவனை அனுப்பினேன்.

பெருமூச்சு விட்டபடி சாய்ந்து உட்கார்ந்தேன்.

எங்கிருந்தோ ஓடி வந்த நெஃப்ரிடைட்டீ என் மீது உராய்ந்தபடி என் கைகளை நக்க ஆரம்பித்தாள்!

# ஏனோ ஏற்றுக் கொள்வதற்கு கடினமாக இருக்கிறது.

**36%**

## அனுபவ் கணக்கு

தனது முக்கிய தொழிலாய் விளங்கும் கட்டிடத் தொழிலின் நிதி நிர்வாகத்தைப் பொறுத்த வரையில், அனுபவ் இரண்டு வழிகளை மேற்கொள்ளலாம். வங்கிகளிடமிருந்து வருடத்திற்கு 18% வட்டிக்கு கடன் வாங்கும் பட்சத்தில், அதற்கான செக்யூரிட்டிகளுக்கு ஏற்கெனவே வருடத்திற்கு 18% வட்டி தரவேண்டிய நிலைமை இருக்க, மொத்த வட்டி சதவிகிதம் மூச்சுத்திணறவைக்கும் 36%. இதை விடுத்து, வருடத்திற்கு 24% வட்டி என்ற கணக்கில் பொது மக்களிடமிருந்து டெபாஸிட்டுகளை ஏற்றுக் கொள்ளலாமே! பொதுமக்களுக்கும் சரி, எங்களுக்கும் சரி 24% என்பது கவர்ச்சியான வட்டிதானே.

## அனுபவ் அனுபவம்

கட்டிடம் மற்றும் வேளாண்மை சார்ந்த தொழில்களில் வெற்றிகரமாகச் செயலாற்றி அனுபவ் பொதுமக்களின் ஆதரவையும் நம்பிக்கையும் பெற்றுள்ளது. இதன் காரணமாக, அனுபவ் டெபாஸிட் திட்டங்கள் எப்போதும் மக்களின் வரவேற்பை உடனடியாகப் பெற்று வெற்றியடைந்து வந்துள்ளன.

*அசைக்க முடியாத நம்பிக்கை. செயல்வழி விளைத்த நம்பிக்கை. சீரிய நிர்வாகத் திறனால் கட்டிக் காக்கப்பட்டுவரும் நம்பிக்கை. அதுதான் அனுபவ் வெற்றியின் உண்மை.*

### அனுபவ் டெபாஸிட் ஸ்கீம்

| குறைந்தபட்ச முதலீடு | வட்டி விகிதம் | |
|---|---|---|
| ரூ. 10,000/- | 24% | 12 மாதங்களுக் கான வட்டி மாதாந்திர பின் தேதியிட்ட செக்குகள் மூலம் முன்னதாகவே தரப்படும். |

### அனுபவ் பாண்ட்

| குறைந்தபட்ச முதலீடு | காலம் | முதிர்ச்சி கால ஈட்டுத்தொகை |
|---|---|---|
| ரூ. 25,000/- | 3 1/2 ஆண்டுகள் | ரூ. 50,000/- (உங்கள் முதலீடு 3 1/2 வருடங்களில் இரட்டிப்பாகிறது) |

**அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

அனுபவ் சென்டர், 11, சோமசுந்தரம் தெரு, தி.நகர், சென்னை-600 017.

ஃபோன்: 8254155/8282629/8282833/8283316 ஃபாக்ஸ்:8284967

**கிளைகள்:** அடையார், (போன்: 4916619) • தாம்பரம், (போன்: 2366658) • விருதுநகர். • பாண்டிச்சேரி, (போன்: 43086) • சேலம், (போன்: 446981) • திருச்சி, (போன்: 463091) • மதுரை, (போன்: 33214) • கோயம்புத்தூர். • திருநெல்வேலி, (போன்: 337960) • நாகர்கோயில். • ஹைதராபாத், (போன்: 394735/394741) • விசாகப்பட்டினம், (போன்: 60160) • வாரங்கல் (போன்: 73719) • விஜயவாடா, (போன்: 74646) • பெங்களூர், (போன்: 5591483) • மைசூர், (போன்: 31981/26965) • கொச்சின், (போன்: 372118/374156) • திருவனந்தபுரம், (போன்: 75117) • கோழிகோடு, (போன்: 58912) • பம்பாய், (போன்: 4309554/4379467) • புதுடெல்லி, (போன்: 6434084/6434085)

**திறமையுடன் செயலாற்றுகின்றோம். அதிக வட்டி தருகிறோம்.**

"ஞாயித்து கிழமை பரண் மேல இருக்கற தொட்டில எடுத்து கொடுத்திட்டீங்கன்னா நல்லாயிருக்கும். குழந்தை பொறந்திட்டப்புறம் ஆஸ்பத்திரிக்கு அலையத்தான் நேரம் சரியா இருக்கும்."

"பத்து நிமிஷ வேலை இதுக்கு போய் நாள் கிழமை பார்ப்பாங்களா? எடுத்து கொடுத்துட்டே ஆபீஸ் போறேன்."

சில நாட்களில் பிறக்கப் போகும் பேரக் குழந்தைக்காக ஆகிவந்த தொட்டிலை எடுக்க பரண் மேல் ஏறினேன். ஏறிய பிறகுதான் தெரிந்தது அது பத்து நிமிட வேலை இல்லை என்பது. கற்கால குகையைப் போல் என்முன் விரிந்து கிடந்த அந்தப் பரணில் வீட்டில் புழங்கும் பொருட்களை விட அதிக பொருட்கள் இருந்தது.

அங்கொன்றும் இங்கொன்றுமாய் துள்ளித் திரிந்த எலிகளையும் கரப்பான் பூச்சி படையையும் சமாளித்து, அண்டா குண்டாக்களை நகர்த்தி, மரப் பெட்டிகள், டிரங்குகள் மீது ஏறி இறங்கி தூசு தும்புகளோடு தூங்கிக் கொண்டிருந்த தொட்டிலை கண்டதும் 'கண்டேன் சீதையை' என்பது போல் மகிழ்ந்து போனேன். அந்த மகிழ்ச்சி தொட்டில் மேல் குவிந்து கிடந்த சாமான்களை கண்டதும் வந்த வேகத்தில் மறைந்தது. துரும்பளவுக்குக் கூட நகர்த்த முடியாத அளவு மேலேயுள்ள எக்கச்சக்க சாமான்களை எடுத்துத் தொட்டிலை இறக்க வேண்டும் என்று நினைத்தபோதே தலைசுற்றியது.

"ஆபீஸுக்கு போன் பண்ணி நான் இன்னிக்கு அரைநாள்... இல்லை முழுநாள் லீவுன்னு சொல் விடு"

மனைவியிடம் சொல்லிவிட்டு வேலையை தொடங்கினேன். ஒரு சாமானை எடுத்தால் பத்து சாமான் உருள்கிறது. எடுத்த சாமானை வைக்க இடமில்லை.

"ரொம்ப குப்பையும் கூளமுமா இருக்கு பேசாம புதுதொட்டிலே வாங்கிடலாமே."

நான் சொன்னது, சரியாய் காது கேட்காத என் அம்மா காதில் அட்சரம் பிசகாமல் விழுந்து விட்டது.

"அது ஆகிவந்த தொட்டில்டா, உங்க அப்பாவுக்கு, உனக்கு நம்ம குடும்பத்துல எல்லோருக்கும் இதுலதான் தொட்டில் போட்டோம். பழசோட அருமை இந்தக் காலத்து பசங்களுக்கு எங்க தெரியுது?"

எதற்கு அனாவசியமாய் பேச்சை வளர்ப்பானேன் என்று வேலையைத் தொடர்ந்தேன்.







"எவர்சில்வர், பிளாஸ்டிக்குன்னு எல்லாத்துக்கும் புது மோஸ்தர்ல இருக்கும் போது இத்தனை பித்தளை, ஈய பாத்திரத்தை எதுக்கு வைச்சிருக்க? போட்டுடக் கூடாது?"

சொன்னதுதான் தாமதம்.

பூர்ணிமா

"போட்டு வைச்சா அது பாட்டுக்குக் கிடக்குது. சாப்பாடா போட ணும்?"

இந்த முறை என் தர்ம பத்தினி பதிலளித்தாள்.

'கடவுளே. இந்த் பாத்திரங்களுக்கெல்லாம் வாய் முளைத்து சாப்பாடு கேட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்'

"சாப்பாடு போட வேண் டாம், இதுங்க இவ்வளவு தூசியும் அழுக்குமா இருக்கே, வருஷத்துக்கு ஒருமுறை தேய்ச்சு, துடைச்சு வைக்கக் கூடாது?"

''வீட்டு வேலை செய்யவே நேர மில்லை. இதுல இதுங் கள தேய்ச்சு துடைக்க நேரம் ஏது?"

'சரிவர பாதுகாக்கவும் மாட்டேன், போட்டு விடவும் மாட்டேன்' இது என்ன கொள்கையோ அந்த ஆண்டவனுக்கே வெளிச்சம். இங்கே இருக்கும் சாமான்களைக் கொண்டு ஒரு குட்டி மியூசியமே வைக்கலாம் போலிருந்தது. எல்லாம் ஆதாம் ஏவாள் கால பழசுகள்.

வாடகை வீடு தேடும் போது காற்று, வெளிச்சம், மற்ற வசதிகள் இருக்கிறதா என்று எல்லோரும் பார்ப்பார்கள். என் மனைவியோ பெரிய பரணை இருக்கிறதா என்று தான் பார்ப்பாள். சொந்த வீடு கட்டும் போதும் "பரணையை பெரிசா போடச் சொல்லுங்க" என்று அடிக்கடி ஞாபகப் படுத்தி (நச்சரித்து) அவள் விரும்பியபடியே பெரிய..ய பரணை போட்டுக் கொண்டாள் ஒன்றல்ல இரண்டு. அதற் கெல்லாம் காரணம் இன்று தான் புரிந்தது எனக்கு.




"ஆ"

"என்னங்க ஆச்சு?"

''வலது காலல துருபிடிச்ச கம்பி குத்தியிருக்கு, இடது கையை கறையான் கடிச்சிடுச்சு அவ்வளவுதான். ஆமாம். இவ்வளவு மரச்சாமான், இரும்புக் கம்பிங்க இதுங்கள எதுக்குப் போட்டு வைச்சிருக்கு?"

"அது வீடு கட்டும் போது மீந்த சாமான். மாடி மேல வீடு கட்டினா ஆகுமேன்னு எடுத்து வைச்சிருக்கேன்."

இந்த வீடு கட்டுவதற்கே முழி பிதுங்கி விட்டது. இந்த லட்சணத்தில் மாடியில் வீடு கட்டப் போகிறேனாக்கும். அதுவும் இந்தத் துருபிடித்த கம்பி, உளுத்துப் போன கட்டையில்.

"மரப்பெட்டிக்குள்ள ஒரு பாலாடை இருக்கும். அதையும் எடுத்துக் கொடுத் துடுங்க."




அந்த மரப்பெட்டியை திறந்தால் வித விதமாய் எவர்சில்வர் சாமான்கள். பெண்ணுக்காக சேர்த்து வைத்திருந்தவைகளை அவ ளுக்குச் சீராகக் கொடுத்து அனுப்பியாகி விட்டதே. இவை எங்கிருந்து வந்தன. பொறுக்க முடியாமல் கேட்டு விட்டேன்.

"அதுவா... மருமகளுக்குச் சீர்ல வந்த பாத்திரம். வீட்ல புழங்க எல்லா சாமானும் இருக்கேன்னு மேல போட்டு வைச்சிருக்கேன்."

இத்தனை ஸ்பூன் என்பது முதல் எத்தனை பெரிய குடம் என்பது வரை லிஸ்ட் போட்டு கண்டிப்பாய் வாங்கியது பரணையில் போடத் தானா?

நான் தேடியது போல் தீவிரமாய் தேடியிருந்தால் காட்டிலிருக்கும் வீரப்பனை கூட கண்டுபிடித்து விட்டிருக்கலாம். ஆனால் பாலாடையைத்தான கண்டுபிடிக்க முடியவில்லை.

# காளான்கள் நிழல் தருவதில்லை



அரும்பாடுபட்டு சேமிக்கிறீர்கள்.
அன்பும் ஆதரவும் மிகுந்த சிறந்த நிதிநிறுவனத்தில் சேமித்தால் தானே உங்கள் எண்ணங்கள் ஈடேறும்?
நம்பகமான நிறுவனத்தில் சேமிப்பதுதானே விவேகம்.

**நேர்மை, திறமை, வலிமை, பாரம்பரியம் - தண்டபாணி.** தொண்ணூறு கோடிக்கு மேல் மதிப்புள்ள, பலதொழில் சாதனையாளர்களிடம் எப்போதும் உங்கள் பணம் பத்திரம். சேமிப்போடு மற்றும் பல சேவைகள். தண்டபாணி - உங்களுக்கென்றே தனியொரு நிதி இலாகா.

- ஹையர் பர்சேஸ், லீசிங்
- மெர்ச்சண்ட் பேங்கிங்
- பில் டிஸ்கவுண்டிங்

மிகவும் பாதுகாப்பானது என்பதற்கான CRISIL FA + அந்தஸ்தை பெற்றது

∴பிக்சட் மற்றும் குமுலேடிவ் டெபாசிட் செய்வதற்கான விண்ணப்பம் மற்றும் விவரங்களுக்கு எமது அலுவலகம் அல்லது பிரபல டெபாசிட் புரோக்கர்களை அணுகவும்.

**Dhandapani**
Finance and Investments Ltd.

**பதிவு அலுவலகம் : 141 லிங்கி செட்டி தெரு, சென்னை - 600 001.**
**நிர்வாக அலுவலகம்** : 645, மவுண்ட் ரோடு, சென்னை - 600 006.
∴போன் : 8268285, 8259264, 8241304.

**தண்டபாணி உங்கள் நல்வாழ்விற்கு உறுதுணை**

● **சென்னை கிளைகள்:** மவுண்ட் ரோடு: 645, அண்ணா சாலை, பின்-600 006. ∴போன்: 8268285, 8259264, 8241304. ● மேற்கு மாம்பலம்: 22, ஆர்யகௌடா ரோடு, முதல்மாடி, பின்-600033. ∴போன்: 427795. ● தி.நகர்: 35, திருமலைப்பிள்ளை சாலை, முதல் தளம், பின்-600 017. ∴போன்: 8263343, 8265333. ● **தமிழ்நாடு:** கோயம்புத்தூர்: 391, பாரதியார் ரோடு, சித்தாபுதூர், பின்-641044 ∴போன்: 435414, 435953. ● திருச்சி: பி-13, பெல்மெண்ட், சித்ரா காம்ப்ளெக்ஸ், சிந்தாமணி, பின்-620002. ∴போன்: 459945 ● மதுரை: 7, மேற்கு மாடவீதி, இரண்டாவது மாடி, பின்: 625001. ∴போன்: 37977 ● சேலம்: 102, லைட் ஹவுஸ் காம்ப்ளெக்ஸ், எல்.எஃப்.ஜி.எஸ். ஸ்கூல் எதிரில், ∴போர் ரோடு, பின்-636009. ∴போன்: P.P. 50164 ● **ஆந்திரா:** செகந்திராபாத்: 1-2-272 & 273, மினர்வா காம்ப்ளெக்ஸ் எதிரில், சரோஜினி தேவி சாலை, பின்-500003. ∴போன்: 844134. ● கடப்பா: 7/153-3பி, என்.ஜி.ஓ. காலனி, பின்-516002. ∴போன்: 44496 ● **கர்னாடகா:** பெங்களூர்: 26/6, என்.ஆர். ரோடு க்ராஸ், பின்-560 002. ∴போன்: 2239677 ● **கேரளா:** கொச்சின்: 41/406, சித்தூர் ரோடு, எர்ணாகுளம், பின்-682035 ∴போன்: 369437

★ In continuation of our statutory ad appeared in News Today and Dinamani on 6-7-95

EFFICIENT/DFI/102/95

"வெள்ளிப் பாலாடைதான் வாங்கியிருக்கோமே. இது எதுக்கு?"

"அது ஆகிவந்த பாலாடைங்க அதுலதான்.."

"அதுலதான் எங்க தாத்தா சின்னக் குழந்தையா இருக்கும் போது மருந்து குடிச்சார்.. சரியா?"

"பரவாயில்லையே சரியா கண்டுபிடிச்சிட்டீங்களே."

அரைமணி நேர தீவிர ஆராய்ச்சிக்குப் பிறகு பெட்டிக்கு அடியில் சமர்த்தாய் உட்கார்ந்திருந்த பாலாடை ஒருவழியாய் கிடைத்தது.

"கறுப்பு" டிரங்குகுள்ள துணிங்க இருக்கும். அதுல பிரவுன் கட்டம் போட்ட சட்டை, பச்சை பூ போட்ட கவுன் இருக்கும். அதையும் எடுத்து கொடுத்துடுங்க."

கேட்காமலேயே தெரிந்தது அது ஆகிவந்த சட்டை என்று. சின்னதாகி விட்டாலும் கல்லு கல்லாய் இருக்கிறது என்று குழந்தைகள் உடையும், சாயம் போனாலும் பொட்டு கிழிய வில்லை என்று தன் புடவைகளையும் பெட்டி நிறைய வைத்திருந்தாள். 'நேற்று வேலைக்காரி பழைய புடவை கேட்டாளே..? வேண்டாம், இதை இறக்கினால் இதையும் போட்டு பாத்தி ரம் வாங்கி, அதுவும் பரணைக்குதான் வரும். சட்டையை எடுக்கும் போது எதிலோ முழங்கை இடித்தது. என்னவென்று பார்த்தால் பெயிண்டெல்லாம் போய், வால், காது உடைந்து போய் நாங்கள் சொன்னால்தான் குதிரை என்று புரியும். இல்லாவிட்டால் மாடர்ன் ஆர்ட் என்று பெயரிட்டு கண்காட்சி யில் வைக்கலாம் அப்படி ஒரு ஆடும் குதிரை. எங்கள் மகள் வனிதா குழந்தையாக இருக்கும் போது வாங்கியது. அவளுக்குத்தான் இப்போது குழந்தை பிறக்கப் போகிறது. ஆனாலும் இதை போட்டு விடலாம் என்றால் கேட்காமல் மலரும் நினைவுகளுக்காக வைத்திருக்கிறாள். கேட்டால் 'சிறு துரும்பும் பல்குத்த உதவும்' என்பாள். அதற்காக வீடு முழுக்க துரும்புகளை வைத்துக் கொள்வதா?'

இப்படியாக ஆகிவந்த தொட்டில், ஆகி வந்த பாலாடை, ஆகிவந்த சட்டை, ஆகிவந்த இத்யாதி இத்யாதிகளுடன் பரணையிலிருந்து இறங்கினேன்.







"தொட்டில கொஞ்சம் ரிப்பேர் பண்ணணும். கொஞ்சம் உடைஞ்சு போயிருக்கு."

"அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். அடுத்தது உன் பேரனுக்கோ பேத்திக்கோ குழந்தை பிறக்கும் போதுதான் இத எடுக்கப் போறோம். அதுக்கெதுக்கு வீண் செலவு, அலங்காரம் பண்ணிட்டா ஓட்டையும் தெரியாது ஒரு மண்ணும் தெரியாது" என்று என்னை தடுத்து விட்டாள் அம்மா. புதையல் காக்கும் பூதங்களைப் போல் பழைய சாமான்களை பாது காப்பதில் என் அம்மாவுக்கும் மனைவிக்கும் ஈடு யாரும் இல்லை.

ஓட்டை உடைசல்களை பட்டுப் புடவையால் மூடி மறைத்து தொட்டில் போடும் வைபவம் சிறப்பாய் முடிவடைந்தது.

துருபிடித்த கம்பி குத்தியதில் ஆன செப்டிக், பித்தளை அண்டா விழுந்ததில் பிசகிய நரம்பு, இருட்டில் எதன் மீதோ மோதியதில் வீங்கிய தலை, தூசு துரும்புகளுடன் போராடி யதில் அதிகமான என் ஆஸ்துமா, உடம்புவலி கள் எல்லாவற்றிற்கும் சிகிச்சை பெற ஒரு வாரம் லீவு போட வேண்டியதாயிற்று.

பேரனையும், பெண்ணையும் புகுந்த வீட்டில் விட்டு வந்த கையோடு தூசு துரும்புகளுக்கிடையே, கரப்பான் கறையான் எலிகளின் சாம்ராஜ்யத்திற்கு ஆகிவந்த சாமான்களை பழையபடி அனுப்பி வைத்தோம். இனி எத்தனை வருடங்கள் கழித்து இவைகளின் தேவை ஏற்படுமோ...

'பழையன கழிதலும், புதியன புகுதலும்' புதியன புகுந்து கொண்டேதான் இருக்கிறது. ஆனால் பழையன கழிகிறதா என்றால் எங்கள் வீட்டுப் பரணையை பொறுத்தவரை இல்லை.. இல்லை.. இல்லை..



என் சிநேகிதியிடம்
சொன்னேன்,
“போதும், உன்
பணம் வீணாவதை
நிறுத்து” என்று

விலை குறைவாக தோன்றும் பேன்ட்டிகளை வாங்கிடும் விருப்பம், புரிந்துகொள்ளக் கூடியதே. ஆனால், பின்பு தெரியவரும் அதன் கஷ்டங்கள்: உடலை உறுத்திப் பிடிக்கும் எலாஸ்டிக். சாயம் போகுதல். துணி தளர்ந்து தொங்கிப் போகுதல். இதில் கவனிக்க வேண்டியது, நீங்கள் இந்த அவதிகளுக்கு உட்படவே வேண்டாம்.

காரணம்: “யூ” எனும் ஒரு பேன்ட்டி இப்போது கிடைக்கிறதே! மகளிருக்கான இனம் கலர்கள். இறக்குமதி செய்யப்பட்ட “ஃப்ரீல்டு” ரப்பர் எலாஸ்டிக். மிருதுவான, 100% தூய்மையான உயர்தர பருத்தியிலிருந்து தயாரிப்பு. உங்கள் உடல்வாகுடன் அணைந்து கொடுத்திடும் தன்மை. அதற்கேற்றபடி நீ-ண்-டு-வ-ளை-ந்-து கொடுக்கும் எலாஸ்டிக் மற்றும் துணி. ஆனாலும் துவைத்தல் பலமுறைகளுக்கு பின்பும் தளர்ந்து போகாது. மொத்தத்தில், பேன்ட்டிகளுக்கு ஆகும் செலவு உண்மையில் குறைவு.

“யூ” இருக்கையில் வேறெந்த, மட்டமான பேன்ட்டிகளை வாங்கி காசு ஏன் வீணாக்க வேண்டும்!



ஒரு tk தயாரிப்பு

**you**®

100% பருத்தித்துணி பேன்ட்டிகள்

உடலுக்கு நல்ல சுகம்.
பணத்திற்கு நல்ல பலன்.

Distributors in the Middle East : * GULF IND International Co., P.O. Box. 14730, Doha, Qatar. Ph : 974-417606, 428944, Fax : 974-442199, 328770. * AL-BARAHA For Readymade Garments and shoes Est., P.O. Box. 23967, Safat, Kuwait.

'இதென்ன, ரசமா? வெறும் வெந்நீரா?' 'ப்ரெட் என்றால் உடனே ஜாம்தானா?' 'அம்மா செய்யும் பொங்கலில் மிளகைப் பொறுக்கவே தனியாக ஓர் ஆள் வேண்டும்' - இதுபோன்ற நக்கல் பேச்சுகளைத் தினம் தினம் கேட்டுக் கேட்டு, காது புளித்துப் போயிருக்குமே? மாதத்தில் ஐந்து நிமிடங்கள் செலவு செய்தால் இவற்றை அறவே ஒழித்துவிட லாம், தெரியுமா உங்களுக்கு?

மளிகை சாமான்கள் வாங்கியவுடன் அரை ஆழாக்கு மிளகு, அரை ஆழாக்கு சீரகம் இவற்றை வெறும் வாணலியில் லேசாக வறுத்து மிக்ஸியில் நைஸாக பொடி செய்து ஒரு டப்பாவில் போட்டு விடுங்கள். இதை வைத்துக் கொண்டு தினசரித் தேவைகளுக்கு மாயாஜால வித்தைகளைச் செய்யலாம்.

1. பொங்கலுக்குத் தாளிக்கும்பொழுது நெய்யில் இந்தப் பொடியை வறுத்துப் போடுங்கள். மிளகைப் பொறுக்க ஆளும் வேண்டாம். ஜீரணத்துக்கு உதவும் மிளகைப் பொறுக்கி எறியவும் வேண்டாம். மிளகைக் கடித்துவிட்டு காரம் என்று குழந்தைகள் அலறவும் மாட்டார்கள்.

2. இரண்டு ப்ரெட் ஸ்லைசுகளுக்கு நடுவில் சிறிது சீஸ் தூவிக் கொண்டு, மேலே மிளகு சீரகப் பொடியில் இரண்டு சிட்டிகை உப்பைக் கலந்து தூவிக் கொண்டு சாண்ட் விச் செய்தால் மாறுபட்ட ருசிதான்.




# மாயம் செய்யும் மிளகு சீரகம்!

3. மாலையில் பள்ளியிலிருந்து வரும் குழந்தைகளுக்கு டீ.வி. பார்க்க அவசரம், கதை புத்தகம் படிக்க வேண்டும். 'டிபன் சாப்பிடவில்லையே' என்று உங்களுக்கு ஆதங்கம். இலுப்பச்சட்டியில் ஒரு கரண்டி நெய்யை விட்டு, இந்தப் பொடியில் ஒரு ஸ்பூன் போட்டு பொரிந்தவுடன் ப்ரெட்டை சிறிய துண்டுகளாக வெட்டிப் போட்டு மித மான தீயில் பொன்னிறமாக வறுத்துக் கொள்ளுங்கள். இறக்குவதற்கு முன்பு சிறிது உப்பையும் தூவிக் கிளறிவிடுங்கள். ஒரு கிண்ணத்தில் இந்தத் துண்டுகளைப் போட்டு ஒரு போர்க் (Fork) போட்டு குழந்தையின் கையில் கொடுத்தால் டீ.வி. சுவாரஸ்யத் தோடு ப்ரெட் போன இடம் தெரியாமல் வயிற்றுக்குள் போய்விடாதா?

4. தக்காளி சாதம் என்ன செய்தாலும்




சிறிது சப்பென்றுதான் இருக்கும். கிளறும் போது இந்த மிளகு சீரகப் பொடியையும் தாளித்துக் கிளறிவிடுங்கள். வாய்க்குத் தனி யான விறுவிறுப்புதான்.

5. ஃப்ரிட்ஜில் வைத்து சில்லென்று இருக்கும் தக்காளி அன்னாசி ஜூஸ்களைப் பருகும்பொழுது இந்தப் பொடியில் ¼ ஸ்பூன் போட்டுக் கலக்கிவிடுங்கள். சில்லிப் பும் காரமும் கலக்கும்போது ஏற்படும் சுவையே அலாதி.

6. அரிசி உப்புமாவுக்குத் தாளிதம் செய் யும்பொழுது மிளகாய் வற்றலுக்குப் பதில் இந்தப் பொடியைப் போட்டுச் சிறிது கேரட், பீன்ஸ் வேகவைத்த பட்டாணி இவற்றை வதக்கிக் கொண்டு உப்புமா செய்யுங்கள். இந்த 'ஆஸ்தான வித்வான்' டிபனுக்குக் கூட எவ்வளவு டிமாண்டு இருக்கும் தெரியுமா? வேண்டுமானால் 'ரைஸ் புட்டிங்' என்று பெயரை மாற்றிக் கொள்வோம், அவ்வளவு தான்.

7. தோசை மாவு புளித்துவிட்டதா? கவலையை விடுங்கள். இந்தப் பொடியில் 2 ஸ்பூன் போட்டுச் சிறிது உப்பையும் சமை யல் சோடாவையும் போட்டு நன்றாகக் கலக்கிவிட்டு சற்று தடிமனாக தோசை வார்த்து விடுங்கள். சரியாகிவிடும்.

8. தக்காளி ரசமோ, பருப்பு ரசமோ, எலு மிச்சை ரசமோ எதுவானாலும் கொதித்து வரும்போது இந்தப் பொடியில் ஒரு ஸ்பூன் போட்டு ஒரு கொதி வந்தவுடன் தண்ணீர் ஊற்றி நுரைத்துவரும்போது கொத்துமல்லித் தழையைத் தூவுங்கள். அப்புறம் யாராவது உங்கள் ரசத்தை வெந்நீர் என்று சொன்னால் வழக்குப் போடலாம்.

9. சூப் செய்யும்போதும் இந்தப் பொடியைப் போட்டு மேலாக ஒரு ஸ்பூன் நெய்யையும் ஊற்றினால் சுவையாக இருக்கும்.

10. உருளை, சேப்பங்கிழங்கு போன்ற வற்றை ரோஸ்ட் செய்யும் பொழுது மிளகாய்த் தூளுக்குப் பதி லாக மிளகு சீரகப் பொடியைச் சேர்த்தால் சுவையும் மாறுபட்டு இருக்கும். வாயுத் தொல்லையும் இருக்காது.

11. காலையில் இருந்து விருந்தா கச் சாப்பிட்டுவிட்டால் இரவில் பசி யில்லை, அஜீரணம், வயிறு ஹெவி யாக இருக்கு என்று சொல்கிறார் களா?' கைகொடுக்கும் இந்த மிளகும் சீரக மும். சூடான சாதத்தில் சிறிது மிளகு சீரகப் பொடி, உப்பு, நெய் இவற்றைக் கலந்து ஓர் உருண்டை சாப்பிட வேண்டியதுதான். அஜீ ரணம் பறந்துவிடும்.

12. மாலையில் பார்ட்டியில் சாப்பிட்ட ஐஸ்கிரீம் இரவில் தன் வேலையைக் காட்டு கிறதா? இப்போது எந்த டாக்டரிடம் ஓடு வது? நல்ல சூடான வெந்நீரில் மிளகு சீரகப் பொடியை ஒரு ஸ்பூன் தேன் அல்லது பனங் கற்கண்டு சேர்த்துக் குடிக்கக் கொடுங்கள். குழந்தை இருமல் நீங்கி நிம்மதியாகத் தூங்கும்.

அட! நான் பேசிக் கொண்டே இருக் கிறேன். நீங்கள் எங்கே கிளம்பிவிட்டீர்கள்? ஓ! மிளகுசீரகம் பொடி செய்ய வேண்டுமா?

**— சுகன்யா ஜானகிராமன்**

# குழந்தை எதிரில் பெற்றோர் சண்டை



அருண் தன் எதிரே உள்ள பாடப் புத்தகங்களைப் பார்க்கிறான், ராத்திரி பதினொரு மணிக்கு மேல் ஆகிவிட்டது. பத்து மணிக்கே படுக்கப் போயிருக்க வேண்டும். அப்போதுதான் மறுநாள் காலையில் புத்துணர்ச்சியோடு எழுந்திருந்து பள்ளிக்குப் போக முடியும்.

அடுத்த அறையில் அப்பா, அம்மாவிடம் சொல்வது அவன் காதில் விழுகிறது. "நடு ராத்திரி ஆகிறது. இன்னும் அருண் தூங்காம படிக்கிறான். அவன் ஸ்கூலில் இருந்து வந்த உடனே ஹோம் வொர்க் செய்யச் சொல்லியிருக்க வேண்டியது தானே!"

அதற்கு அம்மாவின் பதில் - "அவனும்தான் எவ்வளவு நாழி புஸ்தகத்தையே கட்டிக் கொண்டு அழுவான்? நான்தான் பாவம் னுட்டு பள்ளிக் கூடத்திலிருந்து வந்த பிறகு கொஞ்ச நாழி ரெஸ்ட் எடுக்கச் சொன்னேன்."

மாறி மாறி அவர்கள் இருவரும் பேச, அவர்கள் பேச்சில் சூடு ஏறிக் கொண்டே போகிறது. அருண் பக்கத்து அறையிலிருந்து இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கிறான். 'என்னால் தானே இவர்கள் சண்டை போடுகிறார்கள்?' என்று அவனுக்குத் தோன்றுகிறது. அந்தப் பிஞ்சு மனசு வருத்தப்படுகிறது.

கணவனும் மனைவியும் குழந்தை வளர்ப்பு விஷயத்தில் தங்களுக்குள் நிறைய அபிப்ராய பேதம் கொண்டிருக்கலாம். ஆனால் அதை குழந்தையின் காதுபட பரிமாறிக் கொள்ளும்போது பாதிக்கப்படுவது அந்த குழந்தைதான். இதனால் தன் மீதே குற்ற உணர்வு வந்து தூக்கம், படிப்பு, மற்ற குழந்தைகளிடம் நடந்துக் கொள்ளும் விதங்களில் பிரச்னைகள் ஏற்பட வாய்ப்பிருக்கிறது என்று சொல்கிறார்கள் அமெரிக்க குழந்தை மன தத்துவ நிபுணர்கள்.

சில சமயங்களில் இந்த அபிப்ராய பேதங்களிலேயே அக்கறை காட்டி, சண்டை போடுகிற சுவாரசியத்தில் குழந்தையை மறந்து போகிற பெற்றோரும் உண்டு.

பெற்றோர் சண்டை தன்னால் தான்

என்று புரிந்து கொள்ளும் சிறுவன், ஒன்று தனக்கு எது தேவையோ அதைக் கூட நினைக்காமல் பெற்றோரை திருப்தி படுத்துவதிலேயே கவனம் செலுத்தக் கூடும். அது சிறுவனாக இருக்கும் போது வேண்டுமானாலும் சரியாக இருக்கலாம். ஆனால் வயது ஏற ஏற இளைஞனாக ஆகும் போது வாழ்க்கையில் தானாக காலூன்றி நிற்கும் பருவத்தில் பல பிரச்னைகள் உண்டாகும். அல்லது அம்மா அப்பா இரண்டு பேர் சொல்வதற்குமே ஏறுமாறாக செய்து தன்னிடத்தில் அவர்களுடைய கவனத்தை நிலைநாட்டிக் கொள்ளவும் அவன் நினைக்கலாம். அப்புறம் வீட்டில் நிம்மதி ஏது?



அபிப்ராய பேதங்கள் வரும்போது பெற்றோர் சில விஷயங்களை கடைப் பிடிக்கலாம்.

உங்கள் வாழ்க்கை துணையின் கருத்துக்கு முதலில் மதிப்பு கொடுங்கள். நீங்கள் நினைப்பது மட்டும்தான் சரி என்று நினைக்க வேண்டாம். நீங்கள் வளர்க்கப்பட்ட சூழ்நிலை உங்கள் கணவருடையதிலிருந்து நிச்சயம் மாறுபட்டிருக்கும். பொதுவாக உங்கள் பெற்றோர் நடந்து கொண்ட மாதிரியேதான் நீங்களும் நடக்க முயல்வீர்கள். அதே மாதிரிதானே அவரும்? அதனால் கருத்து வேறுபடுவது இயற்கை தான் என்று புரிந்து கொள்ளுங்கள்.

நீங்கள் இருவரும் சேர்ந்து பேசி ஒரு முடிவுக்கு வந்த பின் குழந்தை எதிரில் அதை மாற்றாதீர்கள். 'நீ ஐஸ்கிரீம் கூடாதுன்னு தான் சொல்லி அனுப்பியிருந்தே. ஆனா அவன் ஆசையா கேட்டபோது வேண்டாம்னு சொல்ல மனசு வரலை' என்று கணவன் குழந்தை எதிரிலேயே சொல்லக் கூடாது. 'அந்த டிவி ஷோ எனக்கும் பிடிக்கும்டா கண்ணா! ஆனா டாடிக்குப் பிடிக்காதே! ம்.. அவரோட டேஸ்ட்டே தனி....' என்று அவரது ரசனையைப் பற்றி குறைவாக குழந்தையிடம் சொல்லாதீர்கள்.

சில விஷயங்களில் நீங்கள் இருவரும் compromise பண்ண வேண்டியிருக்கும். பாட்டு கிளாஸ் தான் முக்கியம் என்று நீங்கள் நினைக்கலாம். விளையாட்டு அதைவிட முக்கியம் என்று கணவர் நினைக்கலாம். சரி! வாரத்தில் மூன்று நாள் விளையாட்டும், மூன்று நாள் பாட்டு சாதகம் என்று திட்டம் போடுங்களேன். உங்கள் இருவருடைய விருப்பங்களும் நிறைவேறும். அல்லது குழந்தையிடமே அவனுக்கு எது விருப்பம் என விட்டு விடலாம். உங்கள் குழந்தைக்கும் தன் மேல் ஏகப்பட்ட எதிர்பார்ப்புகள் திணிக்கப் படுவதாக தோன்றாது.

சில சமயங்களில் ஒருவர் சொல்வதை முதலில் சில நாட்கள் அமுலில் நடத்திப் பார்க்கலாம். அதற்குப் பிறகு இன்னொருவருடைய யோசனைபடி செய்யலாம். அப்படி செயல்படும்போது அவற்றில் எது ப்ளஸ் எது மைனஸ் என்று விவாதித்து இரண்டு முறையிலுமே நல்லதை எடுத்துக் கொண்டு அதையே பின்பற்றலாம்.

கடைசியாக ஒரு வார்த்தை. குழந்தை தப்பு செய்தால் தண்டிப்பது தவறில்லை. ஆனால் தண்டனையை எப்போதும் ஒருவரே கொடுக்கக் கூடாது. அப்படிச் செய்தால் அந்தக் குழந்தைக்கு தண்டனை கொடுப்பவரிடம் மனக்கசப்பும், கொடுக்காதவர் மற்றவரை விட தன்னிடம் அன்பு செலுத்துவதாகவும் தவறாக நினைத்துக் கொள்ள வாய்ப்பிருக்கிறது.

— கீதா பென்னெட்

# இலவசம்



## ரூ. 600/- மதிப்புள்ள
## பெண்கள் ரிஸ்ட் வாட்ச்

ஒவ்வொரு

## சீதா®

அலுமினியம் மிக்ஸிங் டியூப்
எரிபொருள் சேமிப்புத் திறன் (68%+) கொண்ட

**ஆட்டோ இக்னீஷியன் மற்றும்**
**பாப்புலர் கேஸ் ஸ்டவ்வுடன்**

IS 4246

ISI



- ஜப்பானீஸ் எலக்ட்ரானிக் பிஸோ
- தீப்பெட்டியோ லைட்டரோ தேவையில்லை
- பைலட் ஜெட் ப்ளேம்
- பித்தளை பர்னர்
- சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் தயாரிக்கப்பட்டது.
- 10 வருட உத்திரவாதம்

Auto MRP Rs. 2490/- & Popular MRP Rs. 1995/- as on 1.7.95

'அதிகமில்லை. வெறும் ஒன்றரை கிலோமீட்டர் வேகமாக நீச்சல் அடிக்கணும். அது முடிந்த கையோடு ஜஸ்ட் நாற்பது கிலோமீட்டர் தூரத்துக்கு வேகமாக சைக்கிள் ஓட்டணும். தொடர்ந்து ஒரு பத்து கிலோமீட்டருக்கு பி.டி. உஷாவை மனசிலே நினைச்சுக்கிட்டு தலைதெறிக்க ஓடணும். என்ன தயாரா?'

பதட்டத்தோடு இந்தக் கட்டுரையைப் படிப்பதிலிருந்தே ஓடி விட வேண்டாம். மேலே குறிப்பிட்ட அசுர சாதனையைச் செய்ய வேண்டியவர்கள் டிரையத்லான் என்ற (நீச்சல், சைக்கிளிங், ஓட்டம் ஆகிய) த்ரீ-இன்-ஒன் விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்ள வேண்டியவர்கள் தான்.

# அமுதாவிற்கு அடுத்தபடியாக...



டிரையத்லான் என்றவுடனேயே நம் மனதில் அமுதாவின் நினைவு வருவது தவிர்க்க முடியாது. ஆசிய அளவில் தங்கத்தையும், சர்வதேச அளவில் வெள்ளியையும் பெற்றுத் தந்தவர் அவர். சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற தேசிய டிரையத்லான் போட்டியில் பெண்கள் பிரிவில் அமுதாவின் கூடவே மேடைக்கு ஏறி, முதல் பரிசை அவருடன் இணைந்து பெற்றுக் கொண்டு முகமெல்லாம் மகிழ்ச்சியாகக் காட்சி அளித்தார் இன்னொரு வீராங்கனை. பெயர் கஜலட்சுமி.

தேசிய சாதனை என்றால் சும்மாவா? சாதனையின் 'ரகசியங்களை' அறிய கஜலட்சுமியை சந்தித்தோம்.

இப்போது ஸ்வீட் சிக்ஸ்டீனில் இருக்கும் கஜலட்சுமி தாமதமாகத் தொடங்கி வேகமாக முன்னுக்கு வந்திருப்பதை அறிய முடிந்தது. நான்கு வருடங்களுக்கு முன்தான் நீச்சல் பயிற்சியைத் தொடங்கினார். பயிற்சி நடந்தது ஷெனாய் நகரிலுள்ள நீச்சல் குளத்தில். இரு வருடங்களுக்கு முன் தமிழ்நாடு நீச்சல் வீரர் பெற்றோர் சங்கத்தில் (TSPA) அவரை அறிமுகப்படுத்தினாராம் அமுதாவின் அப்பா.


அற்புதமான சுவை,
மனம் நிறைந்த மகிழ்ச்சி!
அதுவே பெஸ்ட் குளாப் ஜாமுன் மிக்ஸ்
மற்றும் பெஸ்ட் ரியல் பாதாம் மில்க்
BEST BRAND
FOR PREPARING
REAL BADAM MILK
BEST BRAND
INSTANT
GULAB JAMOON MIX
TO PREPARE 50 JAMOONS
உங்கள் வாழ்க்கைக்கு சுவையூட்டும்
எங்களது இதர தயாரிப்புக்கள்.
பெஸ்ட் ஹல்வா மிக்ஸ்
பெஸ்ட் ஐஸ்க்ரீம் மிக்ஸ்
பெஸ்ட் ரவா இட்லி மிக்ஸ்
பெஸ்ட் ரசகுல்லா மிக்ஸ்
பெஸ்ட் வடை மிக்ஸ்
BEST PRODUCTS CO.
108, BULL TEMPLE ROAD CROSS,
BANGALORE-560 019
PHONE: OFF: 602992, RESI: 608350
VITTO

கடந்த இரண்டு வருடங்களாக கஜலட்சுமியின் தினசரி நிகழ்ச்சி நிரல் இது தான். காலை நாலே கால் மணிக்கு எழுந்திருப்பது, நாலரையிலிருந்து ஆறு மணி வரை மெரீனா கடற்கரையில் சைக்கிளிங் பயிற்சி எடுத்துக் கொள்வது, ஆறிலிருந்து ஆறரை வரை ஓட்டப் பயிற்சி, பிறகு வீடு திரும்பினால் பள்ளிக் கூடம், மாலை நான்கிலிருந்து ஆறரை வரை நீச்சல் பயிற்சி.

சென்ற ஆண்டு தேசிய டிரையத்லான் போட்டியில் ஐந்தாவது இடத்தைப் பிடித்த கஜலட்சுமி இன்று முதலிடத்தில். நடுவே கொரியா மற்றும் மலேசியாவில் நடைபெற்ற ஆசிய டிரையத்லான் போட்டிகளிலும் ஐந்தாமிடத்தைப் பெற்றிருக்கிறார். கொரியாவில் நடைபெற்ற போட்டிகளில் ஒரு வருத்தமான விஷயம். போட்டியின்போது இவரது சைக்கிள் பங்க்சராகி விட்டதால் தொடர்ந்து பந்தயத்தில் கலந்து கொள்ள முடியாத நிலை. என்றாலும் அதுவரை அவர் எடுத்துக் கொண்ட நேரத்தைக் கணக்கிட்டு ஐந்தாமிடத்தை அளித்திருக்கிறார்கள். வருத்தப்பட்ட சிறுமிக்கு சாக்லெட்களும், ஐஸ்க்ரீம்களும் கொடுத்துச் சமாதானப் படுத்தியிருக்கிறார்கள்.

கஜலட்சுமியின் அப்பா வெங்கடாசலம் ஒரு என்ஜினியர் மட்டுமல்ல, சில தனிப் பட்டவர்களுக்கு டென்னிஸ் கோச்சாகவும் விளங்குகிறார். அவரது தந்தை முன்னாள் ரஞ்சித் கோப்பை கிரிக்கெட் வீரர். ஸ்போர்ட்ஸ் ஆர்வம் இப்படி ரத்தத்தில் இருக்கிறது கஜலட்சுமிக்கு

தனது முன்னேற்றத்தில் ராமசந்திரன் தம்பதியினரின் பங்கு கணிசமானது என்கிறார் கஜலட்சுமி. இந்திய டிரையத்லான் கூட்டமைப்பின் தலைவரான ராமசந்திரனும், அவரது மனைவி மற்றும் கூட்டமைப்பின் செயலாளரான ரேகா ராமசந்திரனும் நீச்சலுக்கான உபகரணங்கள், இறக்குமதி செய்யப்பட்ட சைக்கிள், போட்டி நாட்களில் சத்துணவு, இலவசப் பயிற்சி இப்படிப் பல விதங்களில் உதவியிருக்கிறார்கள். பயிற்சியாளர் வீரபத்ரனையும் அழுத்தமாக நினைவுகூர்ந்தார்.

சென்ற ஆண்டு உடனடியாக கவனம் செலுத்த வேண்டியது படிப்பிலா? விளையாட்டிலா? என்பதைத் தீர்மானிக்க வேண்டிய நிலை வந்தது கஜலட்சுமிக்கு. பத்தாம் வகுப்பு ஆண்டுத் தேர்வும், தேசிய டிரையத்லான் போட்டியும் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில் வந்தன. விளையாட்டை அப்போது தேர்ந்தெடுத்தவர் பிறகு ப்ரைவேட்டாக பத்தாவதை முடித்து விட்டு இப்போது ப்ளஸ் ஒன் படிக்கிறார்.

சந்திப்பின்போது நமதுசில கேள்விக்கு தன் குடும்பத்தினர் அளித்த பதிலிருந்து சற்றே மாறுபட்ட பதில்களை கஜலட்சுமி கூறியது ரசிக்கத் தக்கவையாக இருந்தன.

''இவ்வளவு பயிற்சிகளுக்கு நடுவிலே பள்ளிக்கூடத்திலே பாடத்தில் கவனம் செலுத்த முடியுதா?'' என்று நாம் கேட்ட போது, தன் பேத்தியின் படிப்பார்வத்தையும், நிறைய மதிப்பெண்கள் பெற்று வருவதையும் பாட்டி தனலட்சுமி சுட்டிக்காட்ட, ''பாடம் இன்டரஸ்டா இருந்தா கவனிப்பேன். இல்லேன்னா க்ளாஸிலே ப்ளாங்காகத்தான் இருப்பேன்'' என்றார் கஜலட்சுமி.

அடுத்த இலக்கு எது?

''ஒலிம்பிக்ஸ்-1999'' என்றார் வெங்கடாசலம் ஆர்வத்துடன். ''முதல்லே ஆசிய சாம்பியனாகணும்'' என்ற வேகமான பதில் வந்தது கஜலட்சுமியிடமிருந்து. உச்சிதான் குறிக்கோள் என்றாலும் ஒவ்வொரு அடியையும் கவனமாக வைப்பது அவசியம் என்ற உறுதி!

டிரையதலான் போன்ற உடலுழைப்பு நிறையத் தேவைப்படும் விளையாட்டில் பெண்களால் எவ்வளவு வயது வரை கலந்து கொள்ள முடியும்? ''முப்பத்தைந்து வயது வரை முடியும்'' என்ற கஜலட்சுமியின் தாய் சந்தானலட்சுமியின் பதிலை நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஏனென்றால் அவர் ஒரு டாக்டரும் கூட.

வேலைவாய்ப்பு, அங்கீகாரம், பரிசுத் தொகை - இப்படி எவ்வளவோ கவர்ச்சிகள் இருக்கலாம் ஒருவரை விளையாட்டில் தீவிரம் கொள்ள வைக்க. ஆனால் எந்த விளையாட்டையும் மனப்பூர்வமாக நேசித்தால் தான் அதில் அழுத்தமாகக் காலூன்றுவது இயல்பாக இருக்கும். அந்த விதத்தில் கஜலட்சுமிக்கு டிரையத்லானில் மனப்பூர்வமான ஆர்வம் இருப்பதற்கு இரண்டு சான்றுகள் டக்கென்று கிடைக்கின்றன.

ஒன்று, தினமும் விடியற்காலையில் (வேறு யாருடைய உதவியும் இல்லாமல்) தானே எழுந்து பயிற்சிக்குத் தயாராகுதல்.

மற்றொன்று மாதத்தின் எல்லா தினங்களிலும் (ஆம், அத்தனை நாட்களிலும்) பயிற்சி எடுத்துக் கொள்வது. உடலைத் தன் பிடிக்குள் வைத்துள்ள மன ஆர்வம்.

''போட்டிக்கு முன்னே சாமியையெல்லாம் வேண்டிப்பியா?''

''ரொம்ப ரொம்ப''

''எந்த சாமியை?''

''ஜீசஸ், பிள்ளையார்'' - டக்கென்று பதில் வந்தது கஜலட்சுமியிடமிருந்து.

- ராம்சேகர்

# பசுவின் கழுத்து மணி ஒலியாக ஆசை!

சமீபத்தில் சென்னையில் இயற்கை மகிழ்ந்தது - மாகம், புகையும், ஒழுங்கீனங் களும் தன்னைப் பெரிதும் காயப்படுத்தி வருந்த வைத்திருக்கும் காலகட்டத்தில் ஆறுதலாகத் தன்னை ஆராதிக்கும் நிகழ்ச்சி ஒன்றினைக் கண்டு மெய் சிலிர்த்தது, மழையாகப் பொழிந்தது.

நாரத கான சபையில் நடந்தது அந்த 'இயற்கை போற்றுதும்' நடன நிகழ்ச்சி. கச்சிதமாக ஒன்றரை மணி நேரம்.

ஆதவன், பறவைகள், மலர்கள், மழை, சமவெளிகள், அமைதி என்று இயற்கையின் பல்வேறு முகங்களை முதலில் வண்ணப் படங்களாகத் திரையில் காண்பித்து, பிறகு நாட்டியம் மூலமாக இயற்கையைப் போற்றியது அந்த நிகழ்ச்சி.

நிகழ்ச்சியின் ஒரே கதாபாத்திரம் - திருமதி கோமளா வரதன்.

அவர் ஒருவர் மட்டுமே மேடையில் நடனமாடியது மட்டுமல்ல, திரையில் தோன்றிய வண்ணப் படங்களை எடுத்தவரும் அவரே.

இருபதாண்டுகளுக்கு முன்னால் பெங்களூரில் வசித்தபோது, தன் வீட்டுக்கு முன்னால் கவினுறக் காட்சியளித்த இயற்கை எழிலைக் கண்டு வியந்த அனுபவத்தை விவரிக்கிறார் கோமளா வரதன். அதே சமயம் வானொலியில் ரம்மியமான ஒரு கன்னடப் பாடல் ஒலிபரப்பாகியது. அதில் மனம் ஒன்றிப் போன கோமளா, அந்தப் பாடலை அப்படியே தமிழ்ப்படுத்தினார்: "பறவையின் பாட்டுக்குத் தலை தூக்கிடும் மலர் நானாகிட ஆசை; பசுவின் கழுத்து மணியின் ஒலியும் நானாகிட ஆசை; படரும் வானவில்லின் மேலொரு முகிலாகிட ஆசை; பொன்னின் நிறத்தொரு மானின் விழியின் ஒளியாகிட ஆசை; தோட்டத்துக் கிளையின் ஒளியில் திரளும் தேனாகிட ஆசை; கடலின் நீலநீரில் புரளும் மீனாகிட ஆசை...'' அந்த சர்ப்புதான் இப்போதைய 'இயற்கை போற்றுதும்' நிகழ்ச்சிக்கு ஆரம்பம் என்பதை அவரே அப்போது உணரவில்லை.

அடுத்தடுத்து, பல சந்தர்ப்பங்களில், சமஸ்கிருதம், இந்தி, மராத்தி, மலையாளம், தெலுங்கு, தமிழ் என்று பல மொழிகளில் இயற்கைக்கு வேள்வி எடுத்த பல பாடல் களை அவர் சந்திக்க நேர்ந்தது. தமிழில், 'திக்குகளெட்டும் சிதறி தக்க தீம்திரிகட, தீம்திரிகட, தீம்திரிகட...' என்ற பாரதியாரின் மழை வர்ணனைப் பாடல் - இடி மின்னல் கட்டியம் கூற பெய்யப் போகும் பெருமழை யை உயிரோட்டமாய் விளக்கும் பாடல்.

இதேபோல பிற மொழிகளிலும் இயற் கைக்கு ஏற்றம் கொடுத்த, நடன அசைவுகளுக்குப் பொருத்தமான பாடல்களைத் தேடிப்பிடித்து, தொகுத்து, 'பிரகிருதம் வந்தே' (இயற்கை போற்றுதும்) நிகழ்ச்சியைத் தயாரித்தார் கோமளா வரதன்.



நாட்டியம் மட்டுமின்றி, ஓவியம், புகைப் படக் கலைகளிலும் தேர்ச்சி பெற்ற இவர், ஒரு சிறந்த எழுத்தாளரும் ஆவார். இரண்டு நாவல்கள், நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள் இவருடைய படைப்பிலக்கியங்கள்.

கடந்த பத்து ஆண்டுகளில் இவர் பெற்றிருக்கும் விருதுகள் எண்ணற்றவை. தமிழ்நாடு (கலைமாமணி), கர்நாடகா (ராஜ்யோத்ஸவா விருது), டில்லி (சாஹித்ய கலா பரிஷத் சம்மான்) போன்ற உள்நாட்டு அங்கீகாரங்களோடு, ஜப்பான் (KEY TO HYOGO PREFECTURE) , சீனா (மூன்றாவது சீன கலை விழா நிகழ்ச்சிகளுக்குப் பிரத்யேக அழைப்பாளர்) என நிறைய..

இவருடைய ஓவியங்களும், புகைப்படங்களும் பல விருதுகளைப் பெற்றுத் தந்திருக்கின்றன. ஐரோப்பிய நாடுகளில் இவருடைய ஓவி



யங்கள் பலர் வீடுகளை அலங்கரிக்கின்றன. இந்திய சுற்றுலாத் துறையின், சுற்றுலா தகவல்களுக்கு இவர் எடுத்துக் கொடுத்திருந்த பல புகைப்படங்கள் இப்போது இந்தியாவெங்கும் காட்சியளிக்கின்றன.

இப்படி நான்கு துறைகளிலும் அவர் தேர்ச்சிபெற்றது எப்படி?

"எனக்கே தெரியவில்லை. ஒரு துறையில் அறிமுகமும் பயிற்சியும் பெற வேண்டும் என்று நினைப்பேன். உடனே முயற்சிகள் மேற்கொள்வேன்; முழு மனத்துடன் ஈடுபடு வேன். கூடவே திருமணத்திற்கு முன் தந்தை, பிறகு கணவர் என்று இருவரும் எனக்கு ஒரு மித்த ஆதரவும், ஊக்கமும் அளித்ததும் தான் என் வெற்றிக்கு முக்கிய காரணம்." என்கிறார் கோமளா.

கணவர் வரதன் சமீபத்தில் அரசுத் துறைப் பணியிலிருந்து ஓய்வு பெற்றவர். மனைவியின் பரத நாட்டிய நிகழ்ச்சிகளுக்கு அவர்தான் இசையமைப்பாளர். கர்நாடக இசையில் புலமையும் ஆர்வமும் கொண்ட இவர், இந்த 'இயற்கை போற்றுதும்' நிகழ்ச் சிக்கும் அற்புதமாக இசையமைத்திருந்தார்.

நிகழ்ச்சிகளில் பாடுபவர் கே.எச்.நாராயணன். டில்லியிலிருக்கும் வரதன், நடனங்களுக்கு உரிய இசையமைத்து அதை ஆடி யோ கேஸட்டில் பதிவு செய்து சென்னை யில் நாராயணனுக்கு அனுப்பி வைப்பார். நாராயணன் அதைக் கேட்டு, பழகி, நிகழ்ச்சி மேடையில் மிகவும் அற்புதமாகத் தன் குரல் வளத்தை நிரூபிக்கிறார்.

"என் கணவர் உடனுக்குடன் புதுப்புது இசைமெட்டுகள் போடக்கூடியவர். அவருடைய அந்த கிஃப்ட், எனக்கும் ஒரு வரப்பிரசாதம். நாட்டிய அசைவுகளுக்கு ஏற்றார் போல அமைய வேண்டிய இசையாதலால் சில சமயம் நான் ஓரிரு திருத்தங்களைச் சொல்வேன்.



உடனே, நொடிப்பொழுதில் மாற்றங்கள் செய்து மெருகூட்டி விடுவார்" என்று தனக்குப் பெரிதும் உறுதுணையாக இருக்கும் கணவரைப் பற்றிப் பெருமையாகக் குறிப்பிடுகிறார் கோமளா.

நாரத கான சபாவில் 'இயற்கை போற்றுதும்' நடன நிகழ்ச்சி நடைபெற்ற போது மொத்தத்தில் சுமார் இருநூறு பேர்தான் பார்வையாளர்கள் இருந்தார்கள். ஆனாலும் ஒவ்வொருவரும், நடனம், இசை பற்றி உளமார்ந்த ஈடுபாடும் ஆர்வமும் கொண்ட வர்கள். ஆயிரக் கணக்கானோர் நிறைந்த அரங்கில், விவரமே தெரியாதவர்களுக்கு முன்னால் தன் திறமையை நிரூபிப்பதை விட, குறைந்த அளவே இருந்தாலும், எந்தச் சிறு பிழையையும் பொறுத்துக் கொள்ள முடியாத அந்த ரசிகர்களிடம் பாராட்டு பெறுவது பெருமைக்குரிய விஷயம் தானே" என்கிறார்.

-பிரபு சங்கர்

# பார் புகழும் பத்தமடை பாய்!

**பா**ய்கள் என்ற பெயர் கேட்ட உடனேயே நமது நினைவுக்கு வருவது பத்தமடைதான். பத்தமடை திருநெல்வேலி மாவட்டத்தில், திருநெல்வேலி நகரில் இருந்து சுமார் 20 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கலை அழகும், எழிலும், கைவண்ணமும் வெகுநேர்த்தியும், மிகச் சிறந்த திறனும் கொண்ட பட்டுப் பாய்களை தயார் செய்து வரும் மையமாக நீண்ட காலத்திற்கு முன்பே திகழ்ந்து வருகிறது, பத்தமடை.

தாமிரபரணி ஆற்றங்கரையில் வளரும் கோரைகளில் இருந்து இந்த உயர் ரகப் பாய்கள் தயார் செய்யப்பட்டு வருகின்றன. உலகம் முழுவதும் பத்தமடைப் பாய்களுக்கு தனி வரவேற்புண்டு, காரணம் அதன் மென்மையும் மேன்மையும்தான். பத்தமடை பாய்களை நான்கு தலைமுறைகளாக தயார் செய்து வருகிறார்கள். திரு பீர்முகமது மற்றும் அவரது ஒரே மகள் இப்ராஹிம் பீவி. சுமார் இருநூறுக்கும் மேலான குடும்பங்கள் இந்த பத்தமடை பாய் தொழிலில் ஈடுபட்டுள்ளார்கள்.

உலகிலேயே பாய்கள் பின்னுவதில் முதலிடம் வகிக்கும் இந்த ஊர்ப் பத்தமடை பாய்கள் அமெரிக்கா, ரஷ்யா, சீனா, மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதியாகி உள்ளன.



இங்கிலாந்து அரசியார் குடும்பத்திற்கு பத்தமடைப் பாய்கள் மிகவும் பரிச்சயம் ஆனவை. 1953-ல் இங்கிலாந்து அரசியார் எலிசபத்-II அவர்களது முடிசூட்டு விழாவிற்கு பத்தமடைப் பாய்களை அனுப்பி பாராட்டுச் சான்றிதழ் பெற்றுள்ளார் பீர்முகம்மது. அதே தாமிரபரணி கோரைகளால் ஆன பத்தமடை பாய்கள் திரு.சார்லஸ் டயானா திருமணத்திற்கும் பரிசாகச் சென்றுள்ளது.

அகில இந்திய கைவினைப் பொருட்கள் கண்காட்சிகளிலும் ஏன் உலக அளவில் பல பொருட்காட்சிகளிலும் பங்கேற்று பரிசு பெற ஒருபோதும் தவறியதில்லை. பத்தமடை பாய்களான இந்த வண்ண வண்ணபட்டுப் பாய்களை கையில் மிகவும் எளிதாக ஏதோ ஒரு சிறு புத்தகம் போல மடக்கி வைத்துக்

கொள்ள முடியும். இது பத்தமடைப் பாய்களின் தனிச்சிறப்பு.

நம்மில் பெரும்பாலோர் வீடுகளில், ஷோகேஸ்களில் பத்தமடை கைவினை பொருட்கள் அலங்கரிக்கத் தவறியதில்லை. பெண்களுக்கென வானிடிபாக்குகள், மணிபர்ஸ்கள், சுவர் சித்திரங்கள் மேலும் பல பொருட்கள் பத்தமடை கோரைப் புற்களால் தயாராகின்றன.

"பத்தமடைப் பாயின் சிறப்புக்கு தாமிரவருணியின் நீரும் ஒரு காரணம். எங்களது திறமையும் மற்றொரு முக்கிய காரணம்.

இல்லாததாலும், இவர்களுக்கு ஒருநாளுக்குத் தேவையான கூலி கிடைக்காத காரணத்தினாலும், பார்புகழும் இந்தக் கைவினைத் தொழிலை விட்டு விட்டு, பெண்கள் பலர் பீடி சுருட்டும் தொழிலுக்குச் சென்று விட்டார்கள். மற்றும் பத்தமடை வீடுகளில் தாமிரவருணி கோரைகள் பச்சை தோரணங்களாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக திகழ்ந்த காலம் போய், பீடி இலைகளும் புகையிலையுமாய் காணக் கிடைப்பது மிகவும் வருத்தத்திற்குரிய விஷயம்.



கோரைப் புற்களுக்கு சில மருத்துவக் குணங்கள் இருப்பதால் பாயில் படுப்பவர்களுக்கு உடல் குளிர்ச்சி ஏற்படும். இதனால், சில வகை நோய்கள் தீரும் என்பது ஒரு நம்பிக்கை" என்றார் இப்ராஹிம் பீவி.

இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களில் பெரும்பாலும் பெண்கள்தான் அதிகம். மிகச் சிறந்த கைவண்ணமும், வெகுவான புகழும் கொண்ட இந்தப் பாய்களிடையே, இவர்களது வறுமையும் சொல்லி மாளாதது. இந்தப் பாய் பின்னும் தொழிலுக்குச் சரியான ஆதரவு

மேலும் பவர்லூம்கள் பாய்பின்னும் தொழிலில் நுழைந்து விட்ட காரணத்தினால் இந்த மேன்மை கொண்ட தொழில் நசியத் தொடங்கியுள்ளது.

சிறந்த கைவண்ணமும், தொழில்திறனும், கலை அழகும் எதிலும் ஒருங்கே அமையப் பெற்று சிறந்த குடிசை தொழிலாகத் திகழும் இந்த பத்தமடைபாய் தொழில், நாளடைவில் நசுங்கி விடாமல் பாதுகாப்பது காதி மற்றும் கதர் வாரியம் மற்றும் நமது கடமையாகும்.

**- கே. வி. இராதாகிருஷ்ணன்**




# இவரை சந்தியுங்கள். சூரிய கிரணங்கள் தன்னைத் தாக்குவதை சற்றும் அறியாதவர்.

நாள்தோறும், நிமிடந்தோறும் சூரியனின் அல்ட்ரா வயலெட் கிரணங்கள் உங்கள் சருமத்திற்கு மிகவும் கேடு விளைவிக்கின்றன. அதன் விளைவாக உங்கள் சருமம் கருத்து, கன்றிப்போய் பொலிவிழக்கிறது.

அதுமட்டுமல்ல. இந்த அல்ட்ரா வயலெட் கிரணங்களால் உங்கள் சருமத்தின் விலை மதிப்பற்ற ஈரப்பசையும், அத்தியாவசிய எண்ணெய்ப்பசையும் பறிக்கப்பட்டு அதன் விளைவாக சருமம் வறண்டு, பொலிவு குன்றிப் போகிறது. நாளடைவில் சுருக்கங்கள் ஏற்பட்டு அதனால் உங்கள் வயதைக்கூட்டிக்காட்டுகிறது.

**புதிய மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் லோஷன். உங்கள் சருமத்தைப் பாதுகாக்கும் குடை.**

புதிய மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் லோஷன். இதிலுள்ள விசேஷ ஸன்ஸ்க்ரீன். கேடு ஏற்படுத்தும் அல்ட்ரா வயலெட் கிரணங்களிலிருந்து உங்களுக்கு பாதுகாப்பு அளிக்க கண்ணுக்குத் தெரியாத குடை போன்று செயல்படுகிறது.

அதே சமயம், மாயிஸ்ச்சரைஸர் உங்கள் சருமத்தை இளமைப் பொலிவுடனும், மெருகுடனும் திகழச் செய்கிறது.




இதன் இளகலான, பிசுபிசுப்பற்ற பார்முலேஷன், அதிநவீன சர்வதேச சருமப் பாராமரிப்பு நுட்பத்தை உபயோகித்து உருவாக்கப்பட்டுள்ளது. ஸன்ஸ்க்ரீன் இன்னும் அதிக ஆற்றலுடன் செயல்பட வைட்டமின் E சேர்க்கப்பட்டுள்ளது. அத்துடன் இதிலுள்ள ''ஸன் ப்ரொடெக்ஷன் பாக்டர்''. இந்திய சீதோஷண நிலைகளுக்கு மிகவும் உகந்தது. மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் லோஷன் உபயோகித்து உங்கள் சருமத்தைப் பாதுகாப்பதை உறுதி செய்து கொள்ளுங்கள். தினந்தோறும்.

இனி என்ன பயம்? வெய்யிலில் குஷியாக உலவுங்கள்.

**புதிய மாக்ஸிமம் ஸன்ஸ்க்ரீன் லோஷன்.**

**வெய்யிலிலிருந்து பாதுகாக்கும். மேனி வண்ணத்தில் மெருகு சேர்க்கும்.**

நீங்கள் மேலும் இதுபற்றி அறிய விரும்பினால், எமது சரும ஆலோசகருக்கு எழுதுங்கள், த. பெ. எண்: 16101, பம்பாய் - 400005.

Enterprise/LKME/23/Tm

# திருமண மலர்

## மணமகள் தேவை

● Iyer, Ashtasahasram, Patharayana, Bharani, 34, 160 cms, B.Com., employed in a Pvt. Company as audit Assistant in Muscat, seeks educated, homely bride below 30. Subsect acceptable. Apply horoscope Box No. 11914

● வடமாள், பாரத்வாஜம், பூரட்டாதி, 38, 5'8'', 7000, B.Com., CAIIB, வடாற்காடு மாவட்டம், பம்பாயில் ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியாவில் வேலை செய்யும் ஒரே பையனுக்கு மணமகள் தேவை. பையனுக்கு பம்பாயில் சொந்த வீடு. தகப்பனார் ஓய்வு பெற்ற ரெயில்வே அதிகாரி. ஐயரில் உட்பிரிவுகள் சம்மதம். குடும்ப விவரம் ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். தொலைபேசி : 8952604. பெட்டி எண் : 12042

● Brahacharanam, Gowthama, Chitrai boy, age 32, 174, M.Sc., Development Officer LIC, Rs. 5000/- seeks a graduate girl. Box No. 12043

● ஐயர், பிரஹசரணம், கர்க்ய கோத்திரம், திருவாதிரை 3-ம் பாதம், பட்டதாரி, வயது 37, திருப்பூரில் பனியன் ஏற்றுமதி நிறுவனத்தில் கணக்கர், மாத வருவாய் ரூ. 1600/- 5'7'', 32 வயதுக்குட்பட்ட குடும்பப்பாங்கான மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் முழு விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12044

● நன்கு படித்த, மத்திய அரசு பொது கூட்டுறவில் வடக்கே வேலையில் இருக்கும் ஹரித கோத்திரம் வடமாள் 6000/-, 45, 5'6'' பொறுப்பு கனமற்ற (Mutual divorcee) விவாகரத்து செய்யப்பட்ட வரனுக்கு அழகான பெண் தேவை. இளம் விதவைகள் விண்ணப்பிக்கலாம். உட்பிரிவு எதுவானாலும் சம்மதம். விதவை விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் : 12045

● தஞ்சை மாவட்ட அகமுடையார் பையன், வயது 35, எம்.ஏ., எம்.ஃபில்., முடித்து விட்டு ஃபைனான்ஸ் செய்து கொண்டிருக்கும் சொத்துள்ள பையனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த படித்த அழகான பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரத்துடன் எழுதவும். பெட்டி எண் : 12046

● Alliance for Kowsika Gothram, Palghat Iyer Boy, only son of very respectable family, B.Com., 31 years, 5.6", S. Railway, Madras Senior Clerk, Rs. 3000/-. Reply with horoscope and complete details to Box No. 12047

● Wanted fair, employed girls, Delhi based or transferable for Brahacharanam, Koundinya Gothram, Chitrai, 30 years, 5'4", graduate employed, boy in Delhi Private Co., Salary 2300/- p.m. Subsect no bar. Box No. 12048

● Alliance invited from Non-Bharadwaja graduates, Vadagalai with computer or typing or B.Ed., for a Boy Uthiradam 34, 5.5", well employed in Dubai. Contact Box No. 12050

● கௌசிக கோத்திரம், வடமாள், ரேவதி நட்சத்திரம் (7.4.1951) சொந்தமாக டிரான்ஸ்போர்ட் கம்பெனி நடத்தும் இதுவரை திருமணம் செய்து கொள்ளாத வரனுக்கு, எஸ்.எஸ்.எல்.சி., படித்த வேலை பார்க்காத குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 12051

● கர்க கோத்திரம், வடமாள், கேட்டை நட்சத்திரம், (14.2.1966) பி.எஸ்ஸி., மத்திய அரசுப் பணியில் உள்ள வரனுக்கு கிராஜுவேட், மத்திய, மாநில, நல்ல கம்பெனிகளில் வேலை பார்க்கும் மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 12052

● முதலியார் 35, பி.யு.சி., தாரமிழந்தவர், குழந்தையில்லை, சொந்த மருந்துக் கடை, டி.ஃபார்ம்., படித்த அல்லது படிக்காத நல்ல பெண் தேவை. ஜாதி தடையில்லை. வரதட்சணை தேவையில்லை. ஐயர் பெண் விரும்பத்தக்கது. பெட்டி எண் : 12053

● Alliance invited for Tamil Brahmin Iyer, Vadamal, Garga, Visakam, M.Com., 28, 5'3", slim, PSU from graduate girls working in PSU/LIC/Banks/Central Government/Good Companies Madras - Bombay based preferable. Send horoscope to Box No. 12054

● வடமாள், கௌசிக கோத்திரம், திருவோணம், உயரம் 5'10'', எம்.காம்., 04.10.1965, வேலை விக்ராந்த் டயர்ஸ் லிமிடெட், வருமானம் ரூ. 4000/- உள்ள வரனுக்கு நன்கு படித்து வேலை பார்க்கும் நல்ல குடும்பத்து மணமகள் தேவை. ஜாதகம், குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12055

● Wanted good-looking domestically trained Kerala, Tamil graduate girl willing employment for Kerala Iyer Boy, fair, medium built 30/140 cm, 2500/- B.Com., Vadama, Kausika, Thrikketta, employed Railways Ahmedabad. Reply with details to Box No. 12056

● செங்குந்த முதலியார், 30, 172 செ.மீ., பம்பாயில் பிரபல பப்ளிக் லிமிடெட் கம்பெனியில் மாதம் ரூ. 12,000 சம்பளத்தில் துணை மேலாளராகப் பணி புரியும் கோயம்புத்தூர் மாவட்டத்தைச் சேர்ந்த மணமகனுக்கு, அழகும், குணமும், படிப்பும், தன்னம்பிக்கையும் நிறைந்த குடும்பப்பாங்கான மணமகள் தேவை. குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 12057

● Vanniyakula Kshatriyar, U.S. employed, fair, Ph.D., USA/177/30/Hi Visa/Chevvai Dosham seeks good-looking girls suitably qualified. Reply with horoscope details to Box No. 12058

● அய்யங்கார், பாரத்வாஜம், 36 வயது, 6'', பி.ஏ. பட்டதாரி, குடும்ப தொழில் நிறுவனத்தில் வேலை செய்யும் ஒரே பையனுக்கு அழகான பட்டதாரி, நல்ல குடும்பப் பெண் தேவை. பெட்டி எண் : 12059

● Tamil Iyer, Vadamal, Haritha, Uttiram, 32, 168 cms, B.Sc., 5500/- employed in Madras Telephones, seeks alliance from Vadama, graduate, employed girl. Reply with horoscope to Box No. 12060

● Vellala youth aged 29, M.Com., arriving shortly on leave from Saudi, seeks matrimonial alliance from girls of fair complexion employed/otherwise, Apply with Bio-data, copy of horoscope. Caste Vellala, Mudaliar, Brahmin Etc. Phone : 2350319 Box No. 12061

• Postgraduate in Management completing Civil Engineering, 32/ 160/4500. Dynamic, discipplined, Radical Railway Staff, cultured, affluent Naidu family. Interested in Music and Literature. Divorcee WOE. Needs friendly smart educated girl with positive outlook and pleasant disposition. no bar. Box No. 12062

• 28 வயது, பிரஹசரணம், கௌண்டின்யம், ரேவதி 170 செ.மீ., எம்.எஸ்ஸி., பட்டதாரி எல்.ஐ.சி.யில் வேலை. அரசு அல்லது அரசுத் துறையைச் சார்ந்த நிறுவனங்களில் பணிபுரியும் 25 வயதுக்குட்பட்ட பட்டதாரிப் பெண் தேவை. உட்பிரிவு தடையில்லை. ஜாதகத்துடன் அணுகவும். பெட்டி எண் : 12063

• Tamil Iyer, Vadamal, Srivatsa Gothram, Anusham 27 years 170 cm, Textile Engineer, 5500/- salary. Employed at Coimbatore. Seeks alliance from Tamil Iyer girls. Same sect. Reply with horoscope to Box No. 12064

• Alliance invited for Iyer, Vadamal, Kaushika Gothram, Kettai star, Boy employed in Delhi 32, 160, 8000 Whetish complexion graduate girl preferred. Subsect no bar. Box No. 12065

• பிராமின் முறை வாழ்க்கை. தாய் பிராமின், தந்தை செட்டியார், 27/5.9/3000 தனியார் நிரந்தரப் பணியில் உள்ள சதயம் தீய பழக்கம் இல்லாத மணமகனுக்கு பிராமின் இனத்தில் மணமகள் தேவை. உடன் திருமணம் விவரங்களுக்கு பெட்டி எண் : 12066

• Hindu, Scheduled caste Arunthathiyar B.A., D.M.E. 38, 167, 3300 Central Government seeks graduate employed bride, Caste no bar, early marriage. Reply with horoscope to Box No. 12067

• பிரஹசரணம், ஹரித கோத்திரம், கேட்டை நட்சத்திரம், வயது 36, 5.3", பெயர் போன பிரைவேட் லிமிடெட் கம்பெனியில் உத்தியோகம் (டெல்லியில்); சம்பளம் ரூ. 2000, சுமாராகப் படித்த, வயதுக்கேற்ற நடுத்தரக் குடும்பப் பெண் தேவை. வேண்டியவர்கள் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12068

• Alliance invited from graduate employed Iyer girls for Srivathsa, Vadamal, Punarpoosam, 28, 157, B.Com., Delhi employed as Customer Executive in Multinational American Concern. Rs. 6000/- Contact to Box No. 12069

• Fair graduate employed Iyengar girl for handsome Naithruvakasyapa, Thiruvadirai, B.Com., Bajaj DBM, five figure salary in multinational with residence in Bombay. 30/180 Reply with horoscope famil details to Box No. 12070

• Alliance for Vadagalai, Kausika, Krithikai, 31/180/ Rs.6000, N.Arcot native, Central Govt. employee in Trivandrum from brides below 27 domestically well trained having good family background. Contact with horoscope to Box No. 12071

• Vani Chettiar Boy, B.E., (Electronics) 25, 5.8½, 6500, Serive Engineer, Private Ltd., Company, Bangalore wants bride same caste, beautiful. B.Sc., or above working age below 23. Phone : 8380942 STD 080 Box No. 12072

• Wanted good-looking and home loving bride for Brahacharanam, Haritha, Thiruvonam, 5'11", Rs.6000, 32 years Boy, working in a Govt. Company at Varanasi. Box No. 12073

• Alliance invited for 5'10", tall, fair, post-graduate Bank employed Haritha Gothra bridegroom 38 years from tall, fair, educated brides of respectable family below 32 years. Box No. 12074

• வடகலை, ஸ்ரீவத்ஸ கோத்திரம், மூலம், வயது 27, உயரம் 5'9", சம்பளம் ரூ. 4500/- தனியார் நிறுவனம், சென்னையில் நல்ல தனியார் நிறுவனம் அல்லது அரசு அலுவலகத்தில் பணிபுரியும் குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண் : 12075

• Alliance for Vadama, Garga Gothram, bachelor groom, 43, B.Sc., Moolam-2, Rs. 4000/-p.m., Accountant, Telegraph Department, Tamil Nadu, Smartha graduate girls only preferred. Employed or unemployed. Horoscope to Box No. 12076

• வடமாள், பாரத்வாஜ கோத்திரம், சித்திரை நட்சத்திரம், வயது 31, உயரம் 5'5", மாத வருமானம் ரூ. 4000/- படிப்பு பி.ஏ., சொந்த வியாபாரம் செய்யும் பையனுக்கு பட்டதாரி/பட்டதாரியில்லாத பெண் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12077

• 31, 165, 6000 Young looking Vannia Boy, employed at Madras in Government Service seeks well educated employed girl belonging to same caste. Reply to Box No. 12079

• Fair, Srivatsam, Brahacharanam, Krittika, Engineer, Iyer Boy 30, 163, B.Tech., I.R.P.S. seeks, charming, graduate girl below 27. Reply to Box No. 12082

• Alliance invited from emplyed graduate Iyer girls in Madras, below 27 years for Vadama Iyer, Srivatsa, Kettai 5'6" Boy 31 B.Com., Executive in a reputed Limited Company Rs. 4000/- p.m. Contact Box No. 12083

• Alliance invited from fair, good-looking, graduate brides from any caste for Yadava groom, 31, 163, 7500, correspond with horoscope to Box No. 12084

• Vathima Iyer Boy, Kabila, Rohini, 35, 160, 5000 handsome graduate, Bank Officer, seeks graduate girls with fair complexion employed in Bank, LIC, Govt. sector. Subsect acceptable to Box No. 12085

• ஐயர், வடமாள், சங்க்ருதி கோத்திரம், விசாகம், சென்னையில் மத்திய அரசு பணி, வயது 31, உயரம் 5'2", சம்பளம் ரூ. 3500/- குவார்ட்டர்ஸ் வசதியுடன் உள்ள மணமகனுக்கு உத்தியோகத்தில் உள்ள அழகான பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 12086

• Wanted suitable, fair, educated, un-employed or employed bride from good family for Agamudaya Mudaliar Boy, 27, 5'.3", Krithigai, B.A., (M.A.) (PGDCA), working in a Public Limited Company, salary 2500 at Madras. Box No. 12087

• Alliance for Boy Vadamal, Athreya, Thiruvadhirai, 32 years, 180 cms, B.SC., D.L.L. Junior Executive of Central Govt., undertaking, subsect acceptable. Box No. 12088

• வாத்திமா ஹரித புனர்பூசம், 29, 178 செ.மீ., பி.எஸ்ஸி., 3200 ஓசூரில் வேலை செய்யும் (சொந்தமாக 2 பிளாட்ஸ்) மணமகனுக்கு வேலையிலுள்ள/ வேலையில்லாத மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 12089

• Alliance invited for Brahacharanam, Kasyapa, Iyer, Aswini Boy, 28, 5'7", B.Com., MBA, fair, good-looking, working Delhi Joint Sector, Rs. 6000/- wanted Delhi based graduate girl preferably employed in Delhi. Send horoscope to Box No. 12090

• பெங்களூரில் சொந்த வியாபாரம் செய்யும் (Real Estate, Travels) அஷ்டசகஸ்ரம், உட்பிரிவு, 35 வயதான வரனுக்கு மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம். படிப்பு Aircondition Trade Diploma திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த குடும்பம். முழு விவரத்திற்கு ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். ஹஸ்த நட்சத்திரம். பெட்டி எண் : 12091

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ. 100/- தொகையை, 'மங்கையர் மலர்' பெயருக்குச் சென்னையில் மாற்றலாகக்கூடிய டிமாண்ட் டிராப்டாக மட்டுமே அனுப்ப வேண்டும். மணியார்டரோ, போஸ்டல் ஆர்டரோ ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். திருமண மலர் பகுதியில் விளம் பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்குப் பதில் அனுப்புபவர்கள், 'விளம்பரதாரர், பெட்டி எண் : C/o. மங்கையர் மலர், 47, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097' என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். தபால் பெட்டி எண்ணிற்கு வரும் கடிதங்களை அதற்குரிய விலாசத்திற்கு 15 நாட்களுக்கு ஒரு முறை அனுப்பி வைக்கப்படும். தபால் செலவிற்குத் தனிக் கட்டணம் எதுவும் கிடையாது. இந்த இதழில் பிரசுரமாகும் பெட்டி எண்களுக்குப் பதில்கள் நவம்பர் 30-ஆம் தேதிக்குள் எங்களுக்கு வந்து சேர வேண்டும். திருமண தகவல் நிலையங்கள் அனுப்பி வைக்கும் தபால்களை எங்கள் அலுவலகம் ஏற்றுக் கொள்வதில்லை. தனிப்பட்ட எந்தக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சோழிய வேளாளர், பிறந்த தேதி 13.8.65 சதய நட்சத்திரம், பி.காம்., (எம்.காம்.) டிசி.ஏ. சொந்தத் தொழில், மாத வருமானம் சராசரி ரூ. 30,000/- உடன் பிறந்தோர் ஒரே சகோதரி மட்டும், திருமணமாகி விட்டது. தந்தை அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரி, நல்ல குடும்பப் பின்னணியில் உள்ள படித்த மணமகள் தேவை. ஜாதி பேதமில்லை. வரதட்சணை தேவையில்லை. மணமகள் டாக்டராயிருந்தால் முன்னுரிமை அளிக்கப்படும். பெட்டி எண் : 12093

● Alliance invited for decently employed in Public Limited Company at Bangalore, salary Rs. 4000/- Brahacharanam, Iyer Boy, B.Com., Dip. in Computor, Shatamarshana Gothram, Aswathi, 32 years, 5'7", own House, Prefer employed/graduate girl, Reply with horoscope and family details to Box No. 12094

● தென்கலை ஐயங்கார், பாரத்வாஜ கோத்திரம், ஹஸ்த நட்சத்திரம், வயது 33, தனியார் எஸ்டேட், மாத வருமானம் ரூ. 3000/- எஸ்.எஸ்.எல்.சி. வரை படித்துள்ள மணமகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த வேலைக்குச் செல்லும்/செல்லாத மணமகள் தேவை. வடகலையும் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 12095

● Vadamal, Sadhayam, Bowarguthsa fair, handsome 39/168 gulf returned consider early marriage. seeks smart, good-looking, suitable girl from Computer/ Teaching professions. Please send complete family background with horoscope details (horoscope optional) to Box No. 12096

● ஆதி திராவிடர்A-32/H-166/S-4500/JE/TNEB/Madras மணமகனுக்கு குறைந்தது +2 படித்த மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 12097

● சௌராஷ்டிரா ஜெண்மகிஷி கோத்திரம் 26/165/ 4000/DME/TNEB/Madras கும்பகோணம் மணமகனுக்கு குறைந்தது +2 படித்த மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12098

● Vadama, Iyer 30 years, 5'10", Pooradam, Kousikam, own business in Bangalore wants good-looking home loving simple girl of 25 years from decent poor family. no demans. Box No. 12099

● வடமாள், பாரத்வாஜ கோத்திரம், ஹஸ்த நட்சத்திரம், 31/174 செ.மீ., எம்.எஸ்ஸி., பி.எட்., தனியார் பள்ளியில் கணித ஆசிரியர் (பெரியார் மாவட்டத்தில் உள்ள) குடும்பப்பாங்கான, படித்த வேலையில் உள்ள மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்கள் உடன் தொடர்பு கொள் ளவும். பெட்டி எண் : 12100

● Sowrashtra Shaliyarishi, Post-graduate software professional 28/169 cms, Son of retired scientist seeks fair, beautiful, graduate from educated well-to-do families for early 1996 marriage. reply with horoscope family details to Box No. 12101

● ஐயர், பாரத்வாஜ கோத்திரம், கேட்டை, 27 வயது, 5'.4", B.Sc., NIIT, Honours Computer Diploma, சென்னையில் பிரைவேட் கம்பெனியில் வேலை பார்க்கும் பையனுக்கு நல்ல குடும்பத்தைச் சார்ந்த மணமகள் தேவை. பெட்டி எண் : 12103

● Tamil Iyer, Vadamal, Srivatsa, Anusham, 29, 175 cms, graduate, 7000/-p,m. empoyed as Sales Officer in a Computer Manfacturing Company, seeks alliance from employed girls, Reply with horoscope to Box No. 12104

● செங்குந்த முதலியார் சேலூரார் வம்சம், ரோகிணி நட்சத்திரம், வயது 36, உயரம் 5'6", பி.யு.சி., சொந்தத் தொழில், 5 இலக்க வருமானமுள்ள மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த, ஜாதகத்தில் செவ்வாய் தோஷம் உள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 12105

● பாலக்காடு ஐயர், வடமாள், பாரத்வாஜம், விசாகம் சுத்த ஜாதகம், 33, 173, 1900 (பி.ஏ.) appeared final M.A.பாலக்காட்டில் தனியார் துறை பணிபுரியும் பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. பெட்டி எண் : 12106

● Alliance from qualified girls for Sevvai Dosham, Aswini, Srivatsa Gothram, Vadama Iyer 40 years, 175 cms, C.A., bachelor propertied well to do family. Jeshta Nakshatram not suitable. Box No. 12107

● Good-looking bride below 28 employed at or transferable to Coimbatore for smart Vadamal, undergraduate 35/158/4000, Marketing Manager, Private Company. Sisters married only son Keralites preferred. Sub-castes considered. Horoscope details to Box No. 12108

● தெலுங்கு பிராமணர், நியோகி, சாயங்கால கோத்திரம், வயது 28, எம்.ஏ., பி.எட்., கிருத்திகை, தனியார் ஷிப்பிங் ஏஜென்ஸி, (தெற்கு)-ல் வேலை ரூ. 3000/- சம்பளம், 6'10", உயரம், அழகான, சிவப்பான மணமகனுக்கு. அரசாங்கம் மற்றும் மத்திய பணியில் நிரந்தர வேலையுள்ள மாற்றக்கூடிய குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் அணுகவும். பெட்டி எண் : 12109

● Kowsiga Gothram, Pooram star, Thengalai, 33 years, 175 cms, smart, clean habits, Rs. 6000/- p.m. Homeo Meidcal Sales Officer, employed girls Rs. 2000/- p.m.

பண்டிகை நாட்களில் பலவித பழங்கள் வாங்கி மீந்து விட்டால் அன்று மதியம் பழங்களை நன்றாக கலந்து, சிறிது தேங்காய், வெல்லம், தேன் கலந்து சற்று நேரம் பிரிட்ஜில் வைத்து குழந்தைகளுக்குக் கொடுக்க தட்டுதான் மிஞ்சும்!

—ஜானகி



என் குழந்தைக்கு உயிர் பிச்சை கொடுங்கோ. நான் ஆயுக முழுக்க சனிக்கிழமை ஒரு போது மட்டும் சாப்பிட்டு விரதமிருக்கேன்னு... இன்னிக்கு என்ன கிழமை... சனிக்கிழமை.. காலம்பற துளசி தீர்த்தம் சாப்பிட்டதுதான். சாயந்திரம் கோவிலுக்குப் போயிட்டு வர்றதுக்குள்ளே... உன் அண்ணா அகமுடையா புளிச்ச மாவைக் கரைச்சு வச்சுட்டு படுக்கப் போயிட்டா..."

நாச்சா, தாயைத் தன் தோளின் மீது சாய்த்துக் கொண்டு, மெள்ள நடத்தி வீடு வந்து சேர்ந்தான். வாசற்திண்ணையிலேயே 'உர்'ரென்று முகத்தை வைத்துக் கொண்டு தர்மாம்பாளின் கணவர் பட்டாபி...

"என்ன... கோவிச்சுண்டு ஆத்துல இறங்கிடறேன்னு போறாளாக்கும். நீ போய், வேண்டாம்னு கையைப் பிடிச்சு தடுத்தாட் கொண்டியாக்கும். எருமை மாடு மாதிரி வயசாறதே தவிர, உங்கம்மாவுக்கு அறிவே இல்லேடா. ஒரு வாரமா இவளுக்கு வயிறு சரியில்லே. டாக்டர்கிட்டேயும் வர மாட்டேங்கறா. கை வைத்தியமா தானே சுக்கையும், திப்பிலியையும் வறுத்து, இடிச்சு, கஷாயம் செஞ்சு குடிச்சிண்டிருக்கா. இந்த லட்சணத்துல அடைய வேற சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கணுமான்னு நல்ல எண்ணத்துல உங்க மன்னி மாவைத் தூக்கிப் பரண்லே வச்சா உடனே கோவிச்சுண்டு ரேஸ் குதிரை மாதிரி வெளியில ஓடிடணுமா..."

"அப்பா, இதை மன்னியே அம்மாகிட்ட சொல்லி இருக்கலாம் இல்லே..."

"ஆகா. உங்கம்மாவுக்குத்தான் மாட்டுப் பொண் மூஞ்சியை நேரே பார்த்துப் பேசிட்டா தலையில இருக்கிற கிரீடம் இறங்கிடுமே.. இவ, என்னிக்காவது பிரியமா, சினேகமா அவகிட்ட பேசினாத்தானேடா அவளும் பேசுவா? உனக்கு இப்பத் தெரியாது... உனக்குன்னு ஒருத்தி வருவா பாரு... அப்பத்தான் தெரியும்; உங்கம்மாவோட சுபாவம்..."

அவர் புராண காலத்து ரிஷி மாதிரி சபித்தார். அம்மா மூக்கை உறிஞ்சிக் கொண்டே தாழ்வாரத்து முற்றத்தில் – சுவரைப் பார்க்கப் படுத்தாள்.

நாச்சாதான் கையைப் பிசைந்தான். இத்தனை அமர்களத்துக்கும் காரணமான ராமன் மனைவி, படுக்கையறையில் இருந்து எழுந்தே வரவில்லை. வர மாட்டாள். அது அவள் சுபாவம். படுத்தபடியே - அந்த ஸ்ரீரங்கத்து இரண்டு கட்டு வீட்டையும் மொத்தமாய் சேர்த்து இழுப்பது போல மூக்கை உறிஞ்சுவாள். எப்போதாவது - எப்போதாவதுதான் ராமன் மட்டும் வெளியே எட்டிப் பார்ப்பான்.

"என்ன..."

"அம்மா இப்படி கொலைப் பட்டினியாக் கிடக்கறச்சே எப்படிடா உங்களுக்கெல்லாம் தூக்கம் வர்றது..."

"இதப் பாரு.. ஆகாத்தியக்காரங்களோட மல்லுக்கு நிற்க என்னால முடியாது. இது அம்மாவோட வீடு... வேணுமானா பரண் மேல இருக்கற மாவை எடுத்து, வேண்டிய மட்டும் அடை தட்டிச் சாப்பிடட்டுமே... யார் கையைப் பிடிச்சு தடுக்கறா..."

"அதெப்படிடா... மன்னி அப்படி செஞ்சதுக்கு அப்புறம்..."

"என் பொண்டாட்டி வேணும்னு செஞ்சதாகவே இருக்கட்டும். இவ மனசுல எதுவுமில்லைபின்னா 'ஏண்டியம்மா, எனக்கும் இன்னிக்கு சனிக்கிழமை விரதம்தான். ரெண்டு அடையை எடுத்து தட்டுலப் போட்டு இப்படி நகர்த்து'ன்னு சொல்ல வேண்டியதுதானே... 'எதுடா சாக்கு, சண்டைக்கு'ன்னு துவஜம் கட்டிண்டு நின்னா... யார், என்ன செய்ய முடியும்..."

நாச்சா, உடனே அம்மாவின் அருகில் மண்டியிட்டு அமர்ந்து தழுதழுத்த குரலில் கெஞ்ச...

"அவன்தான் அப்படிச் சொல்றானில்லே? எழுந்து வா. தோசைக் கல்லை அடுப்புலப் போடு. நான் சுடச் சுடத் தட்டித் தர்றேன்."

"போதும்டா. இத்தனைக்கு அப்புறமாவும் நான் அதைச் சாப்பிட்டேன்னா '–' திங்கறதுக்கு சமம்..."

21 – 11 வரிசை
11ல் நிறுத்தவும்



–ஹேமா கோதண்டராமன்

அம்மா படுத்து, தலையோடு கால் இழுத்துப் போர்த்திக் கொள்ள...

ஒன்றா – இரண்டா.. இது போல எத்தனை விஷயங்கள்... சுப்ரீம் கோர்ட் நீதிபதியாலும் தீர்த்தே வைக்க முடியாத வழக்குகள்...

ஒருநாள்... இரண்டு நாள் இல்லை. கிட்டத்தட்ட மூன்று வருடங்கள் போல இந்த யுத்தம் தொடர்ந்து நடந்து கொண்டேதான் இருந்தது.

பட்டாபி கண்ணை மூடி, அவர் வரையில் மருமகளிடம் 'உத்தமர்' என்கிற பெயரை வாங்கிக் கட்டிக் கொண்டார்.

தினமும் இவர்களது அழுகையையும், ஆர்ப்பாட்டத்தையும் தாங்க முடியாது என்று ராமன் சென்னைக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு போனான்.

"ராமன் பெண்டாட்டிகிட்ட நான் பட்ட கஷ்டமெல்லாம் போதும். உன் சின்ன அண்ணா சுந்தாவுக்காவது ஏழைக் குடும்பத்துல இருந்து நல்ல பொண்ணா அடங்கினச் சரக்கா..."

தர்மாம்பாள் இப்படி ஆரம்பித்த போது, நாச்சா, தனக்கு வந்த வெளிநாட்டு வாய்ப்பை எல்லாம் உதறி விட்டு, திருச்சி கல்லூரியில் விரிவுரையாளராக வேலை பார்க்கத் தொடங்கி விட்டான்.

சுந்தாவுக்குப் படிப்பு அதிகமில்லை. இயல்பிலேயே அம்மாவிடம் மென்மையும், ஈரமும் உண்டு. இதே காவிரிக் கரை - அம்மா மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டுதானே அவர்களிருவரும் இனிமேல் அம்மாவைக் கண்கலங்காமல் வைத்துக் கொள்வது பற்றிப் பேசினார்கள்.

"பாவம்டா. அவளுக்குத்தான் நம்மை விட்டா வேற யார் இருக்கா? கல்யாண விஷயத்துல எனக்குன்னு தனியா எந்த அபிப்பிராயமும் இல்லே. அம்மாவும், நீயுமாப் போய் எந்தப் பொண்ணைப் பார்த்துப் பிடிச்சிருக்குன்னு சொன்னாலும் சரிதான். தாலி கட்ட நான் ரெடி..."

"மன்னி கொஞ்சம் பெரிய எடத்துப் பொண்ணு..."

சுந்தா – காற்றில் கை குவித்துச் சொன்னான்.

"வேண்டாம்பா. பெரிய எடமே வேண்டாம். அம்மா சொல்றாப்பல பணம் முக்கியமில்லே. ஏதோ சொந்தமா வீடு இருக்கு. நான் ஒண்ணும் உங்க ரெண்டு பேரை மாதிரியும் பெரிசாப் படிச்சுப் புரட்டலையின்னாலும்... வர்ற சம்பளம், குத்தகைக்கு விட்டிருக்கற நிலத்துல இருந்து வர்ற நெல்... இதெல்லாம் போதும்... வர்றவளுக்கு நம்ம அம்மாவோட அருமை தெரிஞ்சிருக்கணும்..."

**வே**தா – சுந்தாவுக்குப் பார்த்த பெண். அவளுக்கு மாமியாரின் அருமை மட்டுமில்லை. பெரியவன் பெண்டாட்டியினால் மாமியார் பட்டிருந்த வேதனையும் தெரிந்திருந்தது.

கல்யாணம் முடிந்து சுந்தா மனைவியுடன் அந்த வீட்டுக்குள் காலெடுத்து வைக்கும் போது தர்மாம்பாள் நாச்சாவின் காதோடும் சொன்னாள்.

"நாச்சா... கல் கோட்டை மாதிரி வீடும், பதினஞ்சு பவுன் நகையும் போட்டு, நயா பைசா வரதட்சணை வாங்காம ஒரு பள்ளிக்கூட வாத்தியார் பொண்ணை என் பையனுக்கு எடுத்திருக்கேன். இவளாவது என்னை என் சொச்ச காலத்துக்கும் நிம்மதியா வச்சுக்கணும்டா. இத்தனை வயசுக்கு அப்புறம் நான் என்ன கேட்கப் போறேன். ஒரு பிடி சாதம்... துளியூண்டு மோர் தண்ணீ..."

இப்படி அவள் சொன்ன போது, அவனுமே இதற்காகக் கவலைப்பட்டான். ஆனால் – இங்கே விஷசிக்கல் வேறு விதமாய் ஆரம்பமாகியது.

**வே**தா வந்த புதிதில் மாமியாரும் மருமகளும் ரொம்பத்தான் இழைந்தார்கள். கோவிலாகட்டும், சினிமாவாகட்டும்... இரண்டு பேருமே சேர்ந்துதான் போய் வந்தார்கள்.

மருமகளை நாள், கிழமை என்றால் மலைக்கோட்டைக்கு அழைத்து வருவதும், வளையலும், காதுக்கு இமிடேஷன் வகையறாக்களுமாய் வாங்கித் தருவதும், அவளை உட்கார வைத்து எண்ணெய் தேய்த்து விடுவதும், பிரசவத்தைக் கூட தன் பாதுகாப்பிலேயே வைத்துக் கொள்ள வேண்டும் என்று அன்புக் கட்டளையிட்டதும்...

எல்லாமே இனிதாகத்தான் இருந்தது...

வேதாவைப் பற்றி ஒரு வார்த்தை கூட

காலிஃப்ளவர் பக்கோடா செய்யும் போது சில தேங்காய்த்துண்டுகளை (மெல்லியதாக நீளவாட்டில் நறுக்கியது)யும், முட்டைக்கோஸ் துருவியதையும் சேர்த்துப் போடுங்கள். ருசியாக இருக்கும்.

— லட்சுமிசுந்தரம்



குற்றம் சொல்ல முடியாது. ஏழ்மையில் பிறந்து, ஏதோ அரை வயிற்றுக்கு உணவு கிடைத்தாலே சொர்க்கம் என்று ஏங்கிக் கொண்டிருந்தவளுக்கு நிஜமாகவே சொர்க்கத்தைப் பிடித்துக் கையில் தந்தாற்போலிருந்தது.

இயல்பிலேயே பயந்த சுபாவம். மாமியார் என்ன... சீனு, ரங்கன் இவளை விடவும் ஒரு வயது சின்னவன்தான்... இவன் வார்த்தையைக் கூட மீற மாட்டான். இரைந்து பேசவே தெரியாது. மாமியார்தான் செய்கிறாளே என்று அலட்சியமாய் இருக்கவெல்லாம் தெரியாது.

தர்மாம்பாள் 'ஏன்' என்பதற்கு முன்னால் எண்ணெயாகத்தான் நிற்பாள்.

ஆனால் –

நாள் செல்லச் செல்ல தர்மாம்பாள் பெரியவளிடம் காட்ட முடியாத ஆதிக்கத்தை எல்லாம் இவளிடம் காட்டத் தொடங்கினாள்.

"நான் எழுந்து வர்றதுக்குள்ளே நீ எதுக்காக குக்கர் வச்சே?"

"ஏம்மா... சும்மாத்தான். படுத்துண்டிருந்தேள். அசந்து தூங்கறச்சே எழுப்ப வேண்டாமேயின்னு..."

"ஒரு குரல் கொடுக்க வேண்டியதுதானே... நான் என்ன செத்தாப் போயிட்டேன்..."

நாச்சாவுக்கு அம்மாவின் கோபம், வியப்பை அளிப்பதாய்...

"என்னம்மா நீ... உனக்கு நல்லதுதானே செஞ்சிருக்கா?"

"ஆமா போ. நீ ரொம்ப கண்டே. வாசல்லே போய்ப் பாரு. இன்னிக்கு வைகுண்ட ஏகாதசி. எந்த ஊர்லே இருக்கறவாளும், பெருமாளுக்கு சுத்த பத்தமா பட்டினி கிடந்து, உப்பில்லாம சமைச்சு விரதமிருப்பா. பெருமாள் புறப்பாடு ஆயிடுத்து. அவா அவா வாசலை அடைச்சு கோலம் போட்டிருக்கா. நாமதான் விடியறச்சேயே வயித்துல வெங்கலப் பானையக் கட்டிண்டு..."

"நேத்திக்கே இதைச் சொல்லயிருக்கலாம் இல்லையா..."

"நான் சொல்லணுமா? இவளுக்குத் தெரியாதா... இருபத்தாறு வயசாறது இல்லே? சின்னக் குழந்தையா... இவா வீட்டுல எல்லாம் இப்படித்தான் குளிக்காமலேயே..."

"மன்னி காலம்பறயே குளிச்சிட்டா..."

"என்ன குளியல்... காக்கா குளியல்.. தலைக்கு ஸ்நானம் செஞ்சாளா..."

வேதா ஓடிவந்து, மாமியாரின் காலில் விழுந்து அழ மாட்டாதக் குறையாய் கெஞ்சுவாள்.

"மறந்துடுத்தும்மா. என் புத்திய எதாலே அடிக்கறதுன்னு தெரியலே..."

"இதப் பாரு.. இப்ப நான் உன்னை என்ன சொன்னேன்னு இந்த மாதிரி பேசறே. உம்? என்னை எழுப்பக் கூடாதான்னுதானே கேட்டேன்? இது ஒரு தப்பாப் போச்சா உனக்கு?"

நாச்சாவுக்கு – தாயின் மீது உயிரையே வைத்திருக்கும் சுந்தாவுக்கு - 'ச்சே' என்றாகி விடும்.

"அம்மா, அவ தன்னைத் தானே திட்டிக்கறா. விடேன். அந்தக் குக்கரை அப்படியே தூக்கி அந்தண்டை வச்சுடச் சொல்லு. அவளையே மறுபடியும் தலைக்கு குளிச்சுட்டு வந்து, புதுசாக் குக்கர் வைக்கச் சொல்லு. சொன்னா, செஞ்சுட்டுப் போறா..."

சுந்தாவின் குரலைக் கேட்கவே பரிதாபமாய்...

தர்மாம்பாள் - ஏற்கெனவே உள்ளடங்கிய முகவாயை இன்னமும் சுருக்கிக் கொண்டு – உணர்ச்சியே இல்லாத மரத்துப் போன குரலில் கூறுவாள்.

"ஒண்ணும் வேண்டாம். ஏற்கெனவே உன் பெண்டாட்டிக்கு மார்சளி. முந்தா நாள் உங்க மாமனார் வந்து பார்த்துட்டு, 'இப்படி இருமறியேம்மா. டாக்டர்கிட்ட காமிச்சு, மருந்து ஏதாவது வாங்கிச் சாப்பிடேன்'னு போற போக்குல என் காதுலேயும் விழறாப்பல சொல்லிட்டுத்தான் போறார். இத்தனை நாளும், பொண்ணை அவர்தான் தாங்கறார் பாரு. இன்னிக்கு எனக்காக இன்னொரு தடவை குளிச்சு, சுபம், ஜன்னியின்னு விபரீதமா ஏதாவது ஆயிடுத்துன்னா எல்லாரும் என் தலையைத்தான் போட்டு உருட்டுவா.



# உறவுகள் தொடரட்டும் மகிழ்ச்சிகள் பெருகட்டும்

- ★ காலம் காலமாய் நிலைத்திருக்கும் உறவுகள் இனிமையானவை.
- ★ ஸ்ரீராம் சிட்ஸ்க்கும் அதன் 10 லட்சம் சந்தாதாரர்களுக்குமிடையே நிலைத்து நீடிக்கும் உறவைப்போல.
- ★ உங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள சுலபமான வாய்ப்பை ஸ்ரீராம் அளித்து வருகிறது. இன்று நேற்றல்ல; கடந்த 22 வருடங்களாக.
- ★ கௌரவமான முறையில் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளும் வாய்ப்பு. தேவைகளுக்கும் வசதிகளுக்கும் ஏற்ப விரைவாக உங்கள் பணத்தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள உதவும் வாய்ப்பு.
- ★ குடும்பத்தின் ஒரு தலைமுறையோடு நின்று விடுவதில்லை. அடுத்த, அதற்கடுத்த தலைமுறைக்கும் தொடர்கிறது.

## திருமதி பி. மீனாட்சி சான்று கூறுகிறார்:

"நண்பரின் ஆலோசனைப்படி தந்தை ஸ்ரீராமில் சேமிக்கத் தொடங்கியிருந்தார். பின்னர் ஒரு சமயம், சென்னையை அடுத்த புறநகரில் வீட்டுமனைகள் விற்பனைக்கு வருவதாக அதே நண்பர் தெரிவித்தபோது, அதனை வாங்க அந்தச்சீட்டு உபயோகமாக இருந்தது. பின்னர் அலுவலகத்தில் லோன் போட்டு வீட்டைக் கட்டி முடித்துவிட்டார்.



வருடங்கள் நகர்ந்தன. தந்தையைப் போலவே எனக்கும் ஒரு சந்தர்ப்பத்தில் ஸ்ரீராம் துணை நின்றது. என் ஒரே நாத்தனாரின் கல்யாணம் திடீரென நிச்சயமாகியது. எல்லா ஏற்பாடுகளையும் செய்யத் தொடங்கினோம். அப்போதுதான் ஒரு சிறிய தட்டுப்பாடு. பத்து பவுனுக்கு நகை வாங்க வேண்டும். பணம் குறைந்தது. அதனை ஈடுசெய்தது என் கணவர் சேமித்து வந்த ஸ்ரீராம் சீட்டுதான். அன்றும் சரி, இன்றும் சரி, ஒரு நெருக்கடியான சமயத்தில் எங்களுக்கு உதவியது ஸ்ரீராம்தான்.

- பி. மீனாட்சி, சென்னை - 600 088."

## தொடரும் இனிய உறவுகள்!

★நிலைத்து நீடிக்கும் இத்தகைய உறவுகள் ஒரு குடும்பத்தோடு நின்றுவிடுவதில்லை. சமூக நடவடிக்கையாக, சமுதாயப் பண்பாடாகப் பல்வேறு வடிவங்களில் இடம் பெற்று வருகின்றன. அந்த இனிய பண்பாட்டுக்கு ஸ்ரீராம் தலை வணங்குகிறது.

## இளைஞர்கள் இடம் பெறும் விழிப்புணர்வு கூட்டமைப்பு

இராமனாதபுரம் மாவட்டத்தில் உள்ள 'எருமகுளம்' சின்னஞ்சிறு கிராமம்தான் மிகவும் பின்தங்கிய வறட்சி பூமிதான். எனினும், இக்கிராம இளைஞர்களை எடுத்துக் கொள்ளுங்கள். துடிப்பு நிறைந்தவர்கள். கிராம நலனில் மிகுந்த அக்கறை கொண்டவர்கள். கல்லூரியை எட்டாதவர்களானாலும் உறவுகளை வலுப்படுத்தி சாதனை படைக்கத் துடிப்புடன் செயல்படுகிறவர்கள். இவர்கள் உருவாக்கியிருப்பதுதான் 'கிராம நலக்கூட்டமைப்பு' என்கிற விழிப்புணர்வு இயக்கம்.

சுமார் 40 இளைஞர்கள் இதில் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பொறுப்பு. உதாரணமாக 'மின்சாரம் - தெரு விளக்கு' ஒருவர் பொறுப்பு என வைத்துக் கொள்வோம். மின்கோளாறு காரணமாகத் தெருவிளக்கு எரியவில்லையா! சம்மந்தப்பட்ட அலுவலர்களைச் சந்தித்து ஆவன செய்ய வேண்டியது அவர் பொறுப்பு. இவ்வாறு கிராமநலன் கருதி ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்பட்டுள்ள பொறுப்புகளை அவரவர் சிறப்பாகச் செயல்படுத்த வேண்டும்.

வாரம் ஒரு முறை அனைவரும் ஒன்று கூடி, செயல்பாடுகளில் எதிர்ப்படும் பிரச்சினைகள் குறித்துப்பேசித் தீர்வு காண்கிறோம்.

இவ்விளைஞர்கள் கூட்டமைப்பு கிராமத்தில் கிரிக்கெட் மைதானம் ஒன்றையும் நிறுவி, ஆண்டுதோறும் மாவட்ட அளவிலான கிரிக்கெட் போட்டிகளையும் நடத்துகிறது. வெற்றிக் கோப்பைகளையும் எங்கள் கிரிக்கெட் அணி பலமுறை வென்றிருக்கிறது. சேவை மனப்பான்மை எங்கள் உறவுகள் வலுப்பட ஒரு பாலமாக அமைகிறது.

- கே. காளிமுத்து,
எருமகுளம் - 623 603

தொடரும் இனிய உறவுகள்!

இப்ப என்ன, பெருமாளாப் பார்த்து, 'இன்னிக்கு முழுப் பட்டினி கிடடி'யின்னுட்டார். குளிச்சுட்டு வந்து கோவிலுக்காவது போயிட்டு வர்றேன்..."

வேதா அப்படியே மரவட்டையாய் சுருண்டு போய் விடுவாள்.

கண்ணெதிரே அறுபது வயசைத் தாண்டிய ஜீவன் – பச்சைத் தண்ணீர் பல்லில் படாமல் கிடக்கும் போது – தட்டுப் போட்டுக் கொண்டு சாப்பிடுகிற அளவுக்கு வேதாவுக்குக் கல் மனசில்லை. உள்ளேயே புழுங்கிப் புழுங்கி அழுவாள். அடிக்கொரு தரம் மாமியாரின் நிழல் விழும் தூரத்தில் நின்று கொண்டு, 'அம்மா அம்மா' என்று கூப்பிடுவான். இதற்குள் சுந்தா 'மளமள'வெனக் காவேரிக்குப் போய் குளித்து விட்டு, ஈரத் துண்டுடன் வந்து, குமுட்டி அடுப்பில் சின்ன உருளியை ஏற்றி பயத்தம் கஞ்சி வைப்பான்.

"அம்மா, இதப் பாரு.. உனக்காக நானே..."

தம்ளரைத் தூக்கிக் கொண்டு அவன் அம்மா இருக்கும் இடத்தைத் தேடி வரும் போது அவள் இருக்க மாட்டாள். புழக்கடையில் ஒற்றை அறையில் வாடகைக்குத் தங்கியுள்ள நாகோஜி ராவ் சம்சாரத்திடம் ஒரு தம்ளர் நீர் மோரை வாங்கிக் குடித்து விட்டு, பிரதியாக தன் வீட்டு சமாச்சாரங்களை எல்லாம் கடை பரப்பிக் கொண்டிருப்பாள்.

"வயசாச்சு இல்லையா... முன்னே மாதிரி பட்டினி கிடக்க முடியலே... பெரியவ - ராமன் பெண்டாட்டி ஒரு மாதிரியின்னா இவ வேறே மாதிரி.. எதுவுமே வெளில சொல்லிக்கற மாதிரி இல்லே. ஒவ்வொரு மாமியார் மாதிரி நான் என்ன - மாட்டுப் பொண்ணைப் படுத்தறேனா.. தலைக்கு ஸ்னானம் செஞ்சுட்டுத் தான் சமைக்கணும்னு ஆர்டர் போடறேனா.. நான் வந்து இந்த குக்கரை வைக்க மாட்டேனா... அதுக்குள்ள என்ன அவசரம்னுதான் கேட்டேன். அது ஒரு தப்பாப் போச்சு. போதும்டிம்மா. இந்த ஏகாதசிய என்னால மறக்கவே முடியாது. இனிமே வர்ற ஏகாதசிக்கெல்லாம் முழுப் பட்டினி மட்டுமில்லாம மௌன விரதமும் இருக்கறதுன்னு தீர்மானிச்சுட்டேன்."

"சுந்தா மட்டுமில்லாம நாச்சாவும் அவ பக்கம்தான் பேசறான். அவ்வளவு ஏன்.. மூந்தா நாள் ராத்திரி பிள்ளை பெத்தவ, பச்சை உடம்புக்காரி, ஈரத்தலை கூட காயாம 'ஏன் தரையில படுத்துண்டு தூங்கறே... கைகேயி மாதிரி'யின்னு விளையாட்டாத்தான் கேட்டேன். அழுது அழுது ராத்திரி முழுக்க இரும் தீர்த்துட்டா. சின்னவன் - அதான் ரங்கன் வந்திருந்தான். அவன்கிட்ட சொல்லி வருத்தப்பட்டுண்டேன். 'மன்னிய ஏதாவது சொல்லலையின்னா உனக்குத் தூக்கமே வராதேம்மா'ங்கறான். ஏண்டி கங்கா... நீயே சொல்லு. ஒவ்வொருத்தரைப் போல நான், மாட்டுப் பொண் கண்ணுல விரலைக் கொடுத்து ஆட்டறேனா..."

"இவளுக்காக நான் என்னவெல்லாம் செஞ்சிருக்கேன். ஈர்குச்சி மாதிரி ஒத்தை வளையலோட வந்தா இவ... ஒரே வீட்டுல - பெரியவ முழங்கை வரைக்கும் தங்கமும், வைரமுமா அடுக்கிண்டு வளைய வர்றச்சே இவ மட்டும் அபிஷேக நாச்சியார் மாதிரி நின்னா நன்னாவா இருக்கும்னு நான்தான் என்னோட தாலிச் சரட்டை அழிச்சு ஆறு பவுனுக்கு ரெண்டு ஜதை பம்பாய் மோஸ்தர் வளை போட்டேன்..."

"அவ பக்கமே மூணு தடியன்களும் பரிஞ்சு பேசறாங்க.. நியாயமா... பெத்தவ மனசு சங்கடப்பட்டா... வேண்டாம். அதை நான் சொல்ல வேண்டாம். இவளுக்கு வளைகாப்பு நடத்தி, பிரசவம் பார்த்து, குளிமுறை செஞ்சு... கண்ட பலன் - இதோ ஏகாதசி அதுவுமா உன் வீட்டு நீர் மோர்தான். இன்னும் கொஞ்சம் கொடு. நீ நன்னாயிருப்பே..."

அன்றைக்கு நாகோஜி வீட்டு வாசற்படியிலேயே நின்று இத்தனையையும் கேட்டுக் கொண்டிருந்த சுந்தா பக்கத்தில் நின்ற நாச்சாவைப் பார்த்தான். கையில் ஆவி பறக்க,

---



**கேசரி, சர்க்கரைப் பொங்கல் செய்யும் போது 1 பங்கு நெய்யுடன் இரண்டு பங்கு ஓ.கே. ஆயில் அல்லது ரீபைண்டு ஆயிலை சூடுபண்ணி ஊற்றிச் செய்தால் வெகு நேரம் நெய் உறைந்து போகாமல் சுவையுடன் இருக்கும். டால்டாவிற்கு பதில் ரீபைண்ட் ஆயிலைக் காய்ச்சி உபயோகப்படுத்துவதே சிறந்தது.**

– குமுதம்

ஏலக்காய் தட்டிப் போட்டு, 'கமகம'வென அவனே தயாரித்த பயத்தம் கஞ்சியையும் ஒருமுறை பார்த்தான். பிறகு என்ன தோன் றியதோ, கையிலிருந்த கஞ்சியை தானே குடித்து விட்டு நகர்ந்து விட்டான்.

இப்படி தொட்டதற்கும், தொடாததற்கும் சின்னதும் பெரிசுமாய் ஆயிரம் பூசல்கள்.

அதுவும் மகன் பகலில் வீடு வந்து, சாப் பிட்டு அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு தூங்கினால் அப்போது வேதாவும் அந்த அறைக்குள் இருந்து விட்டால் போதும். அவள் அந்தண்டை போனதும் 'மொலு மொலு'வென பிடித்துக் கொள்வாள். நேரிடையாகத் தாக்க மாட்டாள். சுற்றி வளைத்து, ஏதேதோ சொல்வாள்.

"எங்க காலத்துல எல்லாம் காலம்பற குளிச்சிட்டு உள்ளே வந்தா, அப்புறம் ராத்திரி படுக்கற மட்டும் படுக்கை அறைக்குள்ள நுழைய மாட்டோம்..."

"ஆம்பிளைங்க அப்படித்தான். அவங்க கொக்குக்கு மதியே ஒண்ணுன்னு ஒண்ணைப் பிடிச்சா குரங்குப் பிடியாத்தான் இருப்பாங்க. நாமதான் எடுத்துச் சொல்லணும். நமக்கே விவஸ்தை இல்லையின்னா எப்படி?"

"எங்க மாமியார்னா சாயந்திரம் விளக்கு வைக்கறப்பவே சூசகமாச் சொல்லிடுவா. இன்னிக்கு உள்ளே படுக்கலாம். படுக்கக் கூடாதுன்னு நாள், நட்சத்திரம், திதி பார்த்து கர்ப்பாதானம் செய்யணும். அப்படி எல்லாம் விரதமிருந்து, என் மாமியார் பஞ்சாங்கத்தைப் புரட்டிப் புரட்டிப் பார்த்து, அவா சொன்ன படி பெத்துண்ட பிள்ளைகள்தான் நாலு பேரும்... ராம லட்சுமணா மாதிரி..."

"ஒவ்வொருத்தனுக்கும் என்ன பாடு பட்டேன்? இப்படியா பெரியவா முன்னாலே குழந்தையைத் தூக்கி சப்புசப்புன்னு முத்தம் கொடுப்போம். சும்மா விட்டுடுவாளா.. ஒழிச்சு தோரணம் கட்டிடுவா.. 'நன்னாத்தான் இருக்கு... தான் பெத்த பிள்ளைய தானே கொஞ்சறது'ன்னு என் மாமியாரும், நாத் தனாரும் அக்கிரகாரம் முழுக்கச் சொல் லிண்டு திரிவா..."

"காலிலே செருப்பு போட்டுக்கக் கூடாது. மூக்குல கண்ணாடி மாட்டிக்கக் கூடாது. ஒரு பிள்ளை பிறக்கற வரைக்கும்தான் ஆறு கஜம். அப்புறம் மடிசார்தான். காலம்பற அடுப்பை மூட்டினா, ராத்திரி வரைக்கும் சரியா இருக் கும். இதுல இரைஞ்சு பேசக் கூடாது. புருஷாள் எதிருல வரக் கூடாது. அகமுடை யானே ஆனாலும் காபி தம்ளரை கையில கொடுக்கக் கூடாது. பிரசவத்துக்கு அப்புறம் குறைஞ்சது குழந்தைக்கு ஒரு வயசாற வரைக்கு மாவது

---

காமரா உள்ளே படுக்கக் கூடாது. இப்ப மாதிரியா... பிரசவித்த தீட்டு போறதுக்கு முன்னாடியே அகமுடையான் பெண்டாட்டி கட்டில்லே வந்து உட்கார்ந்து பேசறானே... அதெல்லாம் அந்தக் காலமா இருந்தா நடக்குமா... நானா இருக்கத் தொட்டு..."

வேதாவுக்கு மாமியாரின் வார்த்தைகள் எரிச்சலை உண்டு பண்ணியதோ இல்லையோ – சுந்தா அலுத்துப் போய் விட்டான். வீட்டில் யாருக்குமே தெரிவிக்காமல் வடக்கே ஒரு வேலைக்கு மனு எழுதிப் போட்டான். இந்தக் காலம் மாதிரி இல்லை. அவனுடைய நேர்மையும், உழைப்பும் – அவனது படிப்பை விடவும் உயர்வாகப் பட்டதாலோ என்னவோ... வேலையில் சேரச் சொல்லி கடிதம் வந்து விட்டது.

இதே அம்மா மண்டபத்தில் உட்கார்ந்து தான் சுந்தா, இந்தச் செய்தியையும் சொன்னான் :

"நாச்சா... நான் நாக்பூர் போறேன்."

"என்ன விஷயமா?"

"எனக்கு அங்கே வேலை கிடைச்சிடுத்து. இங்கே மாதிரி வசதியான வாழ்க்கை கிடைக்காது. பாஷை தெரியாத புது ஊர். கோதுமைச் சாப்பாடு. ஒண்டுக் குடித்தனம். ஆனாலும் பரவாயில்லை. மனசுக்கு நிம்மதி கிடைக்கும்னு தோணறது..."

"சுந்தா... என்னடா இது... அம்மாகிட்ட சொன்னியா..."

"இல்லே... வேதாவுக்கே தெரியாது. தெரிஞ்சா என்னைதான் கோவிச்சுப்பா. ஆயிரம்தான் இருந்தாலும் மாமியார்தான் தெய்வம் அவளுக்கு. ஆனா, என்னால அப்படி இருக்க முடியலேடா..."

"அம்மாவாலே இதைத் தாங்க முடியாது.."

"அதைப் பார்த்தா – எனக்குப் பைத்தியம் பிடிச்சிடும் போல இருக்கு. இதப் பாரு. உனக்கும் சொல்லி வைக்கிறேன். சீரங்கத்துலேயே தனியா ஒரு வீடு பார்த்துண்டு, அப்புறமாக் கல்யாணம் செஞ்சுக்கோ. தினமும் ஒரு நடை அம்மாவை வந்து பார்த்துட்டுப் போ. அதுதான் உத்தமம். இல்லையின்னா உன் பிழைப்பும் நாறிடும்..."

நாச்சா அப்படியே பிரமித்து உட்கார்ந்திருந்தான். இதுநாள் வரையில் தன் கல்யாணத்தைப் பற்றி நினைத்தே பார்க்கவில்லை அவன். எப்பொழுதாவது கோவில் கடைத் தெருவில் மலைக் கோட்டைப் பிள்ளையார் சந்நிதியில் – அழகாய், கண்ணுக்கு நிறைந்த பெண்களைப் பார்க்கும் போது மனசுக்குள் அலையடிக்கும் தான்...

ஆனாலும் இது பற்றி தீவிரமாய் சிந்தித்ததே இல்லை.

அம்மா இருக்கிற மட்டும் – அவளை திருப்தியுடன் வைத்துக் கொள்ள வேண்டுமானால் பிரும்மச்சரியம்தான் உசிதம் என்று கூடத் தோன்றியது அவனுக்கு.

ஒருவேளை – தான் இப்படிச் சொல்வதினால், அம்மா வெகுவாக பாதிக்கப் பட்டாலும்... மருமகள் வந்து, அம்மா கஷ்டப்படுவதை விட இது தேவலாம் என்றே நினைக்கிறான் அவன்.

சுந்தா – ஸ்ரீரங்கத்தை விட்டுக் கிளம்பிய போதே அம்மா ஆடிப் போய் விட்டாள். அவளால் அந்த அதிர்ச்சியைத் தாங்கவே முடியவில்லை.

இரவு பகல் பாராமல் ஓயாமல் அழுது கொண்டே கிடந்தாள்.

"அம்மா மனசை இத்தனை நோகடிச்சுண்டாவது நாம இப்ப கிளம்பணுமா... இப்ப என்ன... என்னைப் பெத்த தாயார் என்னைத் திட்டினா, நான் பொறுத்துக்க மாட்டேனா..."

இப்படி வேதா, தன் கணவனிடம் கூறி அழுததும்...

"உனக்குத் தெரியாது.. இப்ப அப்படித்தான் சொல்லுவே... அப்புறம், தினமும் சாயந்திரமாச்சுன்னா விளக்கேத்தி வச்சுட்டு நீ ஒரு பாட்டம் அழுவே. அம்மா, தனக்கு வாய்ச்ச மாட்டுப் பொண் சரியில்லே; பிள்ளை ஒரு

(தொடர்ச்சி 243-ம் பக்கம்)



## பள்ளி மாணவர்களுக்கு

ரெகார்ட் நோட்டுக் எழுதும் பொழுது தவறு ஏற்பட்டால் அதை அழிக்க சுலபமான வழி:

2–ஸ்பூன் ப்ளீச்சிங் பவுடரை 1 டம்ளர் தண்ணீரில் கரைத்து வைத்துக் கொள்ளவும் தவறு ஏற்படும் இடத்தில் விட்டு சிறிது பரவச்செய்தால் அந்த தப்பு இருந்த இடம் தெரியாமல், அப்பழுக்கில்லாமல் அழிந்து விடும்.

–எஸ். உமாதேவி


STEP IN FOR
Raymond's
DIGJAM
SUITINGS & SHIRTINGS
NEWLOOK TAILORS
WE ACCEPT CREDIT CARDS
Opp. : T. Nagar Bus Terminus
Madras - 17 Phone : 44 34 48
NO BRANCHES
We specialise in Bridegroom's dress to make the bride proud.

# தீபாவளி நேரத்தில் இவர்கள் என்ன செய்கிறார்கள்?



• சுந்தரி

தீபாவளி அன்று உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் கொடுக்கவென மாய்ந்து மாய்ந்து பட்சணங்கள் செய்த காலம் உண்டு. ஆனால் இன்றோ பிரபலமான கடைகளின் இனிப்பை வாங்கிக் கொடுத்து விடுகிறோம். அதே போல தீபாவளிக்கு எங்கே புடவை துணி? என்ற கேள்விக்கு எடுத்த கடையின் பெயரைச் சொல்லும்போதே பெருமை படக் கூடிய கடைகள் - தீபாவளி அன்று ரிலீஸ் ஆகும் படத்தை எப்படியாவது முண்டியடித்து பார்த்து விடும் எண்ணம் - இப்படி சில ஆசைகள் - பெருமைகள் நமக்கு. ஆனால் நாம் தேடி ஓடும் அவர்கள் தீபாவளி நாளில் எதை உடுக்கின்றனர், என்ன இனிப்புச் செய்கின்றனர்? எப்படி பொழுதுபோக்கு கின்றனர் என்பதை அறியும் ஆவலில் சிலரைச் சந்தித்தோம் -

தீபாவளி பட்சணங்களுக்குப் புகழ்பெற்ற பல ஸ்வீட் ஸ்டால் களில் ஒன்றான அர்ச்சனா ஸ்வீட்ஸின் உரிமையாளர் திரு. செல்வராஜ் -

"ஒவ்வெரு தீபாவளிக்கும் புதுப் புது வகையான இனிப்புகளை அறிமுகப்படுத்தும் நாங்கள் எங்கள் வீட்டைப் பொறுத்தவரை நம் வழக்கப்படி செய்யும் மைசூர் பாகு போன்ற இனிப்பு வகைகளும், மிக்சரும் தான் செய்வது வழக்கம். எத்தனை இனிப்புகள் கடையில் இருந்தாலும் வீட்டில் செய்த பலகார வகைகளைத்தானே நாம் ஆண்டவனுக்குப் படைக்க முடியும்?" என்கிறார். "அதே போல வீட்டில் சிறிய அளவில் செய்யும் போது கிடைக்கும் அதே சுவை நாங்கள் கடையில் செய்யும் போதும் கிடைத்து விடுகிறது ஆண்டவன் அருள்தான்" என்கிறார் தொடர்ந்து.



நாம் சினிமாவில் தேடி ஓடும் சினிமா நட்சத்திரங்களில் ஒருவரான திரு. சரத்குமார் அவர்களைச் சந்தித்த போது -

"தீபாவளி என்ற ஒரு எதிர்பார்ப்பு எனக்கும் ஒரு காலத்தில் - நான் மாணவப் பருவத்தில் இருந்த போது இருந்தது. அப்போது நான் எம்.ஜி.ஆரின் பரம விசிறி. தீபாவளி அன்று எப்படியும் ரிலீஸாகும் அவர் படத்தைப் பார்த்து விடுவேன். பட்டாசு வெடிப்பதில் பேரின்பம். அதுவும் 'அப்பா காசை கரியாக்குவதில் அப்படி என்ன ஒரு திருப்தி?' என்று சொல்லச் சொல்ல எத்தனை பட்டாசு வெடித்தாலும் லேசில் திருப்தி வராது. ஆனால் இன்று...?! தீபாவளி

ஒரு சாதாரண விடுமுறை நாள் அவ்வளவு தான்! பெரியதான எதிர்பார்ப்பு என எதுவும் கிடையாது. பட்டாக வெடிக்கும் குழந்தைகளை 'என்ஜாய்' என சொல்லி விட்டு, வேடிக்கை பார்ப்பது பிடிக்கும். 'காசு-கரி' என்று சொல்வதெல்லாம் கிடை யாது.

தீபாவளி அன்று சில சமயம் 'அவுட்டோரில்' இருக்க வேண்டிய சந்தர்ப்பமாகக் கூட அமைந்து விடும். அப்படி ஒரு 'ஷெட்யூல்' அமைந்து விட்டால் தீபாவளி நினைப்பெல்லாம் எழவே எழாது. நல்லபடியாக நடித்து வேலையை முடிக்க வேண்டுமே என்ற எண்ணம் மட்டும்தான் மேலோங்கி நிற்கும்.

சரி, தீபாவளியன்று விடுமுறையும் ஓய்வும் கிடைத்தால்...? என் தாய், சகோதரிகள் மற்றும் மிகவும் நெருங்கிய உறவினர்களையும் நண்பர்களையும் சென்று பார்ப்பேன். இதுவும் போக நேரமிருந்தால் தொலைகாட்சி முன்பு அமர்ந்து அந்த நிகழ்ச்சிகளைப் பார்த்து ரசிப்பேன். குடும்பத்தினருடன் அமைதியாக மகிழ்ச்சியாகப் பொழுதுபோக்குவேன்" என்றார்.

தீபாவளி என்றதும் நம் நினைவில் வரும் ஜவுளிக் கடைகளுள் முக்கியமான ஒரு பெயர் 'ராசி'. மக்கள் கூட்டம் அலைமோதும் இந்த நிறுவனத்தைச் சார்ந்தவர்கள் பண்டிகைக்காக தங்கள் துணிமணிகளை வேறு எங்காவது தேர்வு செய்து வாங்குவது உண்டா? என்ற நம் சந்தேகத்தை 'ராசி'யின் உரிமையாளர்களுள் ஒருவரான திரு. ராஜாராமன் அவர்களின் துணையான திருமதி. சுந்தரி ராஜராமன் அவர்களைக் கேட்ட போது –

"பட்டுப் புடவைகளில் காஞ்சிப் பட்டு முதல் பலவித பட்டு ரகங்கள் உண்டு. தஸார் சில்க், பிரிண்டெட் சில்க், மைசூர், பால் சலோன் (இது புதிய வகை) – இப்படி பல விதங்கள். இருதலைப்பட்சி (காஞ்சிப் பட்டில் தயாராவது) என்னும் டிசைன் மிகவும் விலை உயர்ந்தது. ரூ. 36 ஆயிரம் இதன் விலை. இது ரொம்பவும் ஃபேமஸ். ஆண்டுதோறும் தீபாவளிக்கு ஒரு மாதம் முன்புதான் அந்த ஆண்டுக்கான புதிய டிசைன் அறிமுகப்படுத்துகிறோம்.

இப்படி பலவித ரகங்களில் துணிகள் கிடைக்கும் 'ராசி'யைத் தேடிவரும் எங்கள் வாடிக்கையாளர்களைப் போலவே நாங்களும் எங்கள் கடையிலேயேதான் துணிகளைத் தேர்வு செய்வோம். வாடிக்கையாளர்கள் நிறைவுடன் தேர்வு செய்து வாங்கிச் சென்றது போக மீதியிருப்பதில் மனதுக்குப் பிடித்த நல்ல டிசைனாகத் தேர்வு செய்து எடுத்துக் கொள்வோம் – அதுவும் தீபாவளிக்கு முன் தினம் தான். சில சமயம் தீபாவளிக்கு வந்த புதிய டிசைன் விற்றுத் தீர்ந்து விடுவதும் உண்டு. அந்த டிசைன் ரொம்பவும் பிடித்திருந்தால் – பின்பு அதே போல வேறு தறி போட்டு எடுத்துக் கொள்வோம்."

**– வைதேகி தேசிகன்**



19.9.1995 முதல் எங்கும் கிடைக்கும்!
GROUP
தங்கமான எண்ணெய்
தரமான எண்ணெய்
உள்ளத்திற்கு
ஊக்கம் சேர்க்க
உட்கொள்ளுங்கள்!
பாம்பன்
• சூப்பர் ரீஃபைண்ட் சூரியகாந்தி எண்ணெய்
• சூப்பர் ரீஃபைண்ட் கடலை எண்ணெய்
15 கிலோ, 5 லிட்டர், 2 லிட்டர், 1 லிட்டர் மற்றும் 1/2 லிட்டர் அளவுகளில் எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்.
PAMBAN
A unit of Balu Jewellers group
Manufactured by:
POM
PAMBAN OIL MILLS PRIVATE LIMITED
72, Usman Road, T. Nagar, Madras - 600 017. Ph: 4343377, 4343030

# சில திருமணங்கள் 'ரூப் டாப்'பில் நிச்சயிக்கப்படுகின்றன!

தெருவுக்குத் தெரு டாக்டர்கள் பெருகி விட்டது போல், வீதிக்கு வீதி ஹோட்டல்கள் - தங்கும் விடுதிகள் வந்து விட்ட இந்தக் காலத்தில் ஒரு ஹோட்டல் - மக்கள் மனதில், நினைக்க... நிலைக்க வைப்பது என்பது சாதாரண விஷயம் அல்ல. கடும் போட்டிகளுக்கு இடையே வித்தியாசமான வசதிகளை செய்தால்தான் புகழ் கிடைக்கும் என்ற நிலை உள்ளது. அந்த வகையில் மதுரையில் 'ஹோட்டல் சுப்ரீம்' சமீப காலத்தில் புகழ்பெற்று வருகிறது. அதன் தனித்தன்மைக்காக ஒரு குடும்பமே பாடுபட்டு வருகிறது என்பது அனைவரும் அறிய வேண்டிய ஒன்று.

மதுரை பெரியார் பஸ் நிலையம் - ரயில்வே ஸ்டேஷன் அருகே மேலப் பெருமாள் மேஸ்திரி வீதியில் எழில் கொஞ்சும் ஏழு மாடி கட்டிடமாக உயர்ந்துள்ள ஹோட்டல் சுப்ரீம் வரவேற்பறை முழுக்க கலைநயமிக்க கண்கவரும் சிற்ப வேலைப்பாடுகளும், அலங்கார விளக்குகளுமாக எழில் கொஞ்சுகிறது.



• ரூஃப்கார்டன்



"இதற்காக நாங்கள் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல" என்கிறார் இதன் உரிமையாளர் நரேந்திரலாலன்.

நரேந்திரன் அருகில் அமர்ந்து இருந்த அவர் தந்தை பெரிய குடும்பத்தின் மூத்தவர், ஹோட்டல் ஸ்தாபகர் ஆர். எம். லாலன் அனுபவ புன்னகை பூக்கிறார்.

"நாங்கள் குஜராத் மாநிலத்தைச் சேர்ந்தவர்கள். பிழைப்பு நடத்த இந்த மதுரைக்குப் பல வருடங்களுக்கு முன்பே வந்து விட்டோம். முதலில் நாங்கள் ஜவுளித் தொழில்தான் செய்தோம். எட்டு பெண்கள், மூன்று பிள்ளைகள் கொண்ட பெரிய குடும்பத்தைக் காப்பாற்ற நிலை இல்லாத ஜவுளித் தொழில் கை கொடுக்கவில்லை. இங்கெல்லாம் விவசாயம் ஆறு மாதம், நெசவு ஆறு மாதம் என இருக்கும். செலவும், கடனும் அதிகம். எனவேதான் 'காஷ்'ஷாக வருமானம் வரும் ஹோட்டல்

கட்ட முடிவு செய்தோம். நாங்களும் கடன்களை வாங்கி மூன்று நட்சத்திர அந்தஸ்து உள்ள இந்த ஹோட்டலை கட்டத் துவங்கினோம். முன் அனுபவம் இல்லை. ஆழம் தெரியாமல் காலை விடுகிறீர்கள்.. மதுரையில் இவ்வளவு பெரிய ஹோட்டல் எடுபடாது.. என்று பலர் எங்களை பயமுறுத்தினார்கள்.

அந்தச் சமயத்தில் எல்லாம் எங்களுக்கு நேர்ந்த அவமானங்கள் மறக்க முடியாதது. இதே மதுரையின் மற்றொரு பிரபல ஓட்டல் அதிபர் நான் பேசி விட்டு வந்த பிறகு – நான் போய் விட்டேன் என்று நினைத்துக் கொண்டு, ''இவனெல்லாம் என்னத்தை ஹோட்டல் கட்டி என்னத்தை பண்ணப் போறான்'' என்றார் நரேந்திரன்.



* அயல்நாட்டினர் வியக்கும் பெரிய்ய....ய தோசை!





ஆர்.எம். லாலன்

அவரே இந்த ஹோட்டலின் 'இண்டீரியர் டெக்ரேஷன்' சிறப்பாக இருக்கிறது எனப் பார்க்க வந்தார். அவருக்கு முழுக்க சுற்றிக் காண்பித்து விட்டுச் சொன்னேன்,

“ஸார் நீங்க அன்னைக்கு அப்படிச் சொல்லலைன்னா நான் இவ்வளவு தூரம் வெறியாக செய்திருப்பேனான்னு சந்தேகம். எனவே நீங்களும் எனக்கு ஒரு குரு'' என்றேன்.

''அதற்கும் முன்பு நான் சிறு வயதில் வேலை பார்த்த கடைக்காரர் என் சம்பளமான நூறு ரூபாயை ஒழுங்காகத் தர மாட்டார். அவரும் இப்போது ஹோட்டலுக்கு வருகிறார். “நீங்களும் எனக்குக் குருதான். அன்றைக்கு நீங்கள் சம்பளத்தை ஒழுங்காகக் கொடுத்திருந்தால் நான் சிறந்த குமாஸ்தாவாக இருந்திருப்பேன். அப்படித் தராததால்தான், அதனால் முன்னுக்கு வர வேண்டும் என்ற வேகத்தில் இவ்வளவு பெரிய ஹோட்டல் முதலாளியாக இருக்கிறேன் எனச் சிரித்துக் கொண்டே சொல்வேன்'' என்கிறார் நரேந்திரன். வாழ்க்கையைப் பற்றிய இப்படி ஒரு கோணம் நம் எல்லோருக்குமே இருந்து விட்டால் எவ்வளவு சாதிக்கலாம் பாருங்கள்.

நமக்கு வரும் அவமானங்களையும், கஷ்டங்களையுமே வீரமாக, ஏணிப்படிகளாக மாற்றி விட்டால் நம்மை வெல்ல யாரால் முடியும்?

“இவ்வளவு பணம் செலவு செய்து, பார்க்க மிக அழகான ரம்மியமான முதல் ஹோட்டல் மதுரையில் இதுதான். அதனால்தான் எல்லோருமே ஹோட்டல் சுப்ரீமை ஆச்சர்யமாக பார்த்துக் கொண்டு இருந்தார்கள். நானும் என் குடும்பத்தவரும் இந்தியாவின் முக்கியமான ஹோட்டல்களுக்கு எல்லாம் சென்று சிறந்தவற்றைத் தெரிந்து கொண்டு வந்து இங்கே அவற்றை அமைத்தோம்.

என் பையன் அனீஸை மிகப் பிரபலமான ஹோட்டலில் சர்வர் பாயாக ஆரம்பித்து எல்லா நிலைகளிலும் தொழில் கற்றுக் கொள்ளச் செய்தேன்'' என்கிறார்.

இப்படியாக 1988-ல் ஹோட்டல் சுப்ரீமை ஆரம்பித்தார்களாம்.

### ரூப் டாப்பில் காதல் மலர்ந்து...

''எங்க ஹோட்டலுக்குப் பரபரப்பான புகழ், பெயர் வரக் காரணமே ஹோட்டல்

# உங்கள் உடல் வளைவின் நளினங்களை நன்கு உணர்ந்துள்ளது சிநேகா.



SNEHA

உள்ளாடைகள்



100% பருத்தி

- வெஸ்ட்கள் • ப்ரீப்கள்
- பேண்டீஸ் • பனியன்கள் • ஜட்டிகள்

பிரத்தியேக ஸ்நேஹா ஷோ ரூம்
F 31, ஸ்பென்சர் பிளாஸா, மவுண்ட் ரோடு, சென்னை 600 002.

தயாரிப்பாளர்கள் : **ஸ்நேஹா ஃபேப்ஸ்**, திருப்பூர்.

விற்பனைக்கு விடுப்போர் : **M/s. ஆனந்த் அசோசியேட்ஸ்**,
1212, 2வது குறுக்குத் தெரு, நாகப்பா பிளாக், பெங்களூர் - 560 021. போன் : 3325258.

A SEAL OF SNEHA QUALITY

APARNA/SF/033/95

மொட்டை மாடியில் நாங்க அமைத்து இருக்கற, மாலை ஐந்து மணி முதல் நள்ளிரவு பன்னிரெண்டு மணி வரை இயங்குகிற 'சூர்யா ரூப் டாப் உணவகம்'தான். எல்லா ஹோட்டல்களிலும் மொட்டை மாடியில் வேண்டாத உடைந்த சேர்.. டேபிள்களை போட்டு வைப்பாங்க.. ஆனால் வேண்டாத குப்பை என்பது எங்கும் இருக்கக் கூடாது; ஹோட்டலில் எங்கு பார்த்தாலும் சுத்தம் என்பதுதான் காணப்பட வேண்டும் என்பதற்காகவே நாங்க சிந்தனை செய்து மொட்டை மாடியில் ரூப் டாப்பை உருவாக்கினோம். மதுரையில் முதன்முதலாக நாங்கள் உருவாக்கிய ரூப்டாப்பில், தென்றல் காற்று மேலே தவழ... வண்ண விளக்குகள் ஜொலிக்க... மதுரை மீனாட்சி அம்மன் கோவிலின் கோபுரங் களை 'கோபுர தரிசனம் கோடிப் புண்ணியம்'. என்று நினைத்தபடி கண்டுகளித்தபடி எங்களின் சுவையான டிபன்களை சுவைக்கலாம்.



• நரேந்திரன்





• அனீஸ்

நாங்கள் ஜைன மதத்தைச் சார்ந்தவர்கள். அசைவத்தை விரும்ப மாட்டோம். அதனால் சைவ உணவுகளை மட்டுமே இங்கே தயாரித்து வழங்குகிறோம். இப்படிப்பட்ட ஹோட்டல்களில் அசைவம் இல்லாவிட்டால் நஷ்டமாகும் என்ற வார்த்தையை பொய்யாக்கி விட்டோம். இங்கே தங்க வரும் அயல்நாட்டுப் பயணிகளையும் சைவ பிரியர்களாக மாற்றி விட்டோம். அவர்கள் நம் தோசை, இட்லியை விரும்பிச் சாப்பிடுகிறார்கள். ரூப் டாப்பில் சந்தித்து காதல் மலர்ந்து எங்கள் திருமண அரங்கில் கல்யாணம் செய்து கொண்டு எங்கள் 'ஹனிமூன் சூட்'டில் தேனிலவு கொண்டாடிய தம்பதிகளும் உண்டு!

''அனைத்துத் துறைகளிலும் துணிச்சலுடன் பெண்கள் ஈடுபடும் இந்தக் காலத்தில் பெண்கள் பல்வேறு ஊர்களுக்குத் தனியாக அலுவல் காரணமாக பயணம் செய்து ஹோட்டல்களில் தங்க வேண்டி இருக்கிறது. அப்படி இங்கே அவர்கள் பயமில்லாமல் தங்க தனி அக்கறை எடுத்துக் கொள்கிறோம்.

மற்ற ஹோட்டல்களில் பார்க்க முடியாத 'டிரஸிங் ரூம்' எங்கள் ஹோட்டலில் உள்ளது. வாடிக்கையாளர் வரும் நேரம் ரூம் காலியாக இல்லாவிட்டால் இந்த டிரெஸ்ஸிங் ரூமில் தங்கள் உடைமைகளை பாதுகாப்பாக வைத்து விட்டு, குளித்து வேறு உடை மாற்றிக் கொண்டு வெளியே சென்று வேலைகளை முடித்து விட்டு திரும்பும் போது அவர்கள் தங்க ரூம் ஏற்பாடு செய்து விடுவோம்.

ஹோட்டல் சுப்ரீமில் 'சீஃப்செஃப்'பாக ரவி சேர்ந்த பிறகு பல புதுமைகளைச் செய்திருக்கிறார். (அவருடைய சுவையான வெங்காய பக்கோடா மாவே இல்லாமல் 'மொறுமொறு'வென இன்னும் அந்தச் சுவை வாயிலேயே இருக்கிறது!) மூன்று வருடங்களாக அயல்நாட்டவரையும் அசரவைக்கும் மிக நீளமான ஐம்பது வகை தோசைகளை அறிமுகம் செய்யும் 'தோசை திருவிழா' நடத்தி வருகிறார்கள். இது போல் வெவ்வேறு புதுமை நிகழ்ச்சிகளையும் நடத்தத் திட்டமிட்டு இருக்கிறார்களாம்.

"எங்கள் ஹோட்டலில் பார்சல்கள் அலுமினிய ஹாட்பேக்கில் வைத்து உணவு வகைகள் ஆறிப் போகாமல் தருகிறோம்" என்கிறார் இவர்.

இப்படிப் பார்த்துப் பார்த்து இழைத்து இழைத்து இவர்கள் கட்டியுள்ள ஹோட்டல் சுப்ரீம் (ஹோட்டல் சுப்ரீம், 110 மேலபெருமாள் மேஸ்திரி வீதி, மதுரை - 625 001. தமிழ்நாடு. தொலைபேசி : 36331, 33448) அதன் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் இவர்களின் அக்கறையைக் காண்பிக்கிறது.

வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்களை அண்ணாந்து பார்த்துப் பெருமூச்சு விடுகிறோம். ஆனால் அவர்கள் வெற்றி பெற எத்தனை சிரமப்பட்டார்கள் என்பதுதான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய வாழ்க்கைப் பாடம்!

தொகுப்பு, படங்கள் : **விஜயா கண்ணன்.**



# பெண்கள் 'ஹேர்கட்'

முன்பெல்லாம் பெண்கள் 'ஹேர்-கட்டிங்' செய்து கொள்வதையே ஆசாரக் குறைச்சலாக நினைத்தது போக இப்பொழுது எங்கு பார்த்தாலும் ஷார்ட்கட், பாய் கட் என்றுதான் உள்ளது. ஏனென்றால், பெரும்பாலான பெண்மணிகள் வேலைக்குப் போகிறார்கள். இதில் இவர்களால் தலை முடியைப் பராமரித்துக் கொள்ள நேரமின்மை பெரும் காரணமாகிறது. இதனால் ஹேர் கட்டிங் செய்து கொள்வதை மிகவும் விரும்புகிறார்கள்.

சிலருக்குத் தலைமுடி நுனியில் பிளவுபட்டு காணப்படும். இதை நீக்குவதற்கு நுனிமுடியை ரெகுலராக 'கட்' செய்து கொண்டாலே போதுமானது. மீண்டும் வளரும் முடி, நீங்கள் வெட்டிக் கொண்ட வடிவத்திலேயே வளரும். மேலும் மிகவும் அலைச்சல், இன்ஃபெக்ஷன் இவை காரணமாக பெரும்பாலோனோர் தலையில் பொடுகு உள்ளது. இதற்குக் கூட நேரமின்மைதான் காரணமாகிறது! இரும்புச் சத்து உடம்பில் குறைவாக இருந்தாலும் பொடுகு அதிகமாகும்.

சிறு குழந்தைகளைப் பொறுத்த வரை நீண்ட முடி வைத்துக் கொள்வதென்பது அவசியமில்லை. குழந்தைகள் 10, 12 வயதாகும் வரை 'கட்' செய்து கொண்டே வரலாம். இதனால் குழந்தைகள் தலையைப் பேன், ஈறு அண்ட விடாமல் பாதுகாப்பது எளிதாகிறது. தலைக்குக் குழந்தைகளைக் குளிக்க வைத்தாலும், காய வைப்பதோ, பராமரிப்பதோ சுலபம். மேலும் சிறு வயதிலேயே குழந்தைகள் 'சைனஸ்' வியாதியால் அவதிப்படுவதற்கும் முடி வெட்டி விடுவது சிறந்த நிவாரணமாகிறது. தலையில் நீர்கோர்த்துக் கொள்ள விடாமலிருப்பது சைனஸ் வியாதிக்கு நல்லதொரு நிவாரணமாகும்.

நீண்ட பராமரிப்பில்லாத கூந்தலை விட குறைவாக இருந்தாலும், நல்ல சத்தான ஆரோக்கியமான, கூந்தல் இருந்தால் நல்லது தானே!

? எனக்கு முகத்தில் மூக்கின் மீது மட்டும் சிறு சிறு குறுக்கள் வருகிறது. அதைக் கிள்ளி எடுத்தால் வெள்ளையாக முளை போன்று வெளிவருகிறது. இதனால் மூக்கின் மீது மட்டும் கருப்பாகி விடுகிறது. நாய் முள் என்று சொல்வார்களே அதைவிட சிறியதாக இருக்கிறது. கிள்ளி எடுத்து விட்ட பிறகு மீண்டும், மீண்டும் வருகிறது. இது நிரந்தரமாக போக என்ன செய்ய வேண்டும்?

கே. சாந்தி, வாணியம்பாடி.

! மூக்கின் மேல் உள்ள சிறு சிறு குறுக்கள் White heads ஆகும். நீங்கள் இதைக் கிள்ளி

எடுக்கக் கூடாது. இதற்கு நீங்கள் நல்ல பார்லர் சென்று Black heads, White heads remove செய்து facial செய்து கொள்ள வேண்டும். இதை நீக்க சில முறைகளின்படிதான் செய்ய வேண்டும். இதை நீங்களாகவே கையில் கிள்ளி விடுவது பின்னால் முகத்தில் பள்ளத்தை ஏற்படுத்தும்.

? சமீப காலமாக பெண்கள் உதடுகளுக்கு சாயம் பூசும் பழக்கம் பரவலாக இருந்து வருகிறது. ஆபீஸுக்குப் போகும் பெண்கள் மதியச் சாப்பாட்டின் போதும் மற்ற பெண்கள் பார்ட்டி போன்ற சமயங்களிலும், அந்தச் சாயப் பூச்சுடனே உணவு உட்கொள்கிறார்கள். இது எந்தவிதத்தில் உடல் ஆரோக்கியத்தை முக்கியமாக உணவு செரிமானத்தைப் பாதிக்கும்?

திருமதி செண்பகவல்லி,
சென்னை - 28.

# செய்து கொள்ளலாமா?

## பதில்கள் : மைதிலிபாபு

! உதட்டுச் சாயத்துடன் உணவு உட்கொள்வதென்பது மிகவும் கெடுதலானதாகும். உணவுப் பொருட்களை சாயப் பூச்சுடன் விழுங்குவதால் சிலருக்குக் கெமிக்கல் உள்ளே சென்று வாந்தி, மயக்கத்தைக் கூட ஏற்படுத்தும். சாப்பிடும் போது முதலில் உதட்டுச் சாயத்தை எடுத்து நன்கு துடைத்து விட்டு பின் உண்ணலாம். பிறகு மீண்டும் உதட்டுச் சாயம் போட்டுக் கொள்ளலாம்.

? சில நாட்களாக என் கணவரிடம் வியர்வை நாற்றம் ஒருவித துர்வாசனையுடன் வீசுகிறது. மின்விசிறி இயங்கும் போது அவர் கீழ் இருந்தால் அந்த வாடை வீடு முழுவதும் பரவி சங்கடத்தை உண்டு பண்ணுகிறது.

இப்பொழுது என்னிடமும் அந்த வாடை வீசுவதாக உணருகிறேன். தயவுசெய்து இப் பிரச்னை தீர வழி கூறுங்களேன்.

பெயர் வெளியிட விரும்பாத வாசகி.

! உங்கள் பிரச்னைக்கு முதலில் ஒரு நல்ல மருத்துவரை அணுகுங்கள். ஏதாவது உடம்பிலுள்ள கோளாறினால் இம்மாதிரி வியர்வை நாற்றம் வரலாம். இதற்கு நீங்களிருவரும் நல்ல மருத்துவ குணம் உள்ள சோப்பையோ (அ) நாட்டு மருந்து கடையில் கிடைக்கும் வாசனைப் பவுடரையோ உபயோகிக்கலாம். இந்த வாசனைப் பவுடருடன் நல்ல தூய சந்தனப் பவுடரைக் கலந்து உபயோகிப்பது ஓரளவு உங்கள் பிரச்னைக்கு பலன் தரும்.

? என் முகத்தில் இடது கன்னப் பகுதியில் ஆறு மாதங்களுக்கு முன்பு Herpis வந்தது. ஆனால் புண் ஆறி இப்பொழுது அந்த இடங்களில் தழும்புகளாக மாறிவிட்டது. (கறுப்புக் கலரில் patches.) நான் அலோபதி, ஆயுர்வேதி மருந்துகள் எல்லாம் எடுத்தும் பலன் கொஞ்சம்தான். எலுமிச்சை + கடலை மாவு + பப்பயறு மாவு + மஞ்சள் கலவையைப் போட்டு வருகிறேன். பரிபூரண மாக இந்த பேட்சஸ் போக நான் என்ன செய்ய வேண்டும்?

அம்ரிதா ராஜன், பெங்களூர்.

! உங்கள் முகத்திலுள்ள ப்ரச்னைக்கு நீங்கள் முதலில் நல்ல தோல் நிபுணரைப் பார்க்க வேண்டும். பிறகு ஃபேஷியல் குறிப்பிட்ட இடைவெளியில் தொடர்ந்து 4, 5 முறை செய்ய வேண்டும். pigmentation பிரச்னைக்கு Galvanic

Machine உபயோகித்துப் பண்ணும் ஃபேஷியல் மிகவும் சிறந்தது. இப்பொழுது இதற்காகவே Ultrasonic facial machine புதிதாக அறிமுகம் ஆகியுள்ளது.

**? பம்பாயிலிருந்து வந்த எனது தோழி, தலைமுடிக்கு வீட்டிலேயே நாம் 'ஹென்னா கலரிங்' போடும் போது பாக்கெட்டிலிருந்து பாதி எடுத்துக் கொண்டு அதனுடன் கொஞ்சம் மருதாணிப் பவுடர் மற்றும் கொஞ்சம் 'விக்விட் பாரபின்' ஊற்றி நன்கு கலந்து போட்டுக் கொள்ள நாம் போடும் ஹென்னா முடியில் ஒரே மாதிரி நன்கு பரவி முடி சில்க் மாதிரி பளபளவென இயற்கையாக இருக்கும் என்று கூறுகிறாள். ஹென்னா பவுடர் சிக்கனமாக உபயோகிக்கலாம் என்றும் கூறுகிறாள். அம்மாதிரி செய்யலாமா? அல்லது ஹென்னா பவுடர் தனியாகத்தான் உபயோகிக்க வேண்டுமா? அல்லது வேறு என்ன கலக்கலாம்?**

**திருமதி சுப்பிரமணியம், கோவை.**

! இயற்கையாகவே முடி சில்க் மாதிரி இருக்க நீங்கள் ஹென்னா உபயோகிக்கலாம். இதனுடன் முதல் நாள் இரவே புளி, வெந்தயம், டீத்தூள் போட்டுக் காய்ச்சி வடிகட்டிய நீரில் ஹென்னா பவுடரை கலந்து சிறிது எலுமிச்சம் பழ சாறையும், சிறிது தயிர், முட்டை (வெள்ளை) கலந்து வைத்து மறுநாள் காலை முடியில் சீராகத் தடவி ஊறவைத்து பின் இரண்டு மணி நேரம் கழித்துக் குளிப்பது மிகவும் நல்லது. எந்தவிதமான கெமிக்கலும் கலக்காமலிருப்பது பொதுவாகவே முடிக்கு நல்லது.

**? எனக்கு 23 வயதாகிறது. எனது உள்ளங்கைகள் ஆணின் கையைப் போன்று 'சொரசொர'வென்று உள்ளது. அவை மிருதுவாக இருக்க என்ன செய்ய வேண்டும்?**

**மீனாட்சி, சென்னை – 35.**

! உள்ளங்கைகள் சொரசொரப்பாக இருக்கக் காரணம் சரியான பராமரிப் பின்மையே ஆகும். இதற்கு நீங்கள் இரவு வேலை முடிந்ததும் வெதுவெதுப்பான நீரில் கைகளை மூழ்கவைத்து 5 நிமிடம் கழித்து கைகளை நன்கு துடைத்து சிறிது ஆலிவ் ஆயில் போட்டு நன்கு மசாஜ் செய்யலாம். இவ்வாறு தொடர்ச்சியாக செய்து வந்தால் கைகளின் சொரசொரப்பு மறைய வாய்ப்புண்டு.

**? எனக்கு முகம், கை, கால்களில் முடி அதிகமாக இருக்கிறது. இதனைப் போக்க சரியான முறை ஒன்றைக் கூறவும். எங்கள் ஊரில் பார்லர் வசதி இல்லை. எனவே இதற்கு வீட்டிலேயே இருந்து சிகிச்சை செய்து கொள்ள முடியுமா? அல்லது கிரீம் ஏதேனும் உபயோகித்துக் கொள்ளலாமா?**

**பிரேமலதா, நல்லம்பள்ளி.**

! கை, கால்களில் முடி அதிகமாக இருப்பின் 'வேக்ஸிங்' செய்வதே நல்லது. ஆனால், வீட்டிலேயே இருந்து 'வேக்ஸிங்' செய்வது நல்லதல்ல. ஏனென்றால், hair direction பார்த்துதான் 'வேக்ஸ்' செய்ய வேண்டும். சரியான முறையில் வேக்ஸ் செய்யாவிடில் கை கால்களின் மேல் தோல் சேதமடைய வாய்ப்புண்டு.

**? உங்கள் அறிவுரையின்படி மூலிகைப் பவுடர்தான் போட்டுக் குளித்து வருகிறேன். சோப்பு மாதிரி நுரை வருவதற்கு ஏதாவது மூலிகை இருந்தால் சொல்லுங்களேன். இரசாயனப் பொருளை தவிர்த்து உள்ளதா?**

**ரா. லதா, திருவாரூர்.**

! நல்ல தரமான மூலிகைப் பவுடர் போட்டுக் குளிக்கும் போது நுரை வராவிடில் பரவாயில்லை. இருந்தாலும் நீங்கள் நாட்டு மருந்துக் கடையில் கிடைக்கும் பூந்திக் கொட்டையை மூலிகைப் பவுடருடன் சிறிதளவு கலக்கலாம்.



திருக்கோயில்களில் தரிசனம் செய்யச் செல்லும் போது, அதிக அளவில் கூட்டம் நெரிசலாக இருக்கும். அவ்வேளைகளில் நாம் உடுத்தும் ஆடைகள் பருத்தியிலானவைகளாக இருக்குமாறு பார்த்துக் கொள்ளுங்கள். பாலியஸ்டர், பட்டு இவைகளினால் வியர்வை வெளியேறாமல் மயக்கம் வரும் நிலையும் நேரிடுகிறது.

ஏ.சிந்துபாரதி

பரிசு பெற்ற கட்டுரை

# குளிர்காலத்திற்கு ஏற்ற அழகுக் குறிப்பு

## பித்த வெடிப்பு - போயே போச்சு!

என் தந்தைக்கு அடிக்கடி ஊர் மாற்றும் அரசுப் பணி. ஒவ்வொரு மாவட்டமாக இருந்து விட்டு, என் 15ஆவது வயதில் சொந்த மாவட்டமான நெல்லை மாவட்டத்துக்கு வந்தோம். ஒரு பெண்ணுக்கு அழகுணர்ச்சி ஏற்படும் வயது. ஏன், எதற்கு, எப்படி என்று ஆவல் கொள்ளும் வயது. பள்ளியில், அம்மனுக்கு உகந்த ஆடிச் செவ்வாய்க் கிழமைகளில் தோழியர், காலில் (மருதாணிக் கலரில்) நலுங்கிட்டு வருவதும், அது மாலை வரை (நீர் பட்டாலும்) அழியாமல் இருப்பதையும் பார்த்து ஆர்வம் பொங்கக் கேட்டதில் கிடைத்த பதில், "எங்கள் வீட்டில் அதிகாலையில் அம்மனுக்குப் பூஜை செய்து, கன்னிப் பெண்களுக்கு நலுங்கிடுவர்" என்பது மட்டுமே. அதில் சுண்ணாம்பும், மஞ்சளும் கலந்திருப்பது தெரிந்து நானும் இட்டுக் கொண்ட போது, இலேசாகத் தண்ணீர் பட்டும், பாவாடை நுனி பட்டும் அழிந்து போனது. முயற்சியை விட்டுவிட்டேன்.

கல்லூரி செல்லும் நாட்களில், பாதங்களில் பித்த வெடிப்புத் தோன்றி அழகையே கெடுத்தது மட்டுமின்றி அதில் மண் துகள்கள் புகுந்து கொண்ட வேதனை வேறு. அப்பொழுதுதான், எங்கள் வீட்டில் வேலைக்காகச் சேர்ந்த பெண்மணி, முன்பு நான் அறியத் துடித்த ரகசியத்தைச் சொன்னாள். சிறிது சுண்ணாம்பு, சிறிது விளக்கெண்ணெய், ஒரு சிட்டிகை மஞ்சள் தூள் இவற்றைக் குழைத்து பற்றுப் போட்டால் பித்த வெடிப்பு மாறி, குதிகால் வழவழவென்று ஆகும் - இதுவே அப்பெண் கூறிய யோசனை.

அந்தக் கலவையைக் கால்களில் இட்டுக் கொண்டதுமே தெரிந்தது என் பள்ளித் தோழிகளின் நலுங்கின் ரகசியம். அதனைத் தொடர்ந்து சில நாட்கள் செய்து வர - பெற்றேன் 'க்ரேக்' விளம்பரப் பெண்ணின் பாதம். நானும் அந்த அழகுக் குறிப்பினை, வைத்தியத்தை பலருக்கும் கூறி, இந்து மதத்தில், கலை நயம், ஆரோக்கியம், தெய்வீகம் அனைத்தும் ஒருங்கே இருப்பதையும், அதை பக்தியுடன் கடைப் பிடிக்கும் இந்த மண்ணின் சிறப்பையும் எண்ணி வியக்கிறேன்.

*சாந்தி காசி விஸ்வநாதன்,*
*நெல்லை - 7.*

## பிரசுரத்திற்கு....

### மஞ்சள் குங்குமம்

மஞ்சளும், குங்குமமும் ஒரு மங்கலப் பொருள்கள் என்று மட்டுமே எல்லோரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவை நம்மை அழகூட்டும் பொருட்களாகவும், நம் நோயைக் குணப்படுத்தும் பொருட்களாகவும் பயன்படுகின்றன. எனக்கு 'சைனஸ்' என்ற நீர்க்கோவை நோய் உள்ளது. சாதாரணமாக கோடைகாலத்திலேயே நான் தலைக்குக் குளித்தால் தலை சீக்கிரத்தில் காயாது. குளிர்காலம் என்றால் கேட்கவே வேண்டாம். சுத்தமாக தலை காயவே காயாது. ஃபேன் போட்டுக் காய வைக்கலாம் என்றால் ஏற்கெனவே குளிரால் நடுங்கும் உடம்பு டைப் அடிக்க ஆரம்பித்து விடுகிறது. ஹேர் டிரையர் வாங்கி வைத்துக் கொள்வதற்கோ வசதி இடம் தரவில்லை.

தலை ஈரமாக இருப்பதால் நீர்த் தலைவலி ஏற்பட்டு மிகவும் அவதிப்படுவேன். டாக்டரிடம் காண்பித்தும் பலன் இல்லை. எனக்குத் தெரிந்த ஒருவர் மரப்பாச்சி பொம்மை, மஞ்சள், குங்குமம், சாம்பிராணி இவைகளை இழைத்துக் கலந்து நெற்றியில் பற்றுப் போட்டால் நீர்த்தலைவலி குணமாகும் என்று கூறினார். அதன்படி செய்ததில் எனக்குத் தலைவலி குணமானதுடன், என் முகமும் பழைய நிலைக்கு வந்தது. எப்போதும் அழுது கொண்டு கவலையோடு இருந்த என் முகத்தில் புன்சிரிப்பும் வந்ததால் மேலும் அழகானேன்.

*ஆர். சுசீலா,*
*சென்னை - 39.*

## சருமம் பளபளப்பாகும்!

வேப்பிலை கொத்து ஒரு கைப்பிடி அளவு, யூக்கலிப்டஸ் இலை ஒரு கைப்பிடி அளவு இவற்றுடன் மஞ்சள் தூள் 1 டீஸ்பூன் சேர்த்துக் கொதிக்க வைத்துக் குளிர்காலங்களில் காலை மாலை இரு வேளைகளிலும் ஆவி பிடித்து வந்தால் முகம் பொலிவுடன் காணப்படும். தலைவலி, ஜலதோஷம், தலை பாரம் முதலியவைகளும் நீங்கும். இந்த நீரை

| இந்த மாதம் பரிசுக் கட்டுரைக்கு | அடுத்த மாதம் போட்டிக் கட்டுரை.... |
| --- | --- |
| **மீராவின்** | பொருள் : |
| அன்பளிப்பு ரூ. 1000 மதிப்புள்ள குக்கர் | **ஆண்களுக்கான அழகுக் குறிப்பு!** |
| | **கடைசி தேதி : 15.10.95** |

கைகால்கள் முகம் கழுவ பயன்படுத்தினால் சருமம் பளபளப்பாகும்.

பனிக்காலங்களில் சிலருக்கு உதடுகள் வெடித்து விகாரமாக காட்சியளிக்கும் விளக் கெண்ணெய் சிறிது எடுத்து, உதடுகள் மேல் தடவி வந்தால் லிப்ஸ்டிக் போடாமலேயே உதடுகள் வழுவழுப்பாகி வசீகரமாக இருக்கும்.

காலை நேர வெறும் வயிற்றில் சுக்கு தட்டிப் போட்டு துளசி இலைகள் சேர்த்து கொதிக்க வைத்த நீரில் தேன் கலந்து பருகி வந்தால் மலச்சிக்கல் நீங்கி இரத்த ஓட்டம் சீரடைந்து தேகம் ஆரோக்கியமாகவும் வனப்பாகவும் இருக்கும்.

*ஹலீமா ஹாஜிபீர், கும்பகோணம்.*

## குப்பைமேனி செய்யும் மாயம்!

எல்லோருக்கும் தெரிந்த எங்கும் எளிதாகக் கிடைக்கும் செடி குப்பை மேனி. இது மேனியைப் பொன்னிறமாக்கும் தன்மையுடையது. செடியிலிருந்து இலைகளை கொத்துக் கொத்தாகப் பறித்து, கழுவி, ஒரு தரம் உதறி விட்டு, மிக்ஸியிலோ, அம்மியிலோ, தண்ணீர் விடாமல் அரைத்துச் சாறு எடுக்கவும். சாறு எவ்வளவோ, அதே அளவு தேங்காய் எண்ணெய் சேர்க்கவும். (எண்ணெய் சுத்தமானதாக இருக்க வேண்டும்) ஒரு டீஸ்பூன் தரமான மஞ்சள் பொடியையும் சேர்த்து, மிதமான தீயில், ஈரப்பதம் போய், அடியில் லேசாக வண்டல் சேரும் வரை காய்ச்சவும். ஆறிய பிறகு, நன்றாகத் துடைத்த கண்ணாடி பாட்டிலில், ஊற்றி, காற்றுப் புகாதவாறு டைட்டாக மூடவும்.

இதை 1½ டீஸ்பூன் எடுத்து முகத்திலும், முழங்கைகளிலும், மெதுவாக மேல் நோக்கித் தேய்க்கவும். மேலும் 1½ டீஸ்பூன் எடுத்துப் பாதங்களில், நக இடுக்குகளில் நன்றாகத் தேய்க்கவும். பதினைந்து நிமிடங்கள் ஊறிய பிறகு, கடலை மாவு போட்டு, குளிக்கவும். இது ஒரு அற்புதமான எண்ணையாகும். மேனியை மிருதுவாக வைப்பதோடு மட்டுமல்லாமல், மேனிக்கு மினுமினுப்பைத் தந்து, எல்லாவித சரும வியாதிகளையும் ஒழிக்கும்.

*விஜயஸ்ரீ, சென்னை - 4.*

**அல்வாவுக்கு 1 கிளாஸ்க்கு 3 கிளாஸ் சர்க்கரையும், மைசூர்பாகுக்கு 1 கிளாஸ் மாவுக்கு 2½ கிளாஸ் சர்க்கரையும், பர்பிக்கு 1 கிளாஸ் தே. துருவலுக்கு 1 கிளாஸ் சர்க்கரையும், மைதா கேக்கிற்கு 1 கிளாஸ் மாவுக்கு 2 கிளாஸ் சர்க்கரையும், லட்டுக்கு 1 கிளாஸ் மாவுக்கு 2 கிளாஸ் சீனியும், பால்கோவாவிற்கு 1 லிட்டர் பாலுக்கு 250 (அ) 200 கிராம் சீனியும் கரெக்ட் அளவு. இந்த அளவைத் தவறாமல் போட்டாலே ஸ்வீட் சரியான பதத்திற்கு வந்து விடும்.**

**- சங்கீதா**



# உங்கள் குழந்தை தீராத விளையாட்டுப் பிள்ளையாக, ஆனந்தமாக இருக்கும் தினம்.



பள்ளி முடிந்தது. அடுத்த நாள் ஆரம்பம்.

படிப்பதற்கோ மூட்டை மூட்டையாக பாடங்கள். இவை தவிர வீட்டுப் பாடங்கள் தனி. குழந்தைகளுக்கு அலுப்பும் சோர்வும் இருக்காதா?

வருடந்தோறும் போட்டி போட்டு படிப்பதற்காக அவர்களுக்கு மன வலிமையோடு உடல் வலிமையும் தேவை.

இதையெல்லாம் ஈடுகட்ட ஒரே வழி, புஷ்டியான உணவை அவனுக்கு கொடுப்பதுதான். அந்த உணவின் ஒரு பகுதியாக, நீங்கள் அவசியம் சேர்க்க வேண்டியது முட்டை.

ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் அடைக்கப் பட்டுள்ளதாகும் முட்டை. குழந்தைகளின் சக்திக்குத் தேவையான உன்னத புரதச்சத்து இதிலே அடங்கியுள்ளது. தவிர பழுதான திசுக்களை சீர்படுத்தி, நோய் எதிர்ப்புச்சக்தியையும் இது வழங்குகிறது. அடுத்ததாக,



இதிலே வைட்டமின் -A செறிந்துள்ளது. (இது குழந்தையின் கண்களுக்கும், சருமத்திற்கும் சிறந்தது. நல்ல ஜீரண சக்திக்கும், பசியைத் தூண்டவும், நரம்புகள் வலுப்பெறவும் தேவையான வைட்டமின் -B க்ரூப்புகள் அனைத்தும் உள்ளது. தவிர உறுதியான எலும்புகளுக்கு வைட்டமின் -D யும் உள்ளது.

அதுமட்டுமல்ல, முட்டையிலே 11 வகை கனிமப்பொருட்கள் உள்ளன. இரத்தத்தை ஆரோக்கியமாக வைக்க இரும்புச் சத்தும், மூளை வளர்ச்சிக்கான பாஸ்பரசம் உள்ளன. ஆகவே முட்டை கொடுத்து அவன் வளர்ச்சிக்கு உதவுங்கள்.

ஆனந்தமாக கவலையின்றி அவன் வளரக் கூடும்.

**எந்த நாளும் சிறந்தது.**
**முட்டை உண்ண உகந்தது.**

NECC
நேஷனல் எக்
கோ-ஆர்டினேஷன்
கமிட்டி

Enterprise/NECC/17/Tm

# அல்வாக்கள் பலவிதம்...

## முன்னுரை :

அல்வா என்றால் பல பெண்களுக்கு அலர்ஜி. சாப்பிட அல்ல, செய்ய. காரணம் சரியாக வருமோ, வராதோ என்ற பயம். ஆகவே அல்வா ஆசை இருந்தால் கூட செய்வதற்கு யோசித்து, அதனை விடுத்து மற்ற இனிப்புகளில் இறங்கிவிடுகிறார்கள். சகோதரிகளே, அல்வா என்பது நீங்கள் நினைப்பது போல் அவ்வளவு கடினமானது அல்வா... ஸாரி! அல்ல! கீழே கொடுத்துள்ள மாதிரி செய்து பாருங்கள் பயமில்லாமல். உங்கள் குடும்பத்தினர் வாயே திறக்கமாட்டார்கள். வாயில்தான் அல்வா இருக்குமே!

## கோதுமை அல்வா

தேவையான பொருட்கள் :

சம்பா கோதுமை (அ) சம்பா கோதுமை ரவா - 1 கிளாஸ்
நெய் - ¾ (அ) 1 கிளாஸ்
சீனி - 3 கிளாஸ்
ஏலக்காய் - 8
முந்திரி - 10 (அ) 12
கொதிக்கும் நீர் - 3 கிளாஸ்
கேஸரி பவுடர் - சிறிதளவு
பால் - 2 ஸ்பூன்

செய்முறை :

கோதுமை என்றால் இரவேயும், ரவை என்றால் காலை 6 மணிக்கும் நீரில் ஊறப் போடுங்கள். சுமார் 2½ முதல் 3 கிளாஸ் பால் எடுக்கவும். பால் 2, 3 மணி நேரம் ஊறினால் போதும்.

வாணலியில் சர்க்கரையைப் போட்டு, சர்க்கரை நனையும் வரை நீர்விட்டு பாகு வைக்கவும். சர்க்கரை கரைந்ததும் பால் 2 ஸ்பூன் விடவும். சர்க்கரையிலுள்ள அழுக்குகள் வெளியேறிவிடும்.



அழுக்குகளை ஸ்பூனால் எடுத்து விடவும். கம்பிப்பதம் பாகு வர வேண்டும். கோதுமை மாவில் உள்ள தெளிவை இறுத்து 2 கிளாஸ் பாலாக ஆக்கி, அதில் கேஸரி பௌடர் சேர்த்து, பாகில் விடவும். அடுப்பை நிதானமாக எரியவிட்டுக் கிளறவும். கொஞ்ச நேரத்தில் அல்வா கெட்டியாகும். கொதிக்கும் நீர் 1 கிளாஸ் (பில்டருள் விடுவதுபோல கொதிக்க வேண்டும்) விட்டுக் கிளறவும். இப்போது அல்வா நீரை எடுத்துக் கொண்டு வெந்து மறுபடி கெட்டியாகும். மறுபடியும் 1 கிளாஸ் நீர் விடவும். கிளறவும். மூன்றாம் முறையும் ஒரு கிளாஸ் நீர் விட்டுக் கிளறவும். இப்போது கொஞ்சம் கொஞ்சமாக நெய்யைச் சேர்க்கவும். நெய் கூட அதிகம் தேவையில்லை. கிளறிக் கொண்டே இருக்கவும். ஏலப்பொடி சேர்க்கவும். ஊற்றிய நெய்யை அல்வா நன்றாகக் கக்கும் போது, நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி, முந்திரியை சீவி அல்வா மீது கொட்டிச் சமப்படுத்தி பின் துண்டுகள் போடவும். இம்முறையில் செய்யும்



அல்வா, ஹோட்டல் அல்வாவைத் தோற்கடிக்கும் விதத்தில் விண்ணென்று வரும். சுவையாகவும் இருக்கும்.

## கோதுமை மாவு அல்வா

**தேவையான பொருட்கள் :**

கோதுமை மாவு - 400 கிராம்
சீனி - 800 கிராம்
ஏலக்காய் - 10
முந்திரி - 12
கேஸரி பவுடர் - சிறிதளவு
கொதிக்கும் நீர் - 2 கிளாஸ்
பால் - 2 ஸ்பூன்

**செய்முறை :**

கோதுமை மாவை ரொட்டி, சப்பாத்திக்குப் பிசைவது போல் பிசைந்து, உருட்டி, ஒரு வெள்ளைத் துண்டில் மூட்டைக்கட்டி 3 கிளாஸ் (அ) 4 கிளாஸ் நீரில் முக்கி வைக்கவும். 2, 3 மணி நேரம் கழித்து, துண்டிலுள்ள மாவைப் பிசைந்து கொடுப்பது போல், நீரில் கட்டியுள்ளபடியே செய்தால் நீர் கோதுமைப் பாலாக மாறும். மாவு சவ்வு போல் ஆகும். துண்டு முடிச்சை வெளியே எடுக்கவும். அரை மணி கழித்து தெளிந்ததும் தெளிவு நீரை இறுத்து விடவும். சுமார் 2½ கிளாஸ் பால் இருக்கலாம். இப்போது சீனியை பாகுவைத்து, பால்விட்டு அழுக்கு நீக்கி, கம்பிப்பதம் பாகு வந்ததும் கேஸரி பவுடர் சேர்த்து, கோதுமை மாவு பாலை விட்டுக் கிளறி, மேற் சொன்னபடி 2 கிளாஸ் கொதி நீர் விட்டுக் கிளறி, நெய் விட்டுக் கிளறவும். ஏலப்பொடி தூவவும். நெய்யைக் கக்கிக் கொண்டு வரும் போது, நெய் தடவிய தட்டில் கொட்டி, பச்சை முந்திரி சீவியதை அலங்கரித்துத் துண்டுகள் போடவும். இந்த அல்வாவும் சூப்பராக வரும். பயமே இல்லாமல் செய்யலாம்.

## மைதா மாவு அல்வா

முதல் வகை

**தேவையான பொருட்கள் :**

மைதா - 200 கிராம்
சீனி - 600 கிராம்
ஏலம் - 8
முந்திரி - 8
நெய் - 200 கிராம்
கேஸரி பவுடர் - சிறிதளவு

**செய்முறை :**

சலித்த மைதாமாவை 3 கிளாஸ் நீர் விட்டுக் கரைக்கவும். கேஸரி பவுடர் சேர்க்கவும். 4 மணி நேரம் ஊற வேண்டும். பின் வாணலியில் சர்க்கரையை கம்பிப்பதம் பாகு காய்ச்சவும் (மேல் சொன்னபடி பால்விட்டு அழுக்கு நீக்கி) அப்படியே மைதா கரைசலைக் கலக்கி விடவும். சற்று கலவை கெட்டியாகும் போது நெய்யைக் கொஞ்சம், கொஞ்சமாக விட்டுக் கிளறவும். ஏலப்பொடி போடவும். வாணலியில் ஒட்டாமல் நெய்யை கக்கிக் கொண்டு அல்வா சுருண்டு வரும் போது, நெய் தடவிய டிரேயில் கொட்டி, சீவிய முந்திரியால் அலங்கரித்துத் துண்டுகள் போடவும்.

## மைதா பால் அல்வா

இரண்டாம் வகை

**தேவையான பொருட்கள் :**

மைதா - 200 கிராம்
பால் - 600 மில்லி
சீனி - 600 கிராம்
முந்திரி - 8
ஏலக்காய் - 8
நெய் - 200 கிராம்
கேஸரி பவுடர் (அ) ரோஸ் பவுடர் - சிறிதளவு
வெள்ளரிவிதை - 2 ஸ்பூன்

**செய்முறை :**

மைதாவை பாலில் கரைக்கவும். 1 மணி நேரம் ஊறவிடவும். பின் அடிகனமான உருளியில் சர்க்கரைப் பாகு வைக்கவும். பாகில் அழுக்கு நீக்கி, மைதா பால் கலவையில் ரோஸ் பவுடர் போட்டுக் கலக்கி, பாகு கம்பிப்பதம் வந்ததும், பாலை விட்டுக் கிளறவும். நன்றாகக் கெட்டியாகும் போது, நெய்யை விடவும். ஏலப் பொடி போடவும். நெய்யைக் கக்கும் சில சமயம், சில சமயம் பாத்திரத்தில் ஒட்டாமல் சுருண்டு வரும். இரண்டுமே பதந்தான். நெய் தடவிய தட்டில் கொட்டி, சீவிய முந்திரி, வெள்ளரி விதை இவைகளால் அலங்கரித்துத் துண்டுகள் போடவும். இதுவே மைதா பால் அல்வா.

**கார வகைகளுக்கு வெண்ணெய், ஸ்வீட் வகைகளுக்கு அசல் நெய் இவை சேர்த்துச் செய்தால் மிகமிகச் சுவையாய் இருப்பதோடு அதிக நாள் கெடாது.**

**— சங்கீதா**



விருந்து சாப்பிட நண்பர்களையோ, உறவினர்களையோ அழைக்கிறீர்கள். அவர்களுடன் விருந்து உண்ணும் போது, கூடுமான வரை உணவுப் பண்டங்களின் விலை வாசியைப் பற்றி பேசாமல் இருப்பது இங்கிதம்.

— ஆர். உமாதேவி



## மைதா ஃபாரின் அல்வா

மூன்றாம் வகை

**தேவையான பொருட்கள் :**

மைதா - 200 கிராம்
தேங்காய் முற்றியது - 1
சர்க்கரை - 600 கிராம்
நெய் - 100 கிராம்
தே. எண்ணெய் - 100 கிராம்
பச்சைப் பவுடர் - சிறிதளவு
முந்திரி - 10
வெள்ளரிவிதை - 2 ஸ்பூன்
ஏலக்காய் - 10

**செய்முறை :**

தேங்காயைத் துருவி அரைத்து 3 கிளாஸ் பால் எடுக்கவும். அதில் மைதா, ஆப்பிள் கிரீன் கலர் போட்டுக் கலக்கவும். அடிகனமான உருளியில் சர்க்கரைபாகு வைக்கவும். பாகில் உள்ள அழுக்கை நீக்கவும். பாகு கம்பிப்பதம் வரும் போது, மைதா கலவையைக் கொட்டிக் கிளறவும். சற்று கெட்டியாகும் போது தே. எண்ணெய்யை சுடவைத்து ஊற்றிக் கிளறவும். ஏலப் பொடி போடவும். நன்றாக சட்டியில் ஒட்டாமல் வரும் போது, ஏலப்பொடி, நெய் சேர்த்துக் கிளறவும். நெய் தடவிய டிரேயில் கொட்டி, சீவிய முந்திரி, வெள்ளரி விதை இவைகளால் அலங்கரிக்கவும். பின் துண்டுகள் போடவும். இதுவே மைதா ஃபாரின் அல்வா.

## அரிசி அல்வா

**தேவையான பொருட்கள் :**

ப. அரிசி - 100 கிராம்
ஜவ்வரிசி - 100 கிராம்
பால் - 200 மில்லி
கேஸரி பவுடர் (அ) அல்வா சிவப்பு - சிறிதளவு
நெய் - 200 கிராம்
சர்க்கரை - 600 கிராம்
ஏலக்காய் - 8
முந்திரி - 8

**செய்முறை :**

அரிசி, ஜவ்வரிசி இரண்டையும் 2 மணி நேரம் ஊறப் போடவும். இரண்டையும் பால் விட்டு நன்றாக அரைக்கவும். 2 கிளாஸ் நீர் சேர்த்துக் கரைக்கவும். அல்வா சிவப்பு (அ) கேஸரி பவுடர் சேர்க்கவும். சர்க்கரையைப் பாகு வைக்கவும். கம்பிப்பதம் பாகு பதத்தில் அரைத்த கலவையைக் கொட்டிக் கிளறவும். இடையில் 2 கிளாஸ் கொதிநீரை விடவும். கிளறவும். நெய்யைச் சிறிது சிறிதாக சேர்க்கவும். சட்டியில் ஒட்டாமல் சுருண்டு வரும் போது, (நெய்யைக் கொஞ்சம் கக்கிக் கொண்டு) நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி, சமப்படுத்தி ஏலக்காய்த் தூள், சீவிய முந்திரி, இவைகளை மேலே தூவி அழுத்தி, துண்டுகள் போடவும். பாம்பே ஹல்வா போல் இழுக்க இழுக்க பிசுக்பிசுக்கென்று சூப்பராக வரும் இந்த அல்வா.

## ரவை அல்வா

**தேவையான பொருட்கள் :**

ரவை - 200 கிராம்
பால் - 200 மில்லி
சர்க்கரை - 500 கிராம்
நெய் - 200 கிராம்
முந்திரி - 10
ஏலக்காய் - 10
கேஸரி பவுடர் - சிறிதளவு
ஜவ்வரிசி - 2 ஸ்பூன்

**செய்முறை :**

ரவையை லேசாக வறுத்து பாலில் ஊறப் போடவும். அரைமணி கழித்து நைஸாக அரைக்கவும். அரைக்கும் போது, ஊறவைத்த ஜவ்வரிசியையும் போடவும். அரைந்ததும் மீதி பாலையும் விட்டு, 1 கிளாஸ் நீரும் விட்டுக் கரைக்கவும். கேஸரி பவுடர் சேர்க்கவும். அடிகனமான உருளியில் பாகு வைத்து, கம்பிப்பதம் வந்ததும், ரவைப் பாலை விடவும். கிளறவும். சற்று கெட்டியானதும் ஏலப்பொடி போட்டு, நெய் விட்டு, விட்டுக் கிளறவும். அல்வா பாத்திரத்தில் ஒட்டாமல் சுருண்டு வரும். இதுவே பதம். நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி சமப்படுத்தி, சீவிய முந்திரியால் அலங்கரித்துத் துண்டுகள் போடவும். இதுவே ரவை அல்வா.

## அவல் அல்வா

**தேவையான பொருட்கள் :**

அவல் - 400 கிராம்



நீடித்து நிலைக்கும் வெண்மைக்கு
உஜாலா
உஜாலாவின்
இரகசியம்
எல்லா வசதிகளும்
படைத்த ஜோதி ஆய்வுக்
கூடத்திலே V-பானல்
ஃபார்முலா கொண்டு
தயாரிக்கப்படுகிறது உஜாலா.
நூதனமான மைக்ரோ
ஒயிட்னிங் மற்றும்
மைக்ரோ டிஸ்பெர்ஷன்
தொழில் நுட்பம்தான்
இதன் மேன்மை.
இந்தியாவிலும்,
வெளிநாடுகளிலும்
கோடிக்கணக்கான மக்களால்
விரும்பப்படுகிறது.
இதுவே உஜாலாவின்
அபார வெற்றியின்
இரகசியமாகும்.
மார்க்கெட்டில்
உஜாலாவைப் போன்றே
ஏராளமான போலிகள்
வருகின்றன. அவைகள்
"உஜாலா இரகசியத்தைப்"
பெற முடியாது.
UJALA
இப்போது 250 மி.லி. ஃபேமிலி பேக்கிலும் கிடைக்கிறது
ஜோதி லாபாரட்டரீஸ்
பம்பாய்
UJALA

சீனி - 500 கிராம்
பால் - 200 மில்லி
நெய் - 300 கிராம்
ஏலக்காய் - 8
முந்திரி - 8
ஆப்பிள் கிரீன் கலர் - சிறிதளவு
வெள்ளரி விதை - சிறிதளவு

**செய்முறை :**

அவலை பாலில் ஊறவைக்கவும். 1 மணி நேரம் கழித்து மாவு போல் அரைக்கவும். பால், தண்ணீர் விட்டு 4 கிளாஸ் கலவை இருக்குமாறு கரைக்கவும். கரைத்த தோசை மாவுபதம். அடிகனமான உருளியில் நெய்யைவிட்டுக் காய்ந்ததும், அவல் பாலைக் கொட்டவும். ஆப்பிள் கிரீன் கலர் சேர்த்துக் கிளறவும். சட்டியில் ஒட்டாமல் சுருண்டு வரும் போது, சீனியைக் கொட்டிக் கிளறவும். ஏலப்பொடி போடவும். சீவிய முந்திரியையும் பாதி அளவு அல்வாவில் கொட்டவும். நன்றாகக் கிளறிக் கொண்டே இருந்தால் சட்டியில் ஒட்டாமல் அல்வா சுருண்டு வரும் போது நெய் தடவிய டிரேயில் கொட்டி சமப்படுத்தி, சீவிய முந்திரி, வெள்ளரி விதை இவைகளால் அலங்கரிக்கவும். துண்டுகள் போடவும். இதுவே அவல் அல்வா.

## சேமியா அல்வா

**தேவையான பொருட்கள் :**

சேமியா - 200 கிராம்
சர்க்கரை - 400 கிராம்
பால் - 200 மில்லி
ஏலக்காய் - 8
முந்திரி - 8
ரோஸ் பவுடர் - சிறிதளவு
நெய் - 200 கிராம்

**செய்முறை :**

சேமியாவை பாலில் ஊறவைத்து, நைஸாக அரைத்து 3 கிளாஸ், 4 கிளாஸ் இருக்குமாறு நீர் விட்டுக் கரைக்கவும். ரோஸ் பவுடர் சேர்க்கவும். அடிகனமான உருளியில் பாகு வைக்கவும். பாகு கம்பிப்பதம், இப்போது சேமியா பாலைக் கொட்டிக் கிளறவும். கெட்டியாகும் போது, தேவையானால் 1 கிளாஸ் கொதி நீர் சேர்த்துக் கிளறவும். பின் ஏலப் பொடி போட்டு, நெய்யை சிறிது சிறிதாக விட்டுக் கிளறவும். அல்வா பாத்திரத்தில் ஒட்டாமல் சுருண்டு வரும் போது, நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி சமப்படுத்தி, சீவிய முந்திரியால் அலங்கரித்து துண்டுகள் போடவும். இதுவே சேமியா அல்வா.

## கலவை அல்வா

**தேவையான பொருட்கள் :**

அவல் - 100 கிராம்
சேமியா - 100 கிராம்
ஜவ்வரிசி - 100 கிராம்
மைதா - 100 கிராம்
கோ. மாவு - 100 கிராம்
பால் - 1 லிட்டர்
சர்க்கரை - 1 கிலோ
நெய் - ½ கிலோ (அ) 400 கிராம்
ஏலக்காய் - 12
முந்திரி - 12
வெள்ளரிவிதை - 3 ஸ்பூன்
ஆப்பிள் கிரீன் பவுடர் - சிறிதளவு

**செய்முறை :**

அவல், ஜவ்வரிசி, சேமியா மூன்றையும் பாலில் ஊறவைத்து நைஸாக அரைக்கவும். பாலில் கரைக்கவும். கோ. மாவு, மைதா மாவு இரண்டையும் சேர்த்துக் கரைக்கவும். அடிகனமான பெரிய பாத்திரத்தில், சர்க்கரையை கம்பிப்பதம் பாகு வைக்கவும். பாகில் அழுக்கு நீக்கி, கம்பிப் பதம் வந்ததும் கரைத்த மாவில் ஆப்பிள் கிரீனைக் கலந்து, கொட்டி, கிளறவும். சற்றைக்கெல்லாம் கெட்டியாகும். அப்போது 2 கிளாஸ் கொதி நீரை விட்டுக் கிளறவும். மறுபடியும் 1 கிளாஸ் கொதி நீரை விட்டுக் கிளறவும். மறுபடியும் கெட்டியாகும் போது நெய்யை சிறிது, சிறிதாக சேர்த்து, ஏலப்பொடி சேர்த்துக் கிளறவும். நெய்யை அல்வா கக்கும். அதுவே பதம். நெய் தடவிய டிரேயில் கொட்டி, சீவிய முந்திரி, வெள்ளரி விதை இவைகளால் அலங்கரித்து, துண்டுகள் போடவும். இந்த அல்வா நல்ல கெட்டியாக ஹோட்டல் அல்வா போலவே வரும். அருமையாக இருக்கும். மிக நன்றாக வரும்.

— கமலா ஜானகிராமன்



கார வகைகளுக்கு பிசையும் போது ஒரு கப் தே.பால் விட்டுப் பிசைந்தால் காரங்கள் சுவையாகவும், தே. எண்ணெயில் செய்தது போலவும் சுவையாய் இருக்கும்.

— சங்கீதா

**WE WELCOME YOU TO THE WORLD OF KARISHMA CHURIDARS AND COTTON SAREES**







WE WELCOME CITIBANK CARDS

Our Latest Indtroduction BEEKAY Sarees

# AALURI SAREES

*The Shop Execlusively for* **Karishma** *Churidars & Sarees*

**Our Products**

1) Karishma Churidars
2) Karishma Sarees
3) Andhra Pochham Palli Cotton Sarees
4) Belgaum Polyster (Saradha) Sarees
5) Seiko Sarees
6) Banaras cotton sarees.
7) Beekay Sarees



**AALURI SAREES**

(DEALER OF KARISHMA CHURIDARS & SAREES)

**WHOLESALE & RETAIL**

4/24, R.K. MUTT ROAD, LUZ BAZAAR,
MYLAPORE, MADRAS - 600 004.
NEXT TO SRINIVAS SILK
PHONE : 4935791

இந்த விளம்பரத்தை கொண்டு வருபவர்களுக்கு 10% சிறப்புத் தள்ளுபடி தீபாவளி வரை

Komala Ads

---

**சுந்தரம் சாரீஸ்**

சுங்குடி புடவைகள்

TRADEMARK



**Sundaram Sarees**

566036

எமது
டிரேட் மார்க்
பார்த்து வாங்குங்கள்

மதுரையில் 45 வருடங்களாக
சுங்குடி புடவைகள் தயாரிப்பின்
பிரசித்தி பெற்று விளங்குவது எமது

# சுந்தரம் சாரீஸ்

எங்களிடம் ஜரிகை மற்றும் சாதா சுங்குடி புடவைகள், காஞ்சி, கோவை, நெகமம், பெங்கால், கைத்தறி காட்டன் புடவைகளும், கரீஸ்மா, தாரிகா , சுவிஸ் காட்டன், புனா, பட்டர் காட்டன், வாயல் புடவைகளும், பாலி காட்டன், கோரா சில்க் முதலிய தரமான புடவைகளும், கவர்ச்சியான சரிதார் டிசைன்களும் மொத்தமாகவும் சில்லரையாகவும் கிடைக்கும்.

# சுந்தரம் டெக்ஸ்டைல்ஸ்

90, தெற்குமாசி வீதி, மதுரை - 625 001. ✆ 25152

**சென்னையில் கிளை நிறுவனம் கிடையாது.**

♦ தேங்காய் பர்ஃபி செய்யும் போது, அரை டம்ளர் பால் ஊற்றிச் செய்தால், ஸாஃப்டாகவும் வெள்ளையாகவும் இருக்கும்.

♦ தீபாவளிக்குச் சேமியா பாயசம்தான் அநேகமாக செய்வார்கள். நிறைய பால் வேண்டுமே. பால் சற்றுக் குறைவாக இருந்தாலும் பரவாயில்லை. பால்கோவா வாங்கி, ஒரு கரண்டி பாயசத்தில் போட்டுக் கலக்கி விடுங்கள். ஆஹா, என்ன ருசி (ஆஹா, ஓஹோ)

— ஆர். பார்வதி



# தீபாவளி பக்கங்கள்

## உக்காரை

♦ தீபாவளிக்கு உக்காரை தயாரிப்பது நம்மில் பலரின் வழக்கம். உக்காரையை மிகவும் எளிய முறையில் தயார் செய்யலாம். கடலைப் பருப்பை கை பொறுக்காத சூட்டில் (அதாவது கடலைப் பருப்பை கையில் எடுத்துக் கொண்டால் உடனே கீழே போடும் அளவில்) வறுத்துக் கொண்டு வெந்நீரில் இரண்டு மணி நேரம் ஊற விடவும். ஊறின பின் நன்கு களைந்து நீரை வடித்து உலர்ந்த துணியில் 15 நிமிடம் உலர விடவும்.

பிறகு கடலை பருப்பை மிக்ஸியில் பொடி பண்ணவும். வெகு விரைவில் பொடியாகி விடும். வெறும் வாணலியில் போட்டு ஈரம் போக வறுத்துக் கொள்ளவும். கையால் தொட்டுப் பார்த்தால் ஈரப்பசையே இருக்காது. சில நிமிடம் வறுத்தால் போதும். ஈரம் போய்விடும். வெல்லத்தைப் பாகுவைத்து (நல்ல கம்பிப் பதம்) பருப்புப் பொடியைப் போட்டுக் கிளறவும். 1 பருப்புக்கு 1¼ வெல்லம் வீதம் போட்டுச் செய்தால் நல்ல தித்திப்புச் சுவையுடனும் 'ஸாப்ட்' ஆகவும் உக்காரை மிகவும் நன்றாக இருக்கும். முந்திரி, தேங்காய் வறுத்துப் போடவும். ஏலம் பொடி சேர்க்கவும்.

— கே. பாலா

## பச்சை அரப்பின் மகிமை!

♦ போன வருடம் என் பெண் பட்டாக வெடித்து கையைச் சுட்டுக் கொண்டு விட்டாள். உடனே என் மாமியார், பச்சை அரப்பைக் கரைத்துத் தீச்சுட்ட இடத்தில் நன்றாகப் பூசி விட்டார். கொப்புளமும் கிளம்பவில்லை. சீக்கிரமும் ஆறிவிட்டது. தீபாவளி வருகிறது. உஷார்!

தீபாவளி பக்ஷணம் செய்யும் போது எண்ணெய் பொங்கி வந்தால் முன்பெல்லாம் சிறிது புளியை உருட்டிப் போடுவார்கள். ஆனால் இப்போது ஒரு துளி வினிகர் விட்டாலே போதும் என்று சொல்கிறார்கள். வினிகரை விட்டுக் கை கழுவினாலும் கைகளில் ஏற்பட்டுள்ள வாழை, கத்தரிக்காய் கறை நீங்கிவிடும்.

— அனுசத்யா

♦ தீபாவளிக்குத் தட்டை செய்பவர்கள் கவரிலோ, துணியிலோ இல்லை இலையிலோ தட்டி இட சிரமம் ஏற்படுகிறது.

இதைத் தவிர்க்க காலியான பவுடர் டப்பாக்களை தட்டை செய்யும் அளவிற்கு வட்ட வடிவமாக 'கட்' செய்து கொள்ளவும்.

இத்தட்டுகளில் தட்டைக்கான மாவை வைத்துத் தட்டிக் கொண்டு வாணலியில் எண்ணெய் காய்ந்ததும் இடவும். ஒரு முறைக்கு ஐந்து தட்டாக இடவும்.

தட்டை வெந்ததும் தனியாக மேலே வந்து விடும். தகடு அடியில் தங்கி விடும். தங்கிய தகடை எடுத்து விடவும்.

இத்தகடு சூடாக இருக்கும் என்பதால் மற்ற ஐந்து தட்டுகளில் தட்டை தட்டி இடவும். இட்ட தகடுகளை எடுப்பதற்குள் எடுத்து இருந்த தகடுகள் ஆறிவிடும். இவ்வாறு மாறி, மாறி இட,

வேலையும் விரைவில் முடியும், எவ்வளவு மெலிதாக வேண்டுமோ அவ்வளவு மெலிதாக தட்டலாம்.

— எஸ். லட்சுமி

## பெற்றோர்களே எச்சரிக்கை!

♦ அன்றைய பெற்றோருக்கு, ஆறு... ஏழு குழந்தைகள் இருக்கும். அதனால் பொதுவாகவே குழந்தைகள் பக்கமே வரமாட்டார்கள். குறிப்பாக தீபாவளி சமயங்களில் வெடி வாங்கிக் கொடுத்து விட்டு ஒதுங்கிக் கொள்வார்கள். ஆனால் இன்றைய பெற்றோருக்கு அதிகபட்சமாக, ஒன்றிரண்டு குழந்தைகளுக்கு மேல் இருப்பதில்லை. இதனால் இவர்கள் கவனம் முழுவதும் குழந்தைகள் மேலேயே இருக்கும். வெடி வாணங்கள் கொளுத்தும் போது கூட, தாங்கள் இருக்கும் போது வெடித்துக் கொளுத்தினால் போதும் என கூறிவிடுவர். இது சரிதான். ஆனால் பெற்றோரே விபத்தில் மாட்டிக் கொள்கிறார்களே!

பற்றவைத்த வெடி வெடிக்கவில்லையென்றால், குழந்தைகளுக்கு முன் இவர்கள் ஓடுகிறார்கள். கடந்த தீபாவளியின் போது, ஒரு அப்பா... இப்படி வெடிக்காத வெடியை எடுக்கப் போய்; கை விரல்களை விபத்துக்கு உள்ளாக்கிக் கொண்டார். எப்படி? வெடிக்கவில்லையே என, வெடியை எடுக்கும் போது, அது நெருப்பைக் கக்க... கை விரல்கள் வெந்து விட்டன. பிறகு டாக்டரிடம் சென்று சுமார் இரண்டு மாதங்களில் குணமாயிற்று. ஆனால் அந்த இடத்தில் இன்று வரை தோல் உரிந்து கொண்டே இருக்கிறது. ஒருவித நமைச்சலினால், அதைச் சொறிந்தபடியே இருக்க வேண்டியுள்ளது. ஆகவே பெற்றோர்களே... வெடி வெடிக்கவில்லையா.. வாணம் மேலே எழும்பவில்லையா... கவலை வேண்டாம். அதை அப்படியே விட்டு விட்டு... அடுத்த வெடிக்குச் செல்லுங்கள் போதும்...

— ராஜிராதா

## தீபாவளிக் கோலம்

13 புள்ளியிலிருந்து 7 புள்ளிவரை (ஊடுபுள்ளி)



— பா. பிரேமலதாராணி

அட்டைப்படக் கட்டுரை

# சந்தித்தேன் சகோதரிகளை...

போது பெண் வெற்றி பெறுகிறாள். பெரிய சாதனை படைத்தவர்களைப் பார்த்து நாம் வியக்கிறோம். அவர்களுக்கும் பிரச்னைகள் உண்டு. உங்கள் இல்லம் என்ற அளவில் உங்களுக்குப் பிரச்னைகள் உண்டு. சாதனையாளர்களின் உயரம் அளவிற்கு (உடல் உயரம் அல்ல) அவர்களுக்கு பிரச்னைகள் உண்டு. அதை எப்படித் தைரியமாகச் சந்தித்து வெற்றி பெற்றார்கள் என்பதைத்தான் பார்க்க வேண்டும்.



மதுரை சௌஜன்யா மகளிர் சங்க உறுப்பினர்களுக்குக் கோபமான கோபம். மதுரையில் மகளிர் விழா நடத்திய போதும் சரி, அப்புறமாக 'சந்திப்போம் சிந்திப்போம்' நிகழ்ச்சி நடத்தின போதும் சரி அவர்களுக்கும் சரியான சந்தர்ப்பம் அமையாமல் போய் விட்டதாம். ஏதோ பத்திரிகை, ஏதோ ஆசிரியர் என்றில்லாமல் சொந்தச் சகோதரியிடம் சண்டை போடுவது போல அவர்கள் சண்டைக்கு வந்த உரிமை, அன்புதான் என்னை நெகிழ வைத்தது. இப்படி ஒரு அன்பை வைத்திருக்கும் இவர்களுடன் பேச வேண்டுமே என நினைத்தது. சமீபத்தில் கை கூடியது.

ஒரு அருமையான அரட்டை அரங்கமாகவே அன்று இருந்தது. தலைவி ராஜம் செல்லப்பாவும், செயலாளர் சுபா ராமனும் நம் வருகைக்கு மகிழ்ந்து சிரிக்க சுபா, சந்திரா, விஜயா, கிரிஜா, மாலா, பீனா, சங்கரி, வேணி, ஜனனி, சரோஜா, மாலதி, கல்பனா, வைஜயந்தி... இப்படி இன்னும் நிறைய பேர் திரண்டிருந்தார்கள்.

"நாங்கள் எல்லாம் சாதாரண இல்லத்தரசிகள்தான். நிறைய சாதனைகள் செய்ய ஆசை இருக்கிறது. அதற்கு யோசனை கூறுங்களேன்..." என்றார் ஒருவர்.

"ஏன் இல்லத்தரசி என்பதைச் சாதாரண இல்லத்தரசி எனச் சொல்கிறீர்கள். நமக்கு இல்லம் முக்கியம். கணவன், குழந்தைகள், குடும்பம் ரொம்ப முக்கியம். அதே போல நாமும் ஏதாவது செய்ய வேண்டும் எனும் உந்துதலும் முக்கியம். இந்த இரண்டையும் சாதிக்கும் நாமும் அப்படி தைரியமாக தன்னம்பிக்கையோடு ஒவ்வொன்றையும் செய்தால் நிச்சயம் உயரலாம். 'சாதாரண இல்லத்தரசிதான்' என்ற மனப்பான்மை போய்விடும்...." என்றேன்.

பெண்கள் சங்கத்திற்கே வருவதே வேஸ்ட் என்பது போல வீட்டில் சொல்கிறார்கள், நம் ஏரியாவிற்காக ஒரு பஸ் நிலையம் கட்ட முயற்சிக்கும் போது எத்தனை இடர்களை சந்தித்தார்கள் என்றெல்லாம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

சமூக சேவை என்று வந்து விட்டால் இது எல்லோருமே சந்திக்கும் பிரச்னைதான். சமூக அமைப்பு நிறுவனங்கள் அத்தனைக்குமே நிதி வசூலித்தல் என்பது ரொம்பக் கடினமான காரியம்தான் 'ஐயையோ, டொனேஷன் கேட்க வரா' என மிகத் தெரிந்தவர்கள் கூட ஓடி ஒளிந்து கொண்டு விடுவார்கள். இவர்கள் பொதுநலத்திற்காகத்தானே கேட்கிறார்கள், நம்மால் முடிந்த பத்து ரூபாய் கொடுப்போம் என ஒவ்வொருவரும் தந்தால் எவ்வளவோ பெரிய செயல்களை செய்ய முடியும்? இந்த மனப்பான்மையும் நம் சமூக மக்களிடையே



பரவ வேண்டும். அதுவும் இப்படிப்பட்ட மகளிர் சங்கங்கள் யாரையும் ஏமாற்றப் போவதில்லை. பணம் தவறாகப் பயன்படுத்தப் போவதில்லை. அவரவர் வசிக்கும் பகுதியில் சில பொதுவசதிகளை செய்து கொடுக்கத்தானே அந்த இல்லத்தரசிகள் பாடுபடுகிறார்கள்? அவர்களை நையாண்டி பேசாமல் அவர்களுக்கு நம்மால் ஆன உதவியைச் செய்யலாமே!

பெயர் பெற்ற சமூக சேவை, நிறுவனங்களுக்கு, அவர்கள் வளர்ந்து விட்ட பிறகு, அவர்கள் கேட்காமலேயே நிதியுதவி வந்து குவியும். ஆனால் இவர்களைப் போன்ற சிறு அமைப்புக்கள் ஆங்காங்கே விழுது ஊன்றி நிழல் தருகிறார்களே! நம்மால் ஆன ஒரு டம்ளர் தண்ணீரை ஊற்றலாமே!

போகட்டும், அவர்கள் பிரச்னைக்கப்புறம், பொதுப் பிரச்னைக்கு வந்தார்கள். இவர்கள் என்றில்லை இப்போது யாராவது இரண்டு பேர் பார்த்துக் கொண்டாலே பேசுவது முதல்வர் வீட்டுக் கல்யாணம் பற்றித்தான். பத்திரிகைகள் அத்தனையும் எழுதோ எழுதென்று எழுதுகின்றனவே! இவர்கள் பேசாமல் விடுவார்களா? உறுப்பினர்களுக்குள்ளேயே காரசாரமான விவாதம். பிறகு ரஜனி பேசியது சரியா என விவாதித்தார்கள். நம் பத்திரிகை பக்கம் பேச்சு திரும்பியது.

"உங்கள் முதல் பக்கக் கட்டுரையைப் படிச்சுட்டுத்தான் அடுத்த பக்கம் போவேன். அதுவும் இந்த மாசம் வயசானவா பத்தி எழுதியிருக்கீங்க பாருங்க. அத படிச்சப்போ ரொம்ப நெகிழ்ந்து போயிட்டேன். அதெல்லாம் எவ்வளவு உண்மை. வயசானவான்னாலே ஏதோ கேலிக்குரிய பொருளா நினைச்சுக்கிறாங்க" என்றார் ஒரு வயதான பெண்மணி.

அவரின் மனக்குமுறல் அத்தனையும் அந்த நாலு வரிகளில் அடங்கிக் கொந்தளிப்பதை உணர முடிந்தது. ஒரு புன்னகையோடு கேட்டுக் கொண்டு இருந்தோம்.



அரசியல், சினிமாவெல்லாம் நம்ம பத்திரிகைக்கு வேண்டவே வேண்டாம் என்று அபிப்பிராயம் தெரிவித்தார்கள். அட்டை டு அட்டை காரசாரமான விமர்சனம்.

இரண்டு மணி நேரத்திற்கு மேல் நேரம் ஓடியே போனது. அந்த அன்பு, நட்பு, அன்னியோன்யம். சொந்தச் சகோதரிகளிடம் விடை பெறுவது போல நெகிழ்ந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டோம்.

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள் : சுரேஷ்

# The cent-per-cent "Family-Deposit"

## குடும்பம் முழுமைக்கும் பயன்தரக்கூடிய ஒரே திட்டம்



குடும்பத்தினருடன்
திரு. மல்லிகேஸ்வரன்

இந்த விளம்பரம், விதிமுறைகளுக்கு உட்பட்டு ஆகஸ்ட் 29,1995-ல் மக்கள் குரலிலும், டெய்லி மிரரிலும் வெளியான விளம்பரத்தைத் தொடர்ந்து வெளிவருவது. விதிமுறைகளுக்

INTRODUCING

# LEEMA

## Electric Chimney






**Just fix it in your kitchen and cook in complete comfort**

**Cook in complete comfort with 'LEEMA'**

- 'Leema' removes all. Oil vapour, Odour, Smoke, Fumes. And hot air. Right from the source. More efficiently than an exhaust fan. As it is fixed just above the gas stove.
- 'Leema' is easy to fix — no need to break the wall open. Just hang it on two nails and plug in.
- 'Leema' can recirculate air. Or extract it with a simple pipe connection that leads to a point outside.
- Stylish built with a powerful suction motor and washable filters. 'Leema' is available in different colours and models.
- 'Leema' is also fitted with two electric bulbs to illuminate the cooking area.

That's right. 'Leema' Electric Chimney is efficient, sleek and lets you cook in complete comfort.

Sole Agent & Stockist

**LEEMA'S**

**Home Collections**

IInd Floor, Sun Plaza,
19, G.N. Chetty Road,
T.Nagar, Madras - 600 017.
✆ : 8250787 / 8252501



## மேஷ ராசி :

அசுவினி, பரணி, கிருத்திகை - 1 ஆம் பாதம்.

மாதம் பூராவும் புதனின் சஞ்சாரம் சாதகமாகவே உள்ளது. அதனால் அரசுப் பணியிலோ, தனியார் துறையிலோ உள்ள இந்த இராசி இருபாலர்க்கும் பதவி உயர்வு அல்லது அவர்கள் மேற்கொண்ட பணிகளில் வெற்றி கிடைக்கும். அத்துடன் சுபச் செலவுக்கும் சந்தர்ப்பம் உண்டு. அது போலவே சனி பகவான் அருளும் உண்டு. பொருளும் சேரும். மன இருளும் அகலும். குறிப்பாக மாதத்தின் முற்பகுதியில் சூரியனால் கலைஞர்களுக்கு ஏற்றமானதொரு சூழ்நிலை உருவாகும். முதல் வாரத்தில் சுபநிகழ்ச்சி ஒன்று கைகூடிவரும். அது உங்களைச் சார்ந்த ஒருவரின் திருமண நிகழ்ச்சியாகக் கூட இருக்கும். அதில் உங்கள் பங்கு அதிகம் இருக்கும். ஆயினும் சுக்கிரனுடைய நிலை சரியாக இல்லை. எனவே வீடு வாங்கவோ விற்கவோ ஏற்ற சூழ்நிலை இல்லை. இதை மீற முயற்சி செய்தால் முடிவு அடுத்தவர்களுக்குச் சாதகமாக அமைந்து விடும். இரும்பு, இரசாயனம் மற்றும் கருப்புக்கல், கட்டிடக் கலை சம்பந்தமான தொழில்கள் நன்றாக அமையும். உங்கள் மழலைச் செல்வங்களின் முன்னேற்றத்தில் காணப்படும் தடை காரணமாக மனத்தில் அமைதி குறையும். இது அவர்கள் கல்வியின்பால் காட்டும் அலட்சியத்தின் காரணமாகவும் ஏற்படலாம். அல்லது அவர்களின் திருமண வாழ்க்கையில் ஏற்படுகின்ற முரண்பாட்டாலும் ஏற்படலாம். வீண் அலைச்சல் காரணமாக



# அக்டோபர் '95

உடல்நலம் பாதிக்கலாம். வாழ்க்கைத் துணைவர் கூட உங்களின் மனநலத்தைக் குலைக்கலாம். ஏற்ற இறக்கமுள்ள இம் மாதத்தில் ஸ்ரீ பார்வதி பரமேசுவரன் சேர்ந்து காட்சி அளிக்கும் படம் ஒன்றை வைத்து, கோளறு பதிகம் பொருளுணர்ந்து பாடி, பழம் நிவேதனம் செய்து, கற்பூர நீராஞ்சனம் காட்டுங்கள். குடும்பத்தில் அமைதி ஏற்படும். குழந்தைகளின் முன்னேற்றமும் நன்கு அமையும்.



## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் முதல் பத்து நாட்களில் அங்காரகனால் அலங்காரப் பொருட்களும், நகையும் வாங்கும் யோகம் உண்டு. காவல் துறையில் உள்ளவர்களும் இக்கால கட்டத்தில் பட்டமோ, பரிசோ பெறுவார்கள். எரிபொருள் துறையினர்க்கும் ஏற்றமிகு காலம். ஆனால் அடுத்து வரும் இருபது நாட்களும் அதே அங்காரகனால் பிரச்னை தரும் காலமாகலாம். அந்தச் சமயத்தில் கூடிய மட்டும் பேச்சிலும் செயலிலும் சற்று அடக்கமாக இருப்பது நல்லது. காவல் துறையினர்க்கும் சவால் ஒன்றைச் சமாளிக்கும் நிலை ஏற்படலாம். எனவே எதிலும், எப்பொழுதும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. மாதத்தின் பிற்பகுதியில் சுபநிகழ்ச்சி ஒன்றில் பங்கு பெறுவீர்கள். அல்லது நீங்களே கூட அத்தகைய நிகழ்ச்சியை நடத்தலாம். வீடு வாங்கும் யோகம் உண்டு. கோர்ட் விவகாரத்தில் வெற்றி கிடைக்கும் சூழ்நிலை உருவாகும். வேலைக்கு மனு செய்துள்ளவர்களுக்கும் வெற்றி கிடைக்கலாம். பத்தாமிடத்தில் ஆட்சியில் உள்ள சனி தனது பார்வையாலும், ஸ்தான பலத்தாலும் ஓரளவுக்கு உங்களுக்குச் சாதகமாக இருக்க சனீஸ்வர ஸ்தோத் திரத்தைப் படிப்பது நல்லது. குருபலம் இருந்தும் திருமணம் கைகூடி வராதவர்கள், இந்த நேரத்தில் ஸ்ரீ துர்க்கா சப்தச்லோகி எனும் ஸ்ரீ துர்க்கைக்குரிய மந்திரத்தை வேதமறிந்த ஆச்சாரியார் ஒருவர் மூலமாக உபதேசம் பெற்று, ஸ்ரீ துர்க்கையை

தீபாவளி, திருமணம் போன்றவைகளுக்குச் செய்த லட்டு, ஜாங்கிரி, மைசூர் பாகு, பர்ஃபிகள் வெகு விரைவில் செலவழிந்து விடும். ஆனால் பாத்திரத்தின் அடியில் தங்கும் சர்க்கரைக் கலந்த ஸ்வீட் தூள்கள் சிந்தி, சிதறி வீணாகும். இது மாதிரி மீந்த ஸ்வீட் தூள்களை கெட்டியான பாத்திரத்தில் கொட்டி 1 கரண்டி பால் ஊற்றி இளஞ் சூடாக்கினால் ஸ்வீட் கலவை மாவைக் கலந்து நன்கு அடித்துப் பிசைந்து "ஸ்வீட் பேடா" தயாரிக்கலாம்.

– என். சாந்தி



மானஸீகமாக நினைத்து மனதார உச்சரித்தால் கட்டாயம் திருமணம் கைகூடிவரும். சிவாலயங்களில் தெற்கில் குருவும், வடக்கில் ஸ்ரீ துர்கையும் இருப்பதைப் பார்க்கலாமே! எனவே குருவின் பார்வை உள்ள நேரத்தில் ஸ்ரீ துர்க்கையின் அருளும் கிடைத்தால் போதுமே! திருமணக் கோலத் தோடு அவர்களிருவரையும், ஸ்ரீ சிவபார் வதியையும் சேர்ந்தே வணங்கும் வாய்ப்பினைப் பெறுவீர்கள். எந்தத் துறையில் உள்ளவர்களும், எக்குறையையும் போக்கிக் கொள்ள இதையே கடைபிடிக்கலாம். இந்த மாதத்தில் இந்த ராசியில் பிறக்கும் குழந்தைகள் கொடுத்து வைத்தவர்களாக இருப்பார்கள். கிரகங்கள் உன்னதமான நிலையில் இருக்கிறார்கள் அல்லவா?



## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 – ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர் பூசம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.

இராசிநாதனின் உச்ச சஞ்சாரம் உங்களுக்கு உகந்த நிலையில் உள்ளது. எனவே இந்த ராசியைச் சார்ந்த மாணவ மாணவிகள் முழு மனதுடன் கல்வியில் ஈடுபடுவார்கள். அதனால் பயனும் அடைவார்கள். வேலை தேடுபவர்கள் ஏற்கெனவே வேலையில் உள்ளவர்கள், மற்றும் தொழிற்சாலைகளில் பணிபுரிவோர் அனைவரும் தங்கள் முயற்சியில் வெற்றி அடைந்திட முடியும். புதனுக்கு அடுத்தபடி கேதுவால் தன லாபமும், உடல் நலமும் நன்கு அமையும். மற்றபடி 10-ந் தேதி முதல் செவ்வாய்க் கிரகத்தால் சில நன்மைகள் உண்டாகும். செவ்வாய் ஆட்சியிலிருந்து அவரது திசை நடப்பவர்களுக்கு வீட்டுமனை அல்லது விவசாயியானால் மேலும் சில ஏக்கர் நிலங்கள் வாங்கும் யோகம் உண்டு. காவல் துறை, சுங்கத் துறையில் வேலைக்காகக் காத்து நிற்பவர்களுக்கு அதற்கான உத்திரவு வரப் பெறலாம். இரசாயன எரிபொருள் துறையினர், மற்றும் தங்கம், செம்பு, பித்தளை வியாபாரிகள் காவல் துறையினர்க்கு இலாபகரமான நேரமாகும். பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் சட்டத்திற்குப் புறம்பான எதையும் செய்பவர்களுக்கு சனீஸ்வரன் தோல்வியைத் தந்து தொல்லைக்கும் ஆளாக்கலாம். சுக்கிரன் முதல் வாரத்தில் நீச்சத்திலிருந்தாலும், ராசிநாதன் உச்சம் பெற்றதன் காரணமாக ஒரு வீடு வாங்கும் நிலை உண்டாகும். அல்லது சுபநிகழ்ச்சிக்கும் வாய்ப்பு வரலாம். அதன் பிறகு மாதத்தின் கடைசிக்குள் மேற்படி முயற்சிகளில் சுக்கிரன் அருளால் வெற்றி உண்டாகும். குறிப்பாக இந்த இராசிக்காரர்களுக்குக் கூடுதலான ஆதாயம் கிடைக்க வேண்டிய காலகட்டம். வெளிநாட்டுப் பிரயாணம் ஒன்றுக்கு ஏற்பாடு ஆகும். அதனால் நிரந்தரமான ஆதாயம் உண்டு. தந்தை சம்பந்தப்பட்ட உறவினர்களுக்கு இராகுவால் சோதனை இருக்கலாம். எனவே விநாயகருக்கும், துர்க்கைக்கும், இராகுவுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. கூடுதலான நன்மை பெற விரும்பும் தொழிலதிபர்கள் ஸ்ரீ சுதர்ஸன மகாஹோமத்தை விமரிசையாகச் செய்து தம் முயற்சிகளில் அளப்பறிய வெற்றியை அடையலாம்.



## கடக ராசி :

புனர்பூசம் 4 - ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

குருவும், சுக்கிரனும்தான் அனுகூலமான நிலையில் உள்ளனர். சூரியன் மாதத்தின் முற்பகுதியில் உதவுவார். அதனால் கட்டிடச் சம்பந்தமான பணிகளில் ஈடுபட்டுள்ளவர்களுக்குக் கூடுதலான ஆதாயம் உண்டு. குரு தன் இராசிக்குப் போகு முன் இந்த ராசிக்காரர்களுக்கு எதிர்பாராத தனலாபத்தையோ அல்லது முயற்சித்துக் கொண்டுள்ள இனங்களில் எதிர்பார்க்கும் ஆதாயத்தையோ தரலாம். கடகம், செவ்வாய் கிரகத்திற்குப் பலவீனமான இராசியானதால், அவரது வீட்டிலிருந்து பார்க்கும் குரு, அந்த ராசிநாதனாகிய செவ்வாயுடன் சேரும்

சமயமான, மாதத்தின் பிற்பகுதியில் குருமங்கள யோகம் எனப்படும் யோகத்தைத் தர இருப்ப தால் பொருளாதாரப் பிரச்சினை தீர வழி உண்டு என நம்பலாம். மற்றபடி வேறு எந்த கிரகமும் உதவும் நிலையில் இல்லை. புதன் கெடுக்க மாட்டார். ஆனால் இராசிக்குக் குருபார்வை இருப்பதால் கெடுதலும் இல்லை. திருமலைக்குச் சென்று திருவேங்கடவனைத் தரிசித்து, உடன் பழனிக்கும் சென்று முருகனை யும் தரிசித்து வருவது நல்லது. அத்துடன் ஸ்காந்தத்தில் காசி காண்டத்தில் உள்ள அபி லாஷாஷ்டகம் எனும் ஸ்தோத்திரத்தை, முறைப் படி வேத அத்யாயனம் செய்த ஒருவரை அணுகி படிக்க, அவர் மூலமாக கஷ்டங்களும் நிவர்த்தியாகி, ஸந்துஷ்டி அடைய முடியும். முயன்று பாருங்களேன். அதுவும் வளர் பிறையில் பஞ்சமியன்று ஆரம்பிப்பது நல்லது. அத்துடன் ஆதாயத்தையும் தரும்.



## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1- ஆம் பாதம்.

உங்களிடம் உதவி பெற்ற வர்களாலேயே, வேண்டியவர் களாலேயே அலைச்சல், மன உளைச்சல், வேதனை என ஸகலதிக்குகளிலிருந்தும் சோதனை அம்புகளை எதிர்கொள்ள வேண் டிய காலகட்டம். எனினும் வலுவுள்ள உச்ச புதனை ராசிநாதன் சேர்ந்ததுடன், சுக்கிரன் ஏறக்குறைய மாதம் பூராவும் ஆட்சியில் அனு கூலமாகவும் சஞ்சரிப்பதையும் கவனிக்க வேண் டும். ராகு மூன்றாமிடத்தில் ஆட்சி பெறும் சுக் கிரனுடன் இருப்பதால் எத்தகைய எதிர்ப் பையும் சமாளித்து, சவால்களை முறியடித்து அக்கினிப் பிரவேசம் செய்து வெளிவந்த அசோகவனத்துச் சீதையாக விளங்குவீர்கள். அத்துடன் உங்கள் ஜென்ம ஜாதகத்தில் குருவோ, சனியோ, சூரியனோ ஆட்சியில் இருந்து விட்டால் வக்ர சனியைப் பற்றியோ அல்லது மற்ற பாதகமான கிரகங்களைப் பற் றியோ கவலைப்பட வேண்டியதில்லை. புத் திரர்களால் சற்று சோதனைகளும் ஏற்படலாம். மற்றும் வளர்த்த கடாவே மார்பில் பாயும் நிலை பாதம் பணிந்தவர்களே காலை வாரி விடும் காலம் என மாதத்தின் பிற்பகுதியில் நீச்சம் பெறும் சூரியன் உங்கள் கீர்த்திக்கும், செல்வாக்கிற்கும் பங்கம் வரும்படி நிகழ்ச்சி களை ஏற்படுத்தினாலும் செல்வாக்கு ஸ்தானத் தில் உள்ள வித்யாகாரகனாகிய புதன் உங்களது வாக்கு வன்மையால் அவற்றை மாற்றிடவும், துலாசுக்கிரன் உங்களுடைய ஆப்த நண்பர் களைக் கொண்டும் மற்றும் சுகஸ்தானத்தில் ஆட்சி பெற்றுள்ள செவ்வாய், உங்களுக்கே



நான் ஒரு வீட்டு கிரஹப்பிரவேசத்துக்குப் போயிருந்தேன். சமையல் அறையில் ஒரு ஓரத்தில், கருங்கல் ஒன்று 1 அடிக்கு 1 அடி கல் பதித்திருந்தார்கள். மொசைக் கல்லுக்குப் பதிலாக. எதற்கு என்று கேட்டேன். பெருங்காயம், மற்றும் கஷாய சாமான் ஏதாவது பொடி செய்ய என்று சொன்னார்கள். நிறைய வீடுகளில் அம்மி, ஆட்டுக்கல் இருப்பதில்லை. மொசைக் கல் என்றால் உடைந்து விடும்.

ஆர். பார்வதி

உரிய மனோதிடத்தை உறுதியுடன் நிலைக்கச் செய்தும், உங்களுக்கு ஏற்பட இருந்த சரிவை சரிசெய்வதுடன் மேலும் புகழுடன் விளங்கும் படி செய்வார்கள். ஆனால் நிதானம், சகிப்புத்தன்மை அளந்து பேசுதல், அல்லது சமயத்தில் மௌனம் அனுஷ்டித்தல் போன்றவற்றை நீங்கள் கடைபிடிக்க வேண்டியது காலத்தின் கட்டாயமாகும். அதற்கு 9-ல் உள்ள கேதுவிற்கு அதிதேவதையான விநாயகரின் திருஉருவம் பதித்த டாலர் ஒன்றை எப்போதும் அணிவதுடன், பிரணவமந்திரத்துடன் கூடிய அவரது நாமத்தைக் கூறிக் கொண்டிருப்பது நல்லது. ஹேரம்ப கணபதிக்கு உரிய ஓமமும் செய்யலாம். மகத்தில் பிறந்தவர்கள் ஜகத்தை ஆள்வார்கள் என்றால் பூரத்தில் பிறந்துள்ளவர்கள் பூலோகத்தையும், உத்திரத்தில் பிறந்தவர்கள் உலகையும் ஆளலாமே! ஏனெனில் இந்த நட்சத்திரங்களில் ராசியில் சூரியனைத் தவிர வேறு யாருக்கும் உச்சம் அல்லது நீச்சம் பெறும் தகுதியைத் தராமல் தாமே ஆட்சியில் இருப்பவரல்லவா! எனவே கவலையை விடுங்கள். கடமையை ஆற்றுங்கள். இது எத்துறையினர்க்கும் எந்நிலையில் இருப்பவர்க்கும் பொருந்தும்.



## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

இராசிநாதனும், ஆயுள் காரகனாகிய சனீஸ்வரனும், சுக்கிரனும் இந்த ராசிக்காரர்களுக்கு உதவும் நிலையில் உள்ளனர். அதனால் குடும்ப சுகம், தொழில் நிலை, உத்தியோக நிலை மற்றும் கல்வியில் முன்னேற்றம் நன்கு அமையும். இது எத்துறையினர்க்கும், எப்பாலவர்க்கும் பொருந்தும். வீடு வாங்கலாம். அதற்குரிய காலம் கனிந்து வந்துள்ளது. எனவே நடுத்தர வகுப்பினர் அதற்குரிய முயற்சியைச் செய்யலாம். அரசு உதவியும் ஒருசிலருக்குக் கிடைக்கும். அங்காரகனாலும், சுக்கிரனாலும் வீட்டில் சுபநிகழ்ச்சி நடப்பதற்கான சூழ்நிலை உருவாகியுள்ளது. எனவே தட்டிச் சென்ற திருமணம் நடக்கும். வெளிநாட்டு வேலை வாய்ப்பிற்குக் காத்து நிற்பவர்களுக்குக் காரியம் கைகூடி வரும். வீட்டில் பெண்களுக்கு அவர்கள் எதிர்பார்க்கும் அபிலாஷைகள் நிறைவேறும். அது நகை விஷயமாகவும் இருக்கலாம். அல்லது நீண்ட தூர யாத்திரையாகக் கூட இருக்கலாம். மழலைச் செல்வத்திற்காக மனம் வருந்தி நிற்பவர்களுக்குப் புத்திர பாக்கியம் ஏற்படலாம். இரண்டில் உள்ள இராசி குடும்பத்தில் சிறு பிரிவினை ஒன்றை உண்டாக்கப் பார்க்கலாம். உடல்நிலை சற்றே பாதிக்கும் வாய்ப்பும் உண்டு. குடிக்கும் பானமும், சாப்பிடும் சாப்பாடும் கூட ஒவ்வாமையை, அலர்ஜியை ஏற்படுத்தும் வாய்ப்பு உண்டு. எனவே கூடியமட்டும் ஆகார விஷயத்தில் வெளியே சாப்பிடும் போதோ, தண்ணீர் அருந்தும் போதோ அது உங்களுக்கு ஏற்குமா எனக் கவனித்து எடுத்துக் கொள்வது நல்லது. அரசுப் பணி வங்கிப் பணி மற்றும் உயர் பதவியில் இருப்பவர்கள் தமது அலட்சியம் காரணமாக வீண் தொந்தரவு உண்டாகக் குரு காரணமாகலாம். அதனால் பதவிக்குக் கூட சற்று அபகீர்த்தி வரலாம். எனவே ஸ்ரீ ஆஞ்சநேயரையும், ஸ்ரீ ராகவேந்திரரையும், அல்லது உங்களது இஷ்ட தெய்வத்தையும் நினைத்து அன்றாடப் பணிகளைத் தொடங்குவது நல்லது.



## துலா ராசி :

சித்திரை 3, 4 – ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.

மாதம் பூராவும் ஏறத்தாழ ஆட்சியில் உள்ள சுக்கிரனால் சுபநிகழ்ச்சிக்கு இடம் உண்டு. குருவும் அதற்கான அருளையும், பொருளையும் பெறத்தக்க நிலையை உருவாக்குவார். பின் என்ன, காத்து நிற்கும் மகனுக்கோ, மகளுக்கோ திருமணம் நடத்த வேண்டியதுதானே! உபநயனம் ஒன்றுக்குக் கூட உகந்த நேரமே.

புதனால் கல்வி சம்பந்தமான சுபவிரயம் ஒன்று ஏற்படும். அது உங்கள் குழந்தைகளின் மேற் படிப்புக்காகச் செய்யும் செலவாகக் கூட இருக்கலாம். அல்லது குறிப்பிட்ட வேலைக்குச் செல்வதற்குத் தேவையான பயிற்சி பெற ஆகும் செலவாகக் கூட இருக்கும். சனீஸ்வர சஞ்சாரத்தில், உத்தியோக மாற்றம் ஏற்பட்டு, குடும்பத்தைச் சிறிது காலம் பிரிந்திருக்க வேண்டி வரலாம். 7-ல் கேது இருப்பதால் வேலை செய்யும் இடத்திலோ, பிரயாணம் செய்யும் போதே பொருளைப் பறிகொடுத்தல் போன்ற நிலை வரலாம். அதனால் தேவையில்லாத வற்றைக் கூட எடுத்துச் செல்லாதிருப்பது நல்லது. பெண்களானால் குடையையோ, கூட எடுத்துச் செல்லும் கூடையைக் கூட மறந்து விடலாமே? இது ஆண்களுக்கும் கூட பொருந்தும். அது போலவே வண்டி ஓட்டுபவர்களும் கவனமுடன் செயல்படுவது நல்லது. காரில் செல்லுபவர்கள் காலில் சற்று கவனம் இருக்கட்டும். இடம் காலம் தெரியாது, கவனக் குறைவால் மாற்றி மிதித்து விடக் கூடாதே என்பதற்காகவே இந்த எச்சரிக்கை. மற்றபடி விபரீதம் ஒன்றும் ஏற்பட்டு விடாது. ஏனெனில் ஆட்சி அங்காரகனுடன் குருவின் சேர்க்கை இரண்டில் இருப்பதால் குருவின் அருள் உண்டு. சிவஸ்தலம் சென்று துர்க்கை, தக்ஷிணா மூர்த்தி, விநாயகர், சுப்ரமணியர் ஆகியவர்களை முறைப்படி தரிசிப்பது நல்லது.



## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

இலாபஸ்தானத்தில் உள்ள உச்ச புதன் எதிலும் வெற்றி, எப்படியும் இலாபம் என்ற நிலையில் இருக்கிறார். எனவே கல்வி, கலை, தொழில், உத்தியோகம், வியாபாரம், காவல் போன்ற அனைத்துத் துறையைச் சார்ந்த ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் நன்மை தருகின்ற மாதம். மாதத்தின் முற்பகுதியில் கீர்த்திக்கும், பாராட்டுக்கும் கூட சூரியன் உங்களுக்கு உதவ இருக்கிறார். தரகு வியாபாரமாகவோ, ஷேர் மார்க்கெட் சம்பந்தமான துறையிலோ இருந்தால் எதிர்பாராத தனலாபம் கிடைக்கும். அரசுப் பணியிலோ வங்கித் துறையிலோ இருந்தால் பதவி உயர்வு வரலாம். ஜோதிடக் கலை அறிந்தவரானால் நல்லதொரு மவுசு ஏற்படும். நடிகரானால் உங்களை நாடி ஒப்பந்தங்கள் வரும். வீடு வாங்கும் அல்லது பழையதை விற்று, புதிதாகக் கட்டும் வாய்ப்பும் உண்டு. கேது கொடுக்கும் நிலை. ஆனால் 12-ல் ராகு இருந்தாலும் சுக்கிரன் ஆட்சி பெற்றதால் கெடுக்க மாட்டார். புத்திரோற்பத்திக்குக் கூட வாய்ப்பு ஏற்படலாம். ஆட்சியில் உள்ள சனி கூட தனது பார்வையை உங்கள் ராசி மேல் செலுத்தினாலும், மாதத்தின் பிற்பகுதியிலிருந்து ஆட்சிக்கு வந்துள்ள செவ்வாய் குரு சம்பந்தம் காரணமாக கோர்ட், நில விஷயம், மற்றும் எந்த வில்லங்கத்திலும் உங்களுக்கு வெற்றியைத்தான் தர வேண்டும். ஏனெனில் செவ்வாயும் சனியைப் பார்ப்பதால் நற்பயன்தான் இத்தகைய பார்வையால் கிடைக்கும் என எதிர்பார்க்கலாம். இந்த மாதம் கூடுதலான நன்மையைத் தர வேண்டும். தசாபுக்திகளுக்கு ஏற்பவும், ஜாதகத்தில் கிரக அமைப்புகள் காரணமாகவும் சற்றே பலன்கள் மாறலாம். விரிஞ்சிபுரத்திற்குச் சென்று அங்குள்ள இறைவனை வழிபடுவது நல்லது.



## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

இராசிநாதன் 12-ல் இருப்பதாலும், 11ல் சுக்கிரன் ஆட்சி பெற்றிருப்பதாலும் சுபவிரயம் ஒன்றுக்கு வாய்ப்பு உள்ளது. அது திருமணம் ஒன்றின் காரணமாகவும் ஏற்படலாம் அல்லது புது மனை புகுவிழா, காதணி விழா போன்றவைகளில் ஏதாவது ஒன்றாகவும் ஏற்படலாம். புதன்



அவல் உப்புமா செய்யும் போது அவலை தண்ணீர் தெளித்து நனைக்காமல், அவல் மூழ்கும் அளவு தண்ணீர் ஊற்றி, அதை வடித்து வைத்து விட சிறிது நேரத்தில் பொல, பொலவென்று ஆகி விடும். இதனால் அதிலுள்ள தூசிகளும் போய் விடும்.

— பூர்ணிமா




பண்டிகை காலங்கள், கொண்டாட்ட
நேரங்கள். மகிழ்ச்சி மத்தாப்புக்கள்
மின்னி மினிரும் நேரங்கள். கிரிஜாவின்
கண்ணைப் பறிக்கும் அழகிய, கையில்
நெய்த அற்புதப் படைப்பை அணிந்து
விழாக் கொண்டாடுங்கள். ஒளிமயமான
ஆனந்த நேரங்களுக்கு உங்கள் தோற்றம்
புதுப் பொலிவும் பிரகாசமும் ஊட்டிடும்.

Girija™

# அழகிய பட்டில் எழில் நவீனங்கள்

கிரிஜா சாரீஸில் மட்டும் உள்ள சிறப்பு அம்சங்கள்: சில்க்லைன் பினிஷ் • சில்க்கார்டு பாதுகாப்பு • பேர்ல் டையிங் • பிரீமியம் பார்டேஜ் • டிசைனர் குஞ்சங்கள் • 300க்கும் மேற்பட்ட டிசைன்கள்.

கிரிஜா வகைகள்: பேர்ல் கிரேப்ஸ் • கிரிஸ்டல் கிரேப்ஸ் • அபூர்வா ஹாண்ட்லூம்ஸ் • அபூர்வா கத்தான்ஸ் • தாமரா. • பேர்ல் பிரிண்ட் கொரலிக்ஸ் • பிரிண்டட் சில்க்ஸ்.

Girija sarees available at all leading stores in India. And overseas at: • M/s. India Saree Palace, New York, U.S.A. • M/s. Dakshaini Silks Pvt. Ltd., Singapore. • M/s. Al Khazana Trading Estt., Kuwait. • M/s. Partha's Textiles, Bur Dubai, UAE. • M/s. Mayuri Boutique, Bahrain. • M/s Chitra's Collection, Washington, U.S.A. • M/s. Gopura Gnanam, Munster, West Germany.



– ஆர். பத்மாவதி

உங்களது தாய்மாமன் வகையினர் மூலம் உங்களுக்கு ஏதாவது உதவி கிடைக்கும்படி செய்யலாம். உங்கள் குழந்தைகளின் கல்வி நலன் நன்றாக இருக்கும். இராகுவால், சந்திரன் உச்சம், ஆட்சி பெறும் நாட்களில் எதிர்பாராத தனலாபத்திற்கு வாய்ப்பு ஏற்படும். சமுத்திரம், ஆகாய யாத்திரைக்கும் வாய்ப்பு உள்ளது. நிதித் துறை, நீதித்துறை, மற்றும் காவல் துறையினர்க்கு முன்னேற்றம் உண்டு. மாதம் பூராவும் சூரியனின் அருள் பரிபூரணமாக இருப்பதால் தந்தையின் உடல் நலம் நன்றாக அமையும். அரசியலில் உள்ளவர்களுக்கு ஆதாயம் உண்டு. கலைஞர்களுக்கும் நடிப்புத்திறன் கொண்டவர்களுக்கும் ஏற்றமானதொரு சூழ்நிலை உருவாகும். இதுவரை இருந்த ஒருதலை பக்கம் இருந்த வலியும், கண்களில் ஏற்பட்ட கோளாறும் சரியாகும். தோட்டக் கலைஞர்களுக்கும், வாசனைத் திரவியம் விற்பவர்களுக்கும் உயர்ந்த நிலை உண்டு. ஏற்றுமதி வியாபாரம், ஷேர் மார்க்கெட், நிதி நிறுவனத்தார் இவர்களுக்கெல்லாம் இலாபகரமான காலகட்டம் இருப்பினும் தாய்வழிப் பாட்டனாரின் உடல்நலம் பாதிக்கப்படலாம். பொருளாதாரம் சம்பந்தப்பட்டவரை ஓரளவுக்கு திருப்தி தரும் மாதமாக இருக்கும்.



## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

குருவின் சஞ்சாரம் குழந்தைகளின் கல்வி முன்னேற்றத்திற்கு உதவும் நிலையில் அமைந்துள்ளது. இராசிநாதனின் அருளும் உண்டு. இருப்பினும் குடும்பத்தில் பெண்களால் சிறு தொல்லைகள் ஏற்படலாம். அவமானம் கூட ஏற்பட வாய்ப்பு உண்டு. எனவே அதற்கேற்ப நிலைமையை சமாளிக்க வேண்டும். உங்கள் கீர்த்திக்கு பாம்புக் கிரகங்களால் பங்கம் வரலாம். உங்களை நாடி வரும் ஒரு புது உறவால், சற்று சங்கடங்கள் விளையலாம். அரசியல்வாதியானால் சற்று அமைதியைக் கடைப்பிடிப்பது நல்லது. சந்தர்ப்பம் சரியாக அமையவில்லை. உச்ச புதனால் வியாபாரிகளுக்குச் சற்று இலாபம் கூடுதலாக வரலாம். அரசுப் பணியில் உள்ளவர்கள் மேலதிகாரிகளிடம் எதிர்ப்பைக் காட்ட வேண்டாம். மொத்தத்தில் இந்த மாதத்தில் நீங்கள் சற்று சகிப்புத்தன்மையுடன்தான் இருக்க வேண்டும். ஒரு பழமொழி கூறலாமா? யானை குழியில் விழுந்தால், தவளை கூடத் தாவி அதை உதைக்குமாமே! அந்த நிலை காணப்படுவதால் பேசாமல் கணநாதனையும், ஆஞ்சநேயரையும் நினைத்துக் கொள்ளுங்கள். மற்றபடி அனுபவித்துக் கழிக்க வேண்டிய மாதம். செவ்வாய், மாதத்தின் பிற்பகுதியில் எதையும் சமாளிக்கும் திறனைத் தர இருக்கிறார். வேலுண்டு வினையில்லை. திருமுருகாற்றுப்படையை நம்பிக்கையுடன் படித்தால் தும்பிக்கையானின் தம்பி தன் அபயகரத்தால் கண்டிப்பாக ஆதரிப்பார். கவலையை விடுங்கள்.



## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 – ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 – ஆம் பாதங்கள்.

இராசிநாதன் இராசியில் ராஜா-9ல் உள்ள சுக்கிரன் சுகம் தருகின்ற நிலை. அஷ்டமத்தில் உச்ச புதன் – சூரியனுடன் புத ஆதித்திய யோகத்தைத் தந்தாலும், பண விரயம் அதிகம் ஏற்படலாம். 3-ல் உள்ள கேது குமரப் பெருமானின் கருணையைப் பெற ஆவன செய்வார். எனவே செந்தில் வேலவன் சேவடிகளைத் தொழுங்கள். சிரமங்கள் தானாக மறையும். அங்காரகனால் உடம்பில் தோல் பகுதியில் ஒவ்வாமை எனும் அலர்ஜியை உண்டாக்கலாம். மருந்துகளையோ, மாத்திரைகளையோ நன்கு கவனித்துச் சாப்பிடுங்கள். பிரயாணத்தின் போது அடுத்தவர்களைக் கவனிப்பது விட்டு, உங்கள் பொருள் மேல் கவனம் செலுத்துங்கள். குழந்தைகளிடமிருந்து அதிகம் எதிர்பார்க்க வேண்டாம். கண்டிக்கவோ, புத்தி கூறவோ ஆரம்பிக்காதீர்கள். அதற்கு மாறாக அன்பையும் அரவணைப்பையும் காட்டித் திருத்த முயலுங்கள். எந்த நிலையிலும் பொறுமையை விட்டு விடாதீர்கள். கூட்டாளிகளிடம் இந்த மாதம் கணக்கைக் கேட்டு விட வேண்டாம். காலகட்டம் சரியாக இல்லை. அது போலவே அரசியலில் உயர் பதவியில் உள்ளவர்களும் தங்கள் அதி

காரத்திற்கு ஏற்ப மற்றவர்களைக் கணக்கைக் கேட்டீர்களானால், உங்கள் பதவிக்கே உலை வைத்து விடலாம். இந்த மாதத்தில் இந்த இராசியில் பிறக்கும் குழந்தைகள் யோகம் செய்தவையாக இருக்கும். புதன் உச்சம், செவ்வாய், சனி, சுக்கிரன் ஆட்சி மற்றபடி. துர்கா ஸ்தோத்திரத்தைப் படிப்பதுடன் சனீஸ்வர தலயாத்திரை மேற்கொள்வது நலம்.



## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

இராசிக்கு குருவின் பார்வை உண்டு. உச்சபுதனும் சூரியனுடன் சேர்ந்தே பார்க்கிறார். விரயச் சனி ஆட்சியில் எட்டில் உள்ள சுக்கிரன் சுகத்தையும் வாழ்க்கை வசதியையும் தர இருக்கிறார். எதிர்பாராத தனலாபம் ஒன்று வரலாம். எனவே அதை எதிர்பார்க்காதீர்கள். அதனால் வராமலேயே போகலாம். இதைக் கண்டு சிலர் லாட்டரி கடையை முற்றுகை இட்டு விடக் கூடாதே என்பதற்குத்தான் இந்த எச்சரிக்கை. வருவது தானாக, அதுவும் சந்திரன் நல்ல நிலையில் நாட்களில் வரலாம். இரண்டில் உள்ள கேது உங்களிடம் திருடர்களுக்குக் காதல் உண்டாக்கும்படி செய்து விடலாம். அதன் பயன் எப்படி இருக்கும் என்பது தெரியாதா என்ன? அதனால் வங்கிப் பணியாளர்கள் குறிப்பாக நிதியைக் கையாளுபவர்கள் தங்களுக்கு வேண்டியவர்கள் வந்தால் கூடக் கடமையில் குறியாக இருங்கள். சில முயற்சிகளில் தடை ஏற்படலாம். மனதைத் தளர விடாதீர்கள். வேறு நாட்டுக்குச் செல்லும் வாய்ப்பும் உண்டு. அதனால் நன்கு திட்டமிட்டுத் தகுந்த உத்திரவுகளுடன் செல்வது நல்லது. இந்த இராசிப் பெண்கள் எழுதும் பரீட்சைகள் எதுவானாலும் வெற்றி பெறுவார்கள். குருவின் அருள் அப்படி அமைந்துள்ளது. எப்போதும் போல் அமைதியாகக் கடமை ஆற்றுவது நல்லது. எந்த முயற்சிக்கும் ராகு தடைபோடும் நிலை. எனவே அனுபவித்துக் கழிப்பதுடன் தக்ஷிணாமூர்த்தியை நினையுங்கள். எனவே, இந்த இராசிக்காரர்களும் கோளறு பதிகத்தைப் பொருளுணர்ந்து மானசீகமாகப் பரமனின் திருக்கோலத்தை உள்ளத்தில் பதியவைத்து ஒரே நிலையுடன் படியுங்கள். அனைத்தும் நலமாக முடியும்.

பின்குறிப்பு : பரிகாரத்தில் கூறப்பட்டுள்ள ஸ்தோத்திரங்களை ஒரு குருவின் மூலமாக அல்லது வேத வித்தகர் மூலமாக உபதேசம் பெற்றே பாராயணம் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் சப்தத்தில், உச்சரிப்பில் வித்தியாசம் இல்லாமல் நல்ல முறையில் சொல்லப்பட்டு பயனும் கிடைக்கும்.

- ஜெயலட்சுமி கிருஷ்ணன்

---



சுமார் ஏழரை வருடங்களுக்கு முன்பு குக்கர் வாங்கியிருந்தேன். சென்ற மாதம் மூடியில் கைப்பிடி அருகில் ரிவீட் லூசாகி இருந்தது என்று கடைக்காரரிடம் காண்பித்தேன். அதை ரிப்பேர் செய்து விட்டு இந்த குக்கரை இனிமேல் உபயோகிக்கக் கூடாது. உபயோகித்து ஏதாவது ஆனால் கம்பெனி பொறுப்பல்ல என்று கையெழுத்து வாங்கிக் கொண்டார்கள். அன்றைய தினம் வரை உபயோகித்துக் கொண்டுதான் இருந்தேன். என்ன காரணம் என்று கேட்டதற்கு மூடி, அடிபாகத்தின் மேலும் லாக்கிங் ஸிஸ்டம் தேய்ந்து விட்டது என்று சொன்னார்கள். தினமும் உபயோகிக்கும் நமக்கு எப்படித் தெரியும்?

அவசரத்திற்கு குக்கரை வைத்துவிட்டு வெளியில் வந்து விடுவேன். இவர்கள் கூறிய எச்சரிக்கையினால் சமையல் ரூமில் இல்லாமல் வெளியில் இருப்பேன். சரியாக ஒரு வாரத்தில் வெடித்து விட்டது. பிறகு வேறு குக்கரை வாங்கிக் கொண்டோம். எத்தனையோ வீடுகளில் 10,15 வருடங்களாக ஒரு குக்கரை உபயோகிக்கிறார்கள். எத்தனை பேருக்குத் தெரியும், லாக்கிங் ஸிஸ்டம் தேய்ந்து விட்டது என்று. என் தாயார் வீட்டில் என் உறவினர் வீட்டிலும் இப்படி வெடித்து இருக்கிறது. நாங்கள் நினைத்தது கேஸ் கட் டுப்ளிகேட்டாக இருக்கும் என்று. கம்பெனிகாரர்கள் விளம்பரம் செய்யலாம் இல்லையா? அல்லது free service camp வைத்து 5 வருடங்களுக்கு முன்பு வாங்கிய குக்கரைப் பார்த்து இது சரியாக இருக்கிறதா இல்லையா என்று சொல்லலாம் இல்லையா?

ஏ. ருக்மணி

அட்டைப்படக் கட்டுரை

# இதோ ஓர் அம்மா!



“ ‘பாபா’வின் காலடியில் சரணாகதி அடைந்தவள் நான். சரணாகதி அடைந்தவர்களுக்கு வாழ்க்கையில் எத்தனை பிரச்னைகள் வந்தாலும் தைரியமாக நிமிர்ந்து நிற்க முடியும் என்பதை அனுபவ பூர்வமாக உணர்ந்தவள் நான்...” என்கிறார் அமைதியாகக் கடலூரில் ஒரு பெரும் புரட்சியையே செய்து கொண்டிருக்கும் ஹேமா சின்னிகிருஷ்ணன். அறுபத்திரண்டு வயதான இவருடைய சாதனைகள் பிரமிக்க வைப்பவை. மனப்பக்குவமோ நாம் தெரிந்து கற்றுக் கொள்ள வேண்டிய அனுபவம்.

ஆந்திராவில் ராஜ்மண்ட்ரியில் 'செட்டில்' ஆன தமிழ்க் குடும்பம் இவருடையது. படிக்க நிறைய ஆவல் இருந்தாலும் இவரை இவர் பெற்றோர் படிக்க வைக்கவில்லை. திருமணம் செய்து வைத்து விட்டார்கள். ஆனால் இவர் விரும்பிய கல்வித் துறையின் அதிகாரியின் கரம்பிடித்தார். திருமணம், குழந்தைகள் என ஆனாலும் இவருடைய தெய்வநம்பிக்கை மாமியார் ரூபத்தில் பலித்தது.

“நீ நிறைய சமூகத்தில் பணியாற்றணும்னு விரும்பறே. செய். குடும்பத்தைப் பத்திக் கவலைப்படாதே” என்றாராம்.

தன் குடும்பம், தன் குழந்தை எனச் சுய நலம் இல்லாமல் நிறைய சமூக சேவை நாட்டம் கொண்ட இவரின் குழந்தைகள் அற்புதமாக வளர்ந்து பெரும் தொழிலதிபர்களாக ஆகியிருக்கிறார்கள். வெல்வெட், ராகா, மீரா என ஷாம்பூ ராஜ்ஜியத்தில் கொடிகட்டிப் பறக்கும் ராஜ்குமார், குமாரவேலு, ரங்கனாதன், வெளிநாட்டு வாணிபத்தில் தலைசிறந்து விளங்கும் அசோக் ஆகியோர் இவருடைய பிள்ளைகள்தான்.

“ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும் என்பார்கள். என் குழந்தைகள் அப்படித்தான் வளர்ந்தார்கள். எனக்கு சத்யசாயியின் மேல் அளவிட முடியாத நம்பிக்கை உண்டு. அவர் எப்போதும் என் குழந்தைகளைக் காப்பார் என்பதில் கொஞ்சமும் சந்தேகம் இல்லை. அவர்களுக்குத் தேவையான கடமைகளைத்தான் செய்தேன். குழந்தைகள் இன்று நன்றாக இருக்கிறார்கள். ஆனாலும் என் வழி இன்னும் தொடர்ந்து கொண்டிருக்கிறது...”

என்கிறார். சிறு வயதில் படிக்க முடியாத குறையைப் பிறகு தீர்த்துக் கொண்டார். இசை





யில் பி.ஏ. பட்டம் பெற்றார். சித்த மருத்துவப் படிப்பு முடித்தார். இப்போது வர்மா பயின்று கொண்டு இருக்கிறார்.

''இதெல்லாம் என்னுடைய அறிவை வளர்த்துக் கொள்ள நான் கற்றுக் கொண்டவை. ஆனால் மற்றவர்களுக்கு நான் என்ன செய்யப் போகிறேன் என்பதை யோசித்ததில் தான் 'பாபா மெட்ரிக் ஹையர் செகண்ட்ரி ஸ்கூல்' தோன்றியது. ஆதரவற்ற பெண்களுக்காக 'கலாமந்திர்' ஆரம்பித்தேன். கடலூர் மாவட்டத்தில் நல்ல மண்வளம் உண்டு. அதைக் கொண்டு பொம்மைகள் செய்ய அவர்களுக்குக் கற்றுக் கொடுத்து அவற்றை பூம்புகார் போன்ற இடங்களுக்குத் தருகிறேன். நாங்கள் செய்யும் பொம்மைகளில் ஸ்ரீ ராகவேந்திரர், ஹேப்பிமேன் பொம்மைகளுக்கு நல்ல 'டிமாண்ட்' இருக்கிறது. நான் தெய்வ பொம்மைகள், தேசபக்தகளான தலைவர்களின் பொம்மைகளையும்தான் செய்யச் சொல்கிறேன்.

'தெய்வீக பொம்மைகள்' என்று வரும் போது ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன்...'' என்று ஆரம்பிக்கிறார் தூய வெள்ளுடையும், ஜப மாலையும் அணிந்துள்ள ஹேமா.

"ஆன்மீகம் மாதிரி பெண்களுக்கு மனதுக்கு நிம்மதியைக் கொடுப்பது வேறு எதுவும் இல்லை. நான் முன்பே சொன்னது போல இறைவனின் பாதத்தில் சரணாகதி அடைந்து, நம் கவலைகளை எல்லாம் அவன் காலடியில் கொட்டி விட்டு அவன் பார்த்துக் கொள்வான் என நிம்மதியாகக் கடமையைச் செய்தால் எவ்வளவோ டென்ஷன், துரதிருஷ்டவசமான சம்பவங்களைத் தவிர்க்கலாம்.

குறிப்பாக வயதானவர்கள் இந்த மனப் பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும். என் நான்கு பையன்கள் சென்னையில் நன்றாக இருக்கிறார்கள். அவர்களை விட்டு விட்டு நான் இங்கு இருக்கிறேன். ஆனால் தனியாக அல்ல. ஆதரவற்ற பெண்களும், பொருளாதாரத்தில் நலிந்த பெண்களும் என்னைச் சுற்றி இருக்கிறார்கள். எனக்குத் தெம்பு, மனத் தெம்பு இருக்கிறது. என்னால் முடிந்ததைச் செய்கிறேன். வயதானவர்கள் உடல்நலம் சரியில்லை அப்படி இப்படி என இல்லாமல் மன ஆரோக்கியத் தோடு இருக்க வேண்



டும். இந்த அடிப்படையில் நான் முதியோர் இல்லம் கட்ட வேண்டும் என்று திட்டமிட்டு இருக்கிறேன். ஆன்மீகம் பற்றிச் சொன்னேனே...'' என்று விட்ட இடத்திற்கு வந்தவர்,

''நவராத்திரி போன்ற பண்டிகைகள் எல்லாம் ரொம்பச் சிறப்பானவை. நான் பஞ்சமுக விளக்கோடு கூடிய விநாயகர் செய்கிறேன். இது என்னுடைய ஐடியாதான். இதில் விளக்கேற்றித் தொழுது வந்தால் சரஸ்வதியும், லட்சுமியும் தாண்டவமாடுவதை நானே உணர்ந்திருக்கிறேன். இது வெறும் மண் பொம்மை தான். ஆனால் இந்த வழிபாட்டில் கிடைக்கும் பலன் நிறைய. இது என் அனுபவம் மட்டுமல்ல, பலருடைய அனுபவமும் கூட. தெய்வ நம்பிக்கையோடு விளக்கேற்றித் தொழுபவரின் வேண்டுதல்கள் பொய்த்ததாகச் சரித்திரமே இல்லை...''

எனும் திருமதி. ஹேமா ஆதரவற்ற பெண்களைத் தானே வைத்துக் கொண்டு ஆதரிக்கிறார். தங்களால் வளர்க்க முடியவில்லை என இங்கே கொண்டு வந்து குழந்தைகளை வளர்க்கிறார். இவர் தூக்கி வைத்துக் கொண்டு (அட்டைப் படத்தில் இருக்கும் குழந்தை) இருக்கும் அழகுக் குழந்தை இவர் பேத்தியோ என நினைத்த போது இல்லையாம். என்னால் வளர்க்க முடியவில்லை எனக் கணவனால் கைவிடப்பட்ட ஒரு பெண் கொண்டு வந்து போட்டு விட்டுப் போன குழந்தையாம்! இவர்களுக்கென்று தனியாக அனாதை ஆசிரமம், அபலை இல்லம் என நடத்தவில்லை இவர். வீட்டிலேயே தன்னுடனே இந்தக் குழந்தைகளையும் வளர்க்கிறார்!

இதற்கெல்லாம் வருமானம் எப்படி?

''பள்ளியிலிருந்து வரும் வருமானம் பள்ளிக்கே செலவாகிறது. 'கலாமந்திர் மல்ட்டி பர்பஸ் கோ-ஆபரேடிவ் காட்டேஜ் இண்டஸ்ட்ரியல் சொஸைட்டி'யில்தான் பொம்மைகள், மூங்கில் சேர்கள் எல்லாம் செய்கிறோம். அதே போல ஆதரவற்ற பெண்களை வைத்துப் பிரிண்டிங் பிரஸ்ஸும் நடத்துகிறேன். கைவினைப் பொருட்களை காதி கிராஃப்ட் போன்ற நிறுவனங்கள் வாங்கிக் கொள்கிறார்கள். ஆதரவற்ற பெண்கள் பலர் இங்கு வந்து தங்குகிறார்கள். குழந்தைகள் இருக்கிறார்கள். சமயத்தில் ஓரளவு நிதிப் பற்றாக்குறை ஏற்பட்டு விடும். அப்போதெல்லாம் என் மகன்கள் நிறைய உதவி செய்கிறார்கள்...'' என்று பெருமிதத்தோடு கூறுகிறார்.

இந்த வயதான பெண்மணியைப் பார்க்கும் போது பிரமிப்புதான் ஏற்படுகிறது. மிகவும் எளிய தோற்றம். இனிய பேச்சு. அயராத உழைப்பு. இவர் சொன்ன இத்தனைகளோடு இவர் வேலைகள் முடிந்து விடவில்லை. சாரணர் இயக்கம், பெண்கள் ஹாக்கி அசோசியேஷன், இலவச சட்ட உதவிக் குழு எனப் பல அமைப்புக்களிலும் பல்வேறு பொறுப்புகளை வகித்து வருகிறார். பிரமித்துத்தான் போனோம். ஆனால் அவரோ எளிமையாகச் சிரிக்கிறார்.

''நான் தெய்வநம்பிக்கையோடு இதையெல்லாம் செய்கிறேன் என் கணவர் இருந்த போது என்னை நிறைய ஊக்குவித்தார். இப்போதும் அமரராக இருந்து எனக்கு வழிகாட்டுகிறார். நான் அமைதியாக செயல்பட்டுக் கொண்டு இருக்கிறேன். ஒவ்வொருவரும் மற்றவரைக் குறைசொல்வதை விட்டுத் தங்களால் இயன்றதைச் செய்ய வேண்டும். இந்த எண்ணத்தைத் தான் நான் எல்லோருக்கும் சொல்ல விரும்புகிறேன்...'' என்கிறார் அமைதியாக ஒரு பெரும் சமூகப் புரட்சியை நடத்திக் கொண்டிருக்கும் ஹேமா சின்னிகிருஷ்ணன்.

**- லீனா**

படங்கள் : **ராஜூநாராயண்**



• இவர் ஆசியுடன் நடைபெறும் 'பட்ஸ் & ப்ளாசம்' பள்ளிக் குழந்தைகள்


டீ-வேக்ஸிங்!
இதன் மாபெரும் சிறப்பு!
Sunline
SUPER-REFINED SUNFLOWER OIL
சன்லைன்
• தெளிவானது மற்றும் இலேசானது
• சால்வெண்ட் எக்ஸ்ட்ராக்ஷன் எதுவும் இன்றி, உயர்தர சூரியகாந்தி வித்துக்களிலிருந்து தயாரிக்கப்பட்டது
• வைட்டமின் 'E' நிறைந்தது
• கொலஸ்ட்ரால் இல்லாதது
SUPER-REFINED SUNFLOWER
ANTI-CHOLESTEROL
Sunline
SUPER-REFINED SUNFLOWER OIL
ANTI-CHOLESTEROL
நிறைவான சூரியகாந்தி
எண்ணெய் - சன்லைன்
S.S.D. OIL MILLS COMPANY LTD.
• Madras Ph: 8281803 • Cochin Ph: 350640 • Bangalore Ph: 367330
• Guntur Ph: 223572 • Orissa Ph: 410362


நீங்கள் உங்களுடைய 1-2-3 வயதுக்
குழந்தைகளின் எல்லா சிறப்புத்
தேவைகளையும் கவனித்துக் கொண்டு
விட்டீர்கள்.
போஷாக்குத் தேவைகளுக்கு என்ன செய்தீர்கள் ?



# உழைப்பிற்குப் பின்னே குதூகலம்!

அயல் நாடுகளில் வாழும் மக்களெல்லாம் வருடத்தில் பெரும்பாலான நாட்கள் கடுமையாக உழைத்தாலும் ஓய்வெடுப்பதற்கென்று சில நாட்களைச் செலவிடுவதற்குத் தயங்குவதில்லை. மூளைக்கு, உடலுக்கு ஓய்வு தருவதற்காக பல சுற்றுலா தலங்களுக்குச் சென்று சுற்றிப் பார்க்கிறார்கள். புது அனுபவங்களைப் பெறுகின்றார்கள். இதற்கென்று தங்கள் சேமிப்பில் ஒரு பகுதியைக் கூட தனியாக ஒதுக்கி வைக்கிறார்கள்.

ஆனால் நம் நாட்டில் சமீப காலம் வரை உழைப்பிற்குப் பின் வெளியில் சென்றால் சினிமா, கோயில் என்பதைத் தவிர பெரும்பாலான மக்களுக்கு வேறு எதிலும் ஆர்வம் இருந்ததில்லை. ஆனால் இப்போது அந்த மனோபாவம் எல்லாத் தரப்பு மக்களிடமும் மாறி வருகிறது. ஓய்வு நாட்களை வெளியிடங்களுக்குச் சென்று, குறிப்பாக சுற்றுலா தலங்களை நாடிச் சென்று அனுபவிக்க விரும்புகிறார்கள். அதனால் சுற்றுலாவை மையப்படுத்தி இந்தியாவில், குறிப்பாக தமிழ்நாட்டில் ஏராளமான தொழில்கள் பெருகியுள்ளன. அவற்றில் பெரிய அளவில் உருவாகி வருபவை 'ரிசார்ட்ஸ்' எனப்படும் விடுமுறை இல்லங்கள்.

காலப்பங்கீட்டு முறையில் (Time Share) விடுமுறை இல்லங்களை (Holiday Resort) கட்டி விற்பனை செய்து வரும் ஒரு புதிய முறையானது சமீப காலத்தில்தான் இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டது.

ஊட்டி, கொடைக்கானல் போன்ற மலைவாசஸ் தலங்களை எண்ணிலடங்கா ரிசார்ட்ஸ் நிறுவனங்கள் பிரதானப்படுத்திக் கொண்டு தங்கள் தொழிலைத் தொடங்கியுள்ளன. என்றாலும் சொந்தக் கட்டடங்களைக் கொண்டு விடுமுறை இல்லங்களை நடத்தி வரும் நிறுவனங்களை, விரல் விட்டு எண்ணி விடலாம்.

அவற்றில் ஒன்று கொடைக்கானலில், மின்னலடிக்கும் வெண்மையாக, பசுமை பிரதேசங்களுக்கு நடு நாயகமாக அடுக்கடுக்காக 7 தட்டுகளைக் கொண்ட கட்டடம் எழுப்பி வருவோர் போவோரெல்லாம் வியக்கச் செய்து கொண்டிருப்பது 'சாய் சித்தார்த் ரிசார்ட்ஸ்'.

சரிவான மலைப்பகுதியில் அமைக்கப்பட்டுள்ள இந்த ரிசார்ட்டின் மேல் தட்டின் கூரைப்பகுதியில் கார்கள், வேன்கள் நின்று கொண்டிருப்பதைப் பார்க்க வியப்பாக உள்ளது. இதன் வயிற்றுப் பகுதியான நான்காவது தட்டிலும் கார்களை நிறுத்தலாம். இறுதியாக, கீழ்த் தட்டின் தரைப் பகுதியிலும் கார்களை நிறுத்துவதற்கு வசதியாக வளைந்து இறங்கும் பாதை அமைக்கப்பட்டுள்ளது. இப்படி பாதை

அமைப்பதற்கே 12 லட்ச ரூபாய்க்கு மேல் செலவு செய் திருக்கிறார்கள்!

இங்குள்ள ஒவ்வொரு குடிலும் தோட்டத்துடன் உள்ளது. அவற்றை மற்றவர்கள் கடந்து செல்லத் தேவை யில்லாமல் ஒன்றுக்கொன்று தொடர்பின்றி தனித் தனி யாக அமைந்துள்ளன. இதனால் தங்கி இருப்பவர்களின் தனிமை பாதுகாக்கப்படும். குடிலின் எந்த ஒரு ஜன்னலில் இருந்து பார்த்தாலும் பழனி மலை தெரியும். ஒவ்வொரு குடிலின் முன்புறம் சிறிய பால்கனி இருக்கிறதென்றால் பின் புறம் உள்ள பால்கனி நீண்டதாக - எதிரே ஓங்கி வளர்ந்து நிற்கும் ஓக் மரங்கள், பசுமையான பள்ளத்தாக்குகள் என்று கண் எதிரே இயற்கை விருந்து தரும் வகையில் குடில்கள் அமைக்கப்பட்டுள்ளன.

திரைப்படங்களில் நாம் பார்த்து ரசிக்கும் பனி மூட்டம் (mist) இங்கே கூட்டம் கூட்டமாக வந்து நம்மோடு வந்து மோது கிறது. "இப்படியொரு குடில் அமைப்பை இந்தியாவில் வேறு எந்த ரிசார்ட்டிலும் நீங்கள் காண முடியாது" என்று இந்த ரிசார்ட்டைத் தானே வடிவமைத்து எழுப்பிய ஆர். பன்னீர் செல்வம் கூறுகிறார்.

சாய்சித்தார்த் ரிசார்ட்டின் நிர்வாகம் முழுவதையும் கவனித் துக் கொள்பவர் அதன் மேலாளர் இயக்குநரான திருமதி. சித்ரா பன்னீர் செல்வம் என்றால், அதன் ஒவ்வொரு அங்குல வளர்ச் சிக்கும் காரணமாக இருப்பவர் அவரது கணவரும், நிறுவனத் தின் இணை மேலாண் இயக்குநருமான பன்னீர் செல்வம். கொடைக்கானலில் உள்ள சாய் சித்தார்த் ரிசார்ட்ஸ் கட்டி டத்தின் ஒவ்வொரு பொருளும் அவர் பார்த்துப் பார்த்து வாங்கியதாகும்.

கொடைக்கானலில் பார்க்க வேண்டிய இடங்களில் ஒன்றான குறிஞ்சி ஆண்டவர் கோயிலுக்கு முன்புறம் இடதுபுறமாக, பஸ் நிலையத்திலிருந்து 3 கி.மீ. தூரத்திலும், ஏரியிலிருந்து 2½ கி.மீ. தூரத்திலும், பழனி வியூ ஹவுஸ் மற்றும் செட்டியார் பூங்கா இவற்றுக்கு நடுவிலும் அமைந் துள்ளது சாய் சித்தார்த் ரிசார்ட்ஸ்.

5 ஏக்கர் நிலப்பரப்பில் ஒன்றரை ஏக்கர் இடத்தில் 48 அடி உயரத்திலிருந்து படிப்படியாக இறங்கும் 7 தட்டு







களைக் கொண்ட கட்டிடப் பணி கடந்த மார்ச் '93ல் தொடங் கப்பட்டு இப்போது 95 சதவீதம் பணி முடிவடைந்து விட்டது. கட்டிட வடிவமைப்பில் நவீன தன்மையுடன் புதிய பரிமாணமாய்த் தோன்றும் இந்த ரிசார்ட்டின் மொத்த மதிப்பீடு 3.5 கோடி ரூபாய். சொந்தப் பணம் மற்றும் வங்கி உதவியால் வளர்ந்து காண்பவர் பிரமிக்கும் வகையில் பிரம்மாண்டமாய்க் காட்சியளிக்கிறது. அடுக்குகளைக் கொண்ட கட்டிடங்கள் சாதாரணமாகக் கீழிலிருந்து மேலாகச் செல்லும். ஆனால் இங்கு மேலிருந்து கீழாக இறங்குகிறது.

"செங்குத்தான இந்த இடத்தில் ரிஸார்ட்ஸ் கட்டத் தொடங்கியபோது பல பேர்கள் பலவிதமாக எதிர்ப்புத் தெரிவித்தார்கள். இந்த இடத்தில் கட்டிடமே கட்ட முடியாது, இது வீண் முயற்சி என்று எச்சரித்தார்கள். இருந்தாலும் அதையே ஒரு சவாலாக எடுத்துக் கொண்டோம். எங்களுடைய எண்ணம் எல்லாம் இந்த இடத்திலேயே இதுவரை யாரும் கட்டியிருக் காத ஒரு அமைப்பில் ரிசார்ட்ஸ் கட்டி விட வேண் டும் என்பதாகவே இருந்தது.

ஆரம்பத்தில் இந்தக் கட்டிடத்தைக் கட்ட மிக வும் சிரமப்பட்டோம். மேலே இருந்து மணல், ஜல்லி, சிமெண்ட், முதலியவற்றை ஒரு அகன்ற குழாய் வழி யாகத்தான் கீழே கொண்டு வருவோம். இப்படிப் பட்ட பணிகளுக்குச் சோதனையாகக் கட்ட ஆரம் பித்த வருடம் முழுவதும் தொடர்ந்து மழை வேறு. அதனால் ஏற்பட்ட தடைகள், நஷ்டங்களைத் தாண்டி வந்துதான் இந்த ரிஸார்ட்டைக் கட்டி முடித்தோம் என் கிறார் பன்னீர் செல்வம்.

நான்காவது தட்டில் உள்ள கார்கள் நிறுத்தும் இடத்தை ஒட்டியே கடைகள் கட்டப்பட்டுள்ளன. குடில் களில் தங்குவோருக்கு தேவையானதெல்லாம் இந்தக் கடை களில் கிடைக்கும். மேலும் சிறுவர் பூங்கா, விளையாட்டு அரங்கம், நீச்சல் குளம் அமைக்கும் பணியும் நடை பெற்று வருகின்றன. நீச்சல் குள தண்ணீரை சூரிய வெப்பம் (Solar System) மூலமாக சூடுபடுத்தவும் ஏற்பாடுகள் நடக்கின்றன.



குடில்களின் அடித்தளத்தில் சுமார் 4 லட்சம் லிட்டர் தண்ணீரை இயற்கை முறையில் (கூழாங்கல், கரி, மணல் மூலமாக) சுத்திகரித்து சேமித்து வைக்கும் அளவுக்கு இடமொன்றை அமைத்திருக்கிறார்கள். அருகிலுள்ள நீரூற்றிலிருந்து இங்கு தண்ணீர் வந்து சேருகிறது. இதனால் வருடம் முழுவதும் ரிசாட்டில் தண்ணீருக்குப் பஞ்சமிருக்காது என்கிறார் பன்னீர் செல்வம்.

குடில்கள் எல்லாமும் மூன்று நட்சத்திர ஹோட்டல் வசதிகளைக் கொண்டவை. டிஷ் ஆண்டெனா வசதியுடன் ஒவ்வொரு குடிலுக்கும் கலர் டீ.வி. வசதி உண்டு. குடிலிலேயே சமைத்துச் சாப்பிட சமையலறை உண்டு. மிக்ஸி, கிரைண்டர் இவற்றுடன் வாஷிங் மெஷினும் வாடகைக்குக் கிடைக்கும். இங்குள்ள உணவு விடுதியில் சைவ - அசைவ பிரியர்களுக்கேற்ற வாறு தனித்தனி இடங்கள் உண்டு. சமையல் செய்து தருவதற்கும் ஆட்கள் உண்டு.

"சரி, இந்த குடில்களில் தங்குவதற்கு எவ்வளவு செலவு செய்ய வேண்டும்?" என்று பன்னீர் செல்வத்திடம் கேட்டதற்கு, "நடுத்தர வர்க்கத்தினரும் பயன் பெறும் வகையில் குடில்களுக்கு இட வசதிக்கும், தங்கும் நாட்களுக்கும் (அதிக பட்சம் 7 நாட்கள், குறைந்த பட்சம் 3 நாட்கள்) ஏற்றவவாறு ரூ. 8,599 லிருந்து ரூ. 75,099 வரை பல பிரிவாக பணம் வசூலிக்கிறோம். இதில் குறிப்பிட்ட தொகையை முதலில் கட்ட வேண்டும். மீதி பணத்தை 10 சுலபத் தவணைகளில் செலுத்தலாம். மொத்தமாக பணம் கட்டுவோருக்கு 2000 ரூபாய் தள்ளுபடியும் உண்டு.

முதலீடு செய்த பணத்திற்கு 99 வருட காலத்திற்கு வருடத்தில் 7 நாட்கள் (அல்லது 3 நாட்கள்) வீதம் குடிலை பயன்படுத்திக் கொள்ள உரிமை உண்டு. அது மட்டுமின்று முதலீடு செய்த பணத்தை 20 வருடங்கள் முடிந்த பின் வங்கி மூலமாக திரும்பப் பெறுவதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறோம். 99 வருடங்களுக்கு 99 ரூபாய் மட்டுமே நாங்கள் எடுத்துக் கொள்கிறோம். ஆக 1 வருடத்திற்கு 1 ரூபாய்தான் செலவுக் கணக்கு.

வருடத்தில் உரிமையுள்ள அந்த 7 நாட்களை தங்களுக்கு தங்க வசதிப்படாவிட்டால் மாற்றிக் கொள்ளலாம். அல்லது அடுத்த வருடத்திற்கு சேமித்துக் கொள்ளலாம். தவிர எங்களிடம் வாடகை பிரிவு ஒன்று உள்ளது. அதில் கட்டணமின்றி உறுப்பினராகச் சேரலாம். பணம் செலுத்துபவர்கள் குடிலில் தங்க விருப்பப்படாத போது, அதற்குரிய வாடகை வசூலித்துத் தரப்படும். தினசரி குறைந்த பட்சம் 350 ரூபாயிலிருந்து அதிக பட்சமாக 1500 ரூபாய் வரை வாடகை வருமானம் வர வாய்ப்புண்டு.

கொடைக்கானல் ரிசார்ட்ஸைத் தொடர்ந்து தற்போது ஊட்டி, ஏற்காடு, ஏலகிரி ஆகிய இடங்களில் ரிசாட்ஸ் அமைக்கும் பணிகள் நடைபெற்று வருகின்றன. இதன் மூலம் அடுத்த சில ஆண்டுகளுக்குள் சுமார் 5000 இளைஞர்களுக்கு வேலை அளிக்கத் திட்டமிட்டுள்ளோம்" என்றார் பன்னீர் செல்வம்.

32 வயது இளைஞரான பன்னீர் செல்வம், தென்னாற்காடு மாவட்டம் உளுந்தூர்பேட்டை அருகேயுள்ள குக்கிராமம் ஒன்றைச் சேர்ந்தவர். பட்டதாரியான இவர் சுமார் 10 ஆண்டுகள் இன்ஷூரன்ஸ் நிறுவனத்தில் ஆய்வாளராகவும், வளர்ச்சி அதிகாரியாகவும் பணிபுரிந்தார். கொடைக்கானலில் கட்டிய சில கட்டடங்கள் புதிய தொழில் பாதையை அவருக்குக் காட்டியது. தான் பார்த்த வேலைக்கும் ரிசார்ட்ஸ் தொழிலுக்கும் சிறிதும் தொடர்பு இல்லையென்றாலும் துணிச்சலுடன் அதில் இறங்கினார். தற்போது சாய் சித்தார்த் ரிசார்ட்ஸ் இந்தியா லிமிடெட்டின் தலைமை அலுவலகம் 12, முதல் மாடி, ராம்ஸ் அபார்ட்மெண்ட், 141,

எல்டாம்ஸ் சாலை, சென்னை - 18. (தொலை பேசி 453101) என்ற முகவரியில் உள்ளது. இதற்கு பெங்களூர், கோயம்புத்தூர், மதுரை, பாண்டிச் சேரி, தேனி, பம்பாய், கொச்சி, புவனேஸ்வர், ஹைதராபாத், விஜயவாடா, விசாகப்பட்டினம் மற்றும் தமிழகத்தின் முக்கிய நகரங்களிலும் கிளை அலுவலகங்கள் உள்ளன.

அவருக்கு என்று ஒரு லட்சியம் உண்டாம். என்ன அது?

"கொடைக்கானலில் அனாதை இல்லமும், பள்ளியொன்றும் தொடங்க வேண்டும். ஆண்டுக்கு 30 அனாதைக் குழந்தைகளைத் தத்தெடுத்து அவர்களுக்குக் கல்வி உட்பட வாழ்க்கைக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் செய்து கொடுக்க வேண்டும். ரிசார்ட்டில் கிடைக்கும் லாபத்திலிருந்து பள்ளி, அனாதை இல்லத்தை நடத்த வேண்டும் என்பது என் முதல் லட்சியம்.

இரண்டாவதாக சென்னைக்கருகில் 5000 ஏக்கர் பரப்பளவில் அனைத்து வசதிகளும் கொண்ட நவீன நகரம் ஒன்றை ஏற்படுத்த வேண்டும்" என்று எங்கும் எதிலும் புதுமை காண விரும்புவதாகச் சொன்னார்.

பேட்டி, படங்கள் :
**அருள்மொழி ராமகிருஷ்ணன்**

# பெண்களின் 'ஷாப்பிங்' எப்படி?



இன்று பெரும்பாலான பெண்கள் வேலைக்குப் போய் வருவதால் - புழக்கத்திற்கு அதிகப் புடவைகள் வேண்டும் என எண்ணி குறைந்த விலையில் தினசரி பயன்படுத்துவதற்கு ஏற்றதாக புதிய புடவைகளை அடிக்கடி வாங்கிக் கொண்டுதானிருக்கிறார்கள்.

ஆனாலும் விழாக் காலங்களிலும் விசேஷ நாட்களிலும் கொஞ்சம் சிறப்பாக எடுக்க விரும்புவதுண்டு. அதிலும் பெரும்பாலோர் கொண்டாடும் தீபாவளி போன்ற பண்டிகை நாளில் பட்டாசு வெடித்து - பண்டங்கள் செய்து இறைவனுக்குப் படைத்து அடுத்தவருக்கும் கொடுத்து மகிழும் போது பகட்டாய் உடுத்திக் கொள்ளும் உந்துதல் எந்தப் பெண்ணுக்கும் உண்டு. அதற்காக எப்பொழுதையும் விட சற்றுக் கூடுதல் விலையில் மிகையான அழகில், விரும்பிய நிறத்தில் புடவை வாங்க வேண்டும் என திட்டமிட்டு முடிவு செய்யும் பெண்களை கூட்டம் கூட்டமாக புடவைக் கடைகளில் காண முடிகிறது.

ஆமாம் இந்தப் பெண்கள் திட்டம் போட்டபடி புடவை வாங்கி விடுகிறார்களா? பட்ஜெட் போதுமானதாக இருக்குமா? கணவர் கொடுத்த பணத்திற்கு அரைகுறை மன சோடு புடவை வாங்கி விட்டோமே



என்று அதிருப்தியோடு திரும்புவார்களா?

இவர்களின் புடவைத் தேர்வு எப்படிப் பட்டதாக இருக்கும்? நேரிடையாக பெண்கள் புடவை தேர்வு செய்யும் பாணியைத் தெரிந்து கொள்ளலாமே என்று உந்துதல் ஏற்பட தி.நகர் உஸ்மான் சாலை வழியாக நடந்தோம்.

ஏதாவது ஒரு கடைக்குப் போய்ப் பார்க்க லாமே என்று தோன்றியது. பெண்களே நடத் தும் கடைதான் இதற்குச் சரியென்று சரோ ஜினி தெருவிலுள்ள 'ஷேட்ஸ்' கடையைத் தேர்ந் தெடுத்தோம்.

கடையின் பெண் உரிமையாளர்களான சுதா ரவியிடமும், கல்பனா ஜெயராமிட மும் கேட்டோம். இந்த வருட விற்பனை எப்படி உள்ளது? தீபாவளிக்கு அதிக விற்ப னையை எட்டிப் பிடிக்கிற புடவை எது?

"பொதுவாக எல்லா வகையான புடவை களும் நன்கு விற்பனையாகிறது. தீபாவளி சேல்ஸ் என்று பார்த்தால் அதிகமாக பாலிகாட் புடவைகள் விற்பனையாகிறது. இவை பட்டுப் புடவைகளின் ஜாடை கொண்டவை.

சிலர் பட்டுப் புடவைகளை அதிக வெயிட் உள்ளதால் விரும்பமாட்டார்கள். பட்டுப் புடவைப் பராமரிப்பு கொஞ்சம் சிரமமானது என்று எண்ணுபவர்கள், விலை அதிகம் இல் லாமல் ஆனால் பட்டுப் புடவையின் அசல் சாயலோடு வேண்டும் என்று நினைப்பவர்கள், வேலைக்குப் போகும் பெண்கள், விசேஷம், வைபவம் இவைகளுக்கு உடுத்திக் கொள்ள ஏது வானது என நினைக்கும் பலர் தேர்வு செய்வது இந்த பாலிகாட் புடவைகளைத்தான்.

வியாபாரம் மும்முரமாயிருக்கையில் பாலி காட் புடவைதான் வேண்டும் என்று வந் திருந்த திருமதி நளினி அவர்களிடம் பேச்சுக் கொடுத்தோம். "என்னதான் இருந்தாலும் பட்டுப் புடவை போல வருமா பாலிகாட்?"

"நிச்சயமா தீபாவளிக்குத் தகுதியான புடவை பாலிகாட்தான். நான் பட்ஜெட் குடும் பத்தைச் சேர்ந்தவள் என்பதால் விலை குறை வான இந்தப் புடவையை எடுக்கிறேன் என்பது காரணமல்ல. துவைப்பது வெகு சுலபம். வெளுக்காத நிறம், சரிகை கருக்கிறதில்லை. இதையே பட்டுப் புடவையில் எடுக்கப் போனால் மூன்று, நான்காயிரத்தைத் தாண்டி விடாதா?" என்று எதிர்க்கேள்வி போடுகிறார் அந்தப் பெண்மணி.

மற்றொரு பெண்ணான அனுராதாவிடம் கேட்கிறோம். "இந்த தீபாவளி புடவைக்கு என ஒதுக்கிய பட்ஜெட் எவ்வளவு? அதுக்குள் ளேயே வாங்கிடுவீங்களா? இல்லை... பத்தலை பத்தலை காக கொஞ்சங்கூட பத்தலைன்னு உங்க கணவர்கிட்ட முறையிடுவீங்களா?"

அந்தப் பெண் 'கப கப' வென சிரித்து விட்டு, "என் கணவர் தீபாவளிக்கென்று எனக்கு ஒதுக்கியது 1500 ரூபாய். அதற்குள்ளாக வாங்குவதுதானே சாமர்த்தியம். நான் தீபாவளி மட்டுமல்ல அந்த பட்ஜெட்டில் மூன்று பண்டி கைகளைக் கொண்டாடி விடுவேனாக்கும்."

"அதெப்படி, அதெப்படி?"

"ரொம்ப ரொம்ப ஈஸி. ஒரு பாலிகாட் புடவை. ஒரு டெஸர் சில்க் புடவை, ஒரு பெங் கால் காட் புடவை. முடிந்தது பட்ஜெட். தீபா வளிக்குப் பாலிகாட் கட்டுவேன். புது வருடத் திற்கு பெங்கால் காட்டன். பொங்கலுக்கு டெஸர் சில்க் - எப்படி?" அருகிலிருந்த அவர் கணவர் புன்முறுவலாய் சிரிக்கிறார்,

"ஆமா... ஆமா ஆனா அடுத்து வர்ற புத் தாண்டுக்கும் பொங்கலுக்கும் தனித்தனியே பட் ஜெட் போட்டுண்டு வந்து மறுபடியும் புடவை எடுக்கிறது அது வேற கதை இல்லியா?"

இன்னும் ஒரு பெண் விதவிதமாக 10, 15 புடவைகளைத் தேர்வு செய்து, "இது போதும்

---

மைசூர் பாகு எப்பேர்ப்பட்ட சமர்த்தர்களையும் ஏமாற் றும். நெய்யில் செய்ய விரும்பும் சகோதரிகளை இன்னும் சிரமப்படுத்தும், காரணம், சுடச்சுட நெய்யை விட்டால்தான் மைசூர்பாகு வெந்து சரியான பதம் வரும். சுடச்சுட நெய் என்றால், காய்ச்சிய நெய்யை மறுபடியும் காய்ச்சினால், ஒரு வாசனை வந்து விடும். இதைத் தவிர்க்க எல்லோரும் எளி தாக செய்யும் ஈஸி மைசூர்பாகு இது. வாணலியில் 1 கிளாஸ் நெய்யை விடவும். 1 கிளாஸ் கடலைமாவை ரோஸ்டு செய்யவும். அடிகனமான பாத்திரத்தில் 2½ கிளாஸ் சர்க்கரை போட்டு கம்பிப்பதம் பாகு வைத்து அதில் மாவைப் போட்டுக் கிளறவும். நன்றாகக் கிளறிக் கொண்டே இருக்கவும். அடுப்பை நிழல் போல் எரியவிடவும். கலவை பாத்திரத்தில் ஒட்டாமல் சுருண்டு வரும். நெய் தடவிய தட்டில் கொட்டி, துண்டுகள் போடவும். சூப்பர் மைசூர்பாகு ரெடி. யாரும் இதைச் செய்யலாம்.

— சங்கீதா



## புகழ்பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம. பத்மநாபன்.



எனது தந்தையார் ஆசீர்வதித்து மந்திரோபதேசம் செய்யும் காட்சி.

பிரபல ஜோதிஷர் **(பண்டித காழியூர் பத்மநாபன்)** காழியூர் ஸ்ரீனிவாசாச்சாரியாரின் மூத்த புதல்வரும், ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும் பெற்றவரால், மகத்தான சக்தி வாய்ந்த யந்திரங்கள், சக்கரங்கள் வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன. மகா லெக்ஷ்மி கவசம் ரூ. 200/-, மகா சுதர்சன யந்திரம் ரூ. 200/-, லக்ஷ்மி நரசிம்ம கவசம் ரூ. 300/-, தனாகர்ஷண யந்திரம் ரூ. 300/-, மகா சுதர்சன சக்கரம் ரூ. 500/- மஹாலக்ஷ்மி சக்ரம் ரூ. 500/-. இவை தவிர அநேக விதமான யந்திரங்களும், கவசங்களும், (விசேஷ பூஜா க்ரமப்படிக்கு) தயாரித்து அனுப்பப்படும்.

வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகை DD மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு ரூ. 50/-

கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழ் / ஆங்கிலம் ரூ. 50/- ஜாதகத்தின் பொதுப்பலன்களை நேரில் சொல்வதற்கு ரூ. 50/- ஆயுள் பலன் (வருஷம், மாதம் தேதி, நேரம், ஊர்) ரூ. 200/-.

மூன்று கேள்விகளுக்கு ரூ. 50/-. வேண்டுவோர் கடிதத் தொடர்பு கொண்டு விவரம் அறிந்து பணம் அனுப்பி சகல நன்மைகளும் அடைவீர்களாக. நேரில் - காலை 8 to 12 noon

பிரபல ஜோதிஷர் பண்டித காழியூர் பத்மநாபன்,
"தபோநிதி"
நெ. 5, வித்யோதயா முதல் மெயின் தெரு,
தபெ எண் : 1411, தி.நகர்,
மதராஸ் 600 017. Ph. 826 3814
தென் இந்தியா (கிளைகள் ஏதும் கிடையாது)

முக்கிய கவனிப்பு : முன் பதிவு செய்து கொள்வது அவசியம். தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம இரகசியமாக வைக்கப் படுகின்றன. வீட்டில் கிரகதோஷம் மற்றும் எந்த விதமான தோஷங்களும் பாதிக்காமலிருப்பதற்கு, சுதர்சன ஹோமம், மகா சுதர்சன சக்ரம் பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டுமே செய்யப்படும். நேரிலோ தபால் மூலமோ தொடர்பு கொள்ளலாம்.

Komala Ads

# MADRAS PERIAMET BENEFIT FUND LIMITED

mpbf

" மாருதி காம்ப்ளக்ஸ் "
90, சூளை ஹை ரோடு, சென்னை - 600 112.
போன் : 5321048, 5325395

## ஓய்வுற்றோர்கள் வைப்பு நிதிகள்

ஓய்வூதியம் பெறுபவர்கள், விதவைகள், உடல் ஊனமுற்றோர்கள், முன்னாள் இராணுவத்தினர் மற்றும் 50 வயதுக்கு மேற்பட்டோர் ஆகியோரால் செலுத்தப்படும் ரூ. 10,000/- மும் அதற்கு மேலும் ஆன வைப்பு நிதிக்கு ஆண்டு ஒன்றுக்கு **21%** சிறப்பு வட்டி வழங்கப்படும்.

## ஓய்வுற்றோருக்கான மறு முதலீட்டுத் திட்டம்

| குறைந்த பட்ச முதலீடு | காலம் | முதிர்வு தொகை | வட்டி விகிதம் |
|---|---|---|---|
| ரூ. 10,000/- | 1 வருடம்<br>2 வருடம்<br>3 வருடம்<br>40 மாதங்கள் | 12315<br>15165<br>18675<br>20000 | 21% |

நினைவில் நீங்காத நன்னாளில் ரூ.6000/- வீதம் நான்கு வருடங்கள் தொடர்ந்து செலுத்தினால் 5ம் வருடம் முதல் நீங்கள் செலுத்திய அதே நாள் ரூ.1250/- வீதம் ஆயுள் காலம் முழுவதும் கிடைக்கும்.

## வைப்பு நிதிகள்

| காலம் | 3-மாதம் | 6-மாதம் | 1 வருடம் | 2 வருடம் | 3 வருடமும் அதற்கு மேலும் |
|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் | 15% | 15.5% | 18% | 19% | 21% |

**நகை கடன்** 1 சவரன் தங்க நகையின் மீது Rs. 2400/ வரை 22.5% ஆண்டு வட்டியுடன் வழங்கப்படும்.

பரிமாற்றங்கள் உறுப்பினர்களுக்கு மட்டும். வெள்ளி விடுமுறை.

**எம். முகுந்தன், எம்.ஏ.,**
நிர்வாக தலைவர்

**உன்னதமான பணியும் சேவையோடு கூடிய பாதுகாப்பும்**

KOMALA ADS

குலோப்ஜாமூன் செய்ய சர்க்கரைப்பாகு வைக்கும் போது சம அளவு தண்ணீரும் சர்க்கரையும் கலந்து கொதிக்கவிட வேண்டும் என்பது தெரிந்தாலும்... அதிகமாகக் கொதித்தால்... சர்க்கரை ஜீராவில் ஜாமூன் மிதக்காமல்... ஆறினதும் பாகு கெட்டியாகி ஜாமூன் முழுதாக எடுக்க வராமல் அரையும், காலுமாய் வெட்டி எடுக்கற மாதிரி ஆகிவிடும். எனவே சர்க்கரை கரையும் வரை லேசாகக் கொதிக்க விட்டால் போதும்.

— ரமா சந்திரசேகரன்



பில் போடுங்கள்" என்று சொல்லியவரிடம் நாம் விசாரிக்கிறோம். "வீட்டில் உள்ள எல்லோருக்கும் சேர்த்து எடுத்தாயிற்று போலிருக்கே?"

"நான் பெரும்பாலும் விரும்பி அணிவது பெங்கால் காட்டன் புடவைகளைத்தான். என் சக தோழிகளும் என் புடவைகள் அழகாக இருப்பதாகச் சொல்வார்கள். பிறந்த நாள், தீபாவளிக்கு அவர்களுக்கு நான் பரிசளிக்க விரும்பினால் பெங்கால் புடவைகளைத்தான் பிரசண்ட் செய்வேன்" இப்படிச் சொல்பவர் திருமதி லக்ஷ்மி. அவரிடம் கேட்கிறோம், "பெங்கால் காட்டன் புடவைகள் பொம்மை போல ஆடாமல் அசையாமல் இருப்பவர்களுக்குத்தான் பொருந்தும் இல்லையா?"

"அப்படி இல்லை. ஒவ்வொரு புடவையும் ஒரு வகையில் சிறப்பானது. நைலக்ஸ் புடவைகளை எப்படி வேண்டுமானாலும் கட்டலாம். கசங்காது. அதன் தன்மை அப்படிப்பட்டது. பட்டுப் புடவைகளை கோயில், திருமணம் போன்ற இடங்களுக்குக் கட்டினால் அழகாக இருக்கும். விலை அதிகம் என்பதால் அழுக்காகிவிடக் கூடாது, கறை படக்கூடாது என்று உடனே கழற்றி விடுவோம். காட்டன் அப்படியில்லை. மடிப்பு வைத்து அழகாகக் கட்டிக் கொள்ளும் போதுதான் பார்வையாக இருக்கும். அதன் அழகே தனி. மற்றவர்கள் பார்வையில் எளிமையான அழகை வெளிப்படுத்தும். அதே நேரத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் திடமான மனமும் கொண்ட பெண்ணாகவும், மிடுக்கான தோற்றத்தை வெளிப்படுத்துவதாக எனக்குத் தோன்றுவதால் நான் அதிகமாக காட்டன் புடவைகளையே தேர்ந்தெடுக்கிறேன்."

'ஷேட்ஸ்' கடைக்கு இன்னொரு சிறப்பு பெண்களே இதை நிர்வகிப்பதுதான். எந்தெந்த மாதிரியான புடவைகள் பிடிக்கும் என்று தெரிந்து பூர்ணிமா வெங்கட்ராமன் கல்கத்தாவில் இருந்து கொண்டு வாங்கி அனுப்புகிறார். சுதா ரவி, கல்பனா ஜெயராம் இருவரும் பாங்குற கடையை நிர்வகிக்கிறார்கள்.

ஒரு பாட்டி கண்ணில் தெரிந்தார். அட, இந்த வயதிலும் இவருக்குப் புடவை ஆசை விடவில்லையா? நினைப்போடு அவரை அணுகினோம்.

"எப்போது பார்த்தாலும் சுங்குடிப் புடவைகளைத்தான் கட்டுவேன். கட்டிக் கட்டி அலுத்துப் போச்சு. பெங்கால் காட்டன் புடவைகளில் அழகா பட்டுப் புடவை மாதிரி சரிகை பார்டர் இருக்கு. கல்யாணம் காட்சிக்குக் கட்டிக்கலாமே. அதான் என் மாட்டுப் பொண்ணண்ட புடவை எடுக்கறச்சே என்னை அழைச்கண்டு போக ணும்னேன்! அழைச்சுட்டு வந்தா"

கல்லூரி மாணவி போல் காணப்பட்ட மாலினிக்குக் காட்டன் புடவைகளைக் கட்டுவதில் அலாதி விருப்பமாம். சொன்னார், "எனக்கு மழை அடிச்சாலும் சரி காட்டன் புடவையைத்தான் எப்பொழுதும் கட்டுவேன். சொன்னால் நம்ப மாட்டீர்கள். ஒப்புக்குக்கூட என்னிடம் நைலக்ஸ் புடவை இல்லை. பருத்தித் துணிகளை உடுத்துவது ஆரோக்கியம். உடலுக்கு நல்லது அப்படி என்றுதான் என் மனதில் பட்டிருக்கிறது. பெரு நகரங்களில் மின்சார விசிறிக்கு அடியில் வாழும் வாழ்க்கையாயிருக்கிறது. எப்போது கரண்ட் போகும் விசிறிக் காற்று நிற்கும் என்று தெரியாத நிலையில்... அப்படிக் காற்றில்லாவிட்டால் உடம்பு ஒரே கச கசப்பாகப் போய்விடும். இதைத் தவிர்க்கவே நான் காட்டன் புடவைகளையே எப்போதும் தேர்ந்தெடுக்கிறேன்."

பின்னும், கடைக்குள் சிறிது நேரம் நின்றோம். அப்பப்பா இந்தப் பெண்களுக்குப் புடவைகளைத் தேர்ந்தெடுப்பதில்தான் எத்தனை ஆர்வம். ஆக, விலை பார்த்து நிறம் பார்த்து விரும்பிய புடவைகளை எடுத்தே தீருவேன் என்று நினைத்ததைச் சாதித்து விடுகிறார்கள் நம் பெண்கள்.

**— மலர்விழி**

# என்கார்

## உறுதியான உத்திரவாதம்

100% Property Security

# 30% வருட வட்டி

100% Property Security

பல நிதி நிறுவனங்களுக்கு நடுவில் முதலீட்டிற்கு முதன்முதலாக அசையா சொத்துக்களை உத்திரவாதமாக அளித்து, பல்லாயிரக்கணக்கான முதலீட்டாளர்களின் நம்பிக்கை பெற்ற உங்கள் என்கார் நிறுவனம் வழங்கும்

"என்கார் ராயல் டெபாஸிட், என்கார் மெகாபாண்ட் மற்றும் என்கார் பொன்மகள் பாண்ட்"

### என்கார் ராயல் டெபாஸிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | வட்டி விகிதம் | |
|---|---|---|
| ரூ. 5000/- | 30% வருட வட்டி | 12 மாதங்களுக்கு வட்டி மாதாந்திர பின் தேதியிட்ட காசோலை மூலம் முன்னதாகவே வழங்கப்படும் |

### என்கார் மெகா பாண்ட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 10,000/- | $2\frac{1}{2}$ ஆண்டுகள் | ரூ 20,000/- (உங்கள் முதலீடு இரண்டரை ஆண்டுகளில் இரு மடங்காகிறது) |

### என்கார் பொன்மகள் பாண்ட்

| டெபாசிட் தொகை | முதிர்வு தொகை |
|---|---|
| ரூ. 3,000/- | ரூ 2,00,000/- 20- வது ஆண்டு முடிவில் |

ரூ. 25,000/-ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு பன்மடங்கு விலை உயரக்கூடிய நிலத்தின் ஒரு பகுதியை பதிவு செய்து தருகிறோம்.

# ENCAR Hi - Grow Investments

★ ENCAR Animal Farms & Exports (P) Ltd., ★ ENCAR Cashew Gardens (P) Ltd.,
★ ENCAR Dairy Foods Ltd.,

**Registered Office :**
10 & 11 Varadharaju Complex, (Easwari Complex),
Near Chatram Bus Stand,
Trichy - 620 002. Tel : 25963
Fax : 0431 - 42750 Telex : 0455-316 ACES IN

**Branch Office :**
134/2, Royapattiah High Road,
Near Vivek & Co,
Luz Corner, Mylapore, Madras - 4
Ph : 8526806, 8526887

## உங்கள் முதலீட்டிற்கு உத்திரவாத உயிர்நாடி – என்கார்

வெந்தயத்தை வறுத்துப் பொடி செய்து வைத்துக் கொண்டு குழம்பு கொதிக்கும்போது போட்டால் மணமாக இருக்கும்.

– கலா மூர்த்தி



(176–ம் பக்கத் தொடர்ச்சி)

பெண்டாட்டி சுப்பன்னு சொல்லிண்டு திரிவா... வேண்டவே வேண்டாம்.... அந்தப் படுக்கையை இறுக்கினது போறாது.... போற வழியிலேயே லொடலொடான்னு ஆயிடும். இப்படிக் கொண்டா..."

சுந்தா, மனைவியை அதட்டியதும், நாச்சாவின் காதில் விழாமல் இல்லை.

இப்பேர்ப்பட்ட மருமகள் கிளம்பிப் போன போது அம்மா, நாச்சாவிடம் வயிறெரிந்து சொன்னாள் :

''தாயையும், பிள்ளையையும் பிரிக்கிறாளேடா.. இவ நன்னாயிருப்பாளா..."

நாச்சா பெருமாள் கோவில் இருந்த திசை நோக்கி கையெடுத்துக் கும்பிட்டான்.

''ரங்கா... அம்மா ஏதோ கோபத்துல சொல்றா... கண்டுக்காதே..."

"அதிர்ந்து ஒரு வார்த்தை பேசத் தெரியாத இந்த வேதாவைப் பார்த்தியோல் லியோ... எப்படியோ அகமுடையானைக் கையிலப் போட்டுண்டு, ஒண்ணுமே தெரியாத மாதிரி வடக்கே போயிடுத்து..."

"தர்முவோட வாய்க்குப் பயந்து – அந்தப் பொண் உலகத்தை விட்டே போகாம, இந்த மட்டும் வடக்கேதானே போயிருக்கு.. சந் தோஷப்படு..."

''இவ போனா – அடுத்தவ வர மாட்டாளா... அதான் ராம லட்சுமணன் மாதிரி நாலு பிள்ளைய பெத்து வச்சிருக் கானே..."

''நாச்சாவை சொல்றியா... திருச்சியில புரபசரா இருக்கான்.. காலம்பற பால் வாங்கி, வாசல் தெளிச்சு கோலம் போடறதுல இருந்து, அம்மா புடவையத் துவைச்சு உலர்த்தறது வரைக்கும்... ஆம்பிளைக்கு ஆம்பிளை... பொம்மனாட்டிக்குப் பொம்மனாட்டி அந்த வீட்டுக்கு அவன்தான்.. அவன் தகப்பனார் திதி அன்னிக்கு ஈர வேஷ்டியக் கட்டிண்டு, அவன்தான் வடைக்கு அரைச்சிண்டிருந் தான்..."

"சரிதான் போ. இவனுக்கு யார் பொண் ணைக் கொடுப்பா..."

''அவனுக்கும் ஒருத்தி பிறந்துதானே இருப்பா..."

"அப்படி எவளாவது வந்தா தர்மு மாமி ஆதிசேஷன் மாதிரி வாசப்படிய அடைச் சுண்டு படுத்துடுவா. ஒரு ஈ காக்காய உள்ளே விட மாட்டா..."

"நாச்சா அசடுடி... இதுவே கடைசியவன் ரங்கன் இருக்கானே... இல்லாடி. வேலை பார்க்கற எடத்துலேயே ஒரு பொண்ணை லவ் பண்ணிட்டிருக்கான். வேற ஜாதியாம். நம்ம மங்களேஸ்வரியோட அண்ணாதான் சொன் னார். கோயமுத்தூர்லே ஆர்.எஸ். புரம் முழுக்க இதான் பேச்சாம்..."

"அய்யோ கிழவிக்குத் தெரியுமோ..."

"தெரிஞ்சா நேத்து ராத்திரி, கோவில் மடப்பள்ளியில சர்க்கரைப் பொங்கல் அளவு குறையறதுன்னு கத்திண்டு கிடப்பாளா..."

நிஜம்தான். ரங்கன் யாரோ ஒரு பெண்ணுடன் சுற்றுவதாக நாச்சாவின் காதி லும் செய்தி வந்து விழத்தான் செய்தது. மங்களேஸ்வரி அண்ணன் சொன்னான்; பண்டாபீஸ் பத்மனாபன் சொன்னான்; அவ் வளவு ஏன் – அப்பாவின் திவசத்துக்கு, பூனாவிலிருந்து வந்திருந்த சுந்தா கூடச் சொன்னான்.

''ரங்கன் கூட... யாருடா அந்தப் பொண்ணு?''

நாச்சா பதிலளிப்பதற்குள் பெரியவன் – சென்னையிலிருந்து ஒருநாள் விசேஷத்துக்காக வந்திருந்த ராமன் சொன்னான்; "யாரோ... வேறயாம். புஷ்பான்னு பேராம். அவளைத் தான் கல்யாணம் செஞ்சுக்கப் போறானாம். பத்துநாள் முன்னாலே, அவளையும் அழைச் சுண்டு ரங்கன் மெட்ராஸ் வந்திருந்தான். நம்ம வீட்டுலதான் தங்கினான். உன் மன்னி வார்த்துப் போட்ட அடையைச் சாப்பிட் டுட்டு ஏகமாப் புகழ்ந்தா அந்தப் பொண்ணு..."

நாச்சா ராமனைப் பார்த்தபடி பேசாமல் உட்கார்ந்திருந்தான்.



– ஹேமாகோதண்டராமன்

அம்மாவுக்கு ஒரு அடை கூட கிடையாது என்று, மாவைத் தூக்கிப் பரண் மீது வைத்த அதே மன்னி, மைத்துனர் அழைத்து வந்த பொண்ணுக்கு மட்டும் வாயைத் திறந்தால் காக்கா கொத்துகிற அளவுக்கு, அதே அடையைச் செய்து போட்டிருக்கிறாள்.

'என் விரோதிக்கு விரோதி – எனக்கு நண்பன்' – என்பது போல...

ரங்கன் கூட அம்மாவை ஒதுக்கி வைத்து விட்டு, சென்னையிலேயே ராமனும் அவன் பெண்டாட்டியும் சாட்சி கையெழுத்திடக் கல்யாணத்தை ரிஜிஸ்தர் ஆபீசிலேயே முடித்துக் கொண்டதுதான் நாச்சாவுக்குத் தாங்க முடியாத வருத்தமாக இருந்தது.

எல்லாம் முடிந்து ஆறு மாதம் கழித்து – மனைவியை ரங்கன் மண்டபத்தில் உட்கார வைத்து விட்டு, ரங்கன் மட்டும் ஒரு சீப்பு வாழைப் பழத்துடன் அம்மாவைப் பார்க்க வந்திருந்தான்.

கடைக்குட்டி செல்ல மகனைப் பார்த்துமே பரபரத்துப் போய், கண்ணீரையும் வியர்வையையும் நார்மடிப் புடவைத் தலைப்பினால் ஒருசேர அழுந்தத் துடைத்துக் கொண்டு சமையற்கட்டுக்குள் ஓடினாள் தர்மாம்பாள்.

"அம்மா... என்ன செய்யப் போறே... இங்கே வா. காப்பி எல்லாம் வேண்டாம். இப்பத்தான் சித்த முந்தி திருச்சியில சாப்பிட்டேன்..."

"ஏன்டா... காலம்பறயே வந்துட்டியா.. நேரே இங்கே வராம... திருச்சியில எதுக்காக தங்கினே... ஆபீஸ் விஷயமா வந்தியா..."

அவள், என்றைக்கோ நாச்சா காப்பி வாய்க்குக் கேட்பானே என்று – நாலாவது வீட்டுப் பெண்ணின் சீமந்தத்தின் போது கொடுத்த முறுக்கை ஒரு பித்தளைத் தூக்கில் போட்டு வைத்திருந்தது – நினைவுக்கு வர அதை எடுத்து ஒரு தட்டில் வைத்து ரங்கனின் எதிரில் வைத்தாள்.

அவன் நுனி விரலால் கூட அதைச் சிந்தவில்லை. நறுக்குத் தெறித்தாற்போல, நாலே வார்த்தைகளில் அந்த விஷயத்தைக் கூறிவிட்டு எழுந்து விட்டான்.

"ராமன் சொல்லலையா... நான், அவன் சொல்லியிருப்பான்னு நினைச்சேன். அம்மா, எனக்குக் கல்யாணமாயிடுத்து. பெண்டாட்டிய ரங்கநாதர் கோவில் மண்டபத்துல விட்டுட்டு வந்திருக்கேன்... அவ நம்ம ஜாதியில்லே. நீ ஒத்துக்க மாட்டே... அதான்... எப்படியோ நான் சந்தோஷமா இருக்கேன். அதானே, உனக்கு வேணும்?"

தர்மாம்பாள் விக்கித்து நின்றாள். ஏதோ பேச நினைத்தாள் என்பது அவளது கழுத்துச் சதை நடுக்கத்திலிருந்து தெரிந்தது.

நாச்சா, அதிர்ச்சியில் தாய் விழுந்து விடக் கூடாதே என்கிற கவலையோடு, அவளது பக்கத்திலேயே நின்றான்.

ரங்கன், அம்மாவின் தோளில் தட்டிக் கொடுத்தான். சட்டைப் பையிலிருந்து மணிபர்ஸை உருவி, சில நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவன் கையில வைத்தான்.

"வச்சுக்கோ. நான் கிளம்பட்டுமா. ஏதாவது வேணும்னா லெட்டர் போடு. அதான் நாச்சா இருக்கானே..."

தலையிலிருந்து நழுவும் புடவையை சரிசெய்யக் கூட மறந்தவளாய், ஸ்தம்பித்து நின்ற தர்மாம்பாள், மகனைப் பார்த்து இறுகின குரலில் சொன்னாள் :

"இந்தாப்பா... எப்ப அம்மா கூட வேண்டாம்னு கல்யாணம் பண்ணின்டியோ, அப்புறம் எதுக்காக அம்மாவுக்குன்னு பணம் கொடுக்கறே... கல்யாணத்துக்கு இல்லாத அம்மா, இனிமே எப்பவும் இல்லையின்னு வச்சுக்கோ. போயிட்டு வா. க்ஷேமமா இரு..."

அப்பொழுதும் நாச்சாதான் குறுக்கே புகுந்து சமாதானமாய் பேசினான்.

"அம்மா... உன்னைப் பார்க்கணும்னுதானே அத்தனை தூரத்துல இருந்து வந்திருக்கான்... 'போய், பெண்டாட்டியையும் அழைச்சிண்டு வாடா'ன்னு சொல்லுவியா... அதை விட்டுட்டு சின்னக் குழந்தை மாதிரி அவன் கூட என்ன தகராறு..."

தர்மு, பெரிய கண்களில் கோபம் கொப்புளிக்கச் சொன்னாள்.

"எப்ப என்னண்ட அழைச்கண்டு வந்து காட்டக் கூட தகுதியில்லாதவள்னு அவனே கோவில் பிரகாரத்துல உட்கார்த்தி வச்சிருக்கானோ... அவளை எதுக்காக நான் பார்க்கணும்? நாலு பிள்ளை பெத்தேன்.. ரெண்டு – கலியாணத்தைப் பண்ணிண்டு

மாதவிடாய் வரக்கூடிய நாட்களுக்கு 4 அல்லது 5 நாட்கள் முன்னதாகவே முருங்கை இலை சிறிது, சீரகம் சிறிது சேர்த்து அரைத்துச் சாறெடுத்து வெறும் வயிற்றில் மூன்று நாட்கள் தொடர்ந்து குடிக்க வயிற்று வலி மட்டுப்படும்.

-மாலதிபத்மனாபன்



அம்மாவைத் தலைமுழுகிட்டுப் போயாச்சு. நான் என்ன... அவனுங்கப் பின்னாடியே கெஞ்சிண்டு ஓடினேனா... எனக்குக் கல் கோட்டை மாதிரி வீடு இருக்கு. இந்தாடா நாச்சா... நீயும் வேணுமானா எவளையாவது இழுத்துண்டு ஓடு... இன்னும் ஏன் மரமாட்டம் என் முன்னாலே நிக்கறே..."

அன்று மாத்திரமில்லை. இதற்குப் பிறகு தர்மாம்பாள் எத்தனையோ முறை - நாச்சா நாக்கைப் பிடுங்கிக் கொள்கிற மாதிரி ஏசியிருக்கிறாள்; பேசியிருக்கிறாள். அப்போதெல்லாமும் அவன் இப்படித்தான் மரம் மாதிரி ஜடம் மாதிரி நிற்பான்.

முன்பெல்லாம் வருஷத்துக்கொரு தரம் அப்பாவின் திதிக்காகவாவது தர்முவின் பிள்ளைகள் அந்த வீட்டில் ஒன்று கூடுவார்கள். ரங்கனின் கல்யாணத்துக்குப் பிறகு அதுவுமில்லாமல் போய் விட்டது. ராமனாவது, அப்பாவின் திதி புரட்டாசி சுக்லபட்சமா - கிருஷ்ணபட்சமா என்று விசாரித்து ஒரு வரி எழுதுவான். 'அம்மா, அம்மா' என்று அவளிடம் உயிரையே வைத்திருந்த சுந்தா அது கூட விசாரித்து எழுதுவதில்லை.

கடிதம் ஆறு மாசத்துக்கு ஒருமுறை இருக்கும். அனேகமாக அவனுக்கு ஊர் விட்டு ஊர் மாற்றும் போது, பெண்டாட்டிக்கு வயிற்றில் கட்டி வந்து ஆபரேஷன் செய்த போது, பெரியவனுக்கு பிரும்மோபதேசம் வீட்டு மட்டோடு சின்னதாக செய்து முடித்த பிறகு... இப்படி ஏதோ ஒரு சமாச்சாரத்துக்காக நாலு வரி.. அவ்வளவுதான்.

அம்மா பல சமயங்களில் ஆகாத்தியக் காரியாகவும், ஒன்றுமில்லாத சின்ன விஷயத்துக்காக ஊரைக் கூட்டி ரகளை செய்பவளாகவும் இருப்பதில் நாச்சாவுக்கு மட்டும் வருத்தமில்லையா என்ன...?

ஒரு தடவை - பின் போர்ஷன் ராயர் பெண்டாட்டி, "நாச்சா மட்டும் என்ன பாவம் செஞ்சான்.. அவனுக்கும் ஒரு துணையச் சேர்த்து வைக்க வேண்டியது உங்க கடமையில்லையா" என்று கேட்டு விட்டதற்காக நாலு நாளைக்குப் புரண்டுப் புரண்டு அழுதிருக்கிறாள் தர்மாம்பாள்.

"பெரிசா கேட்க வந்துட்டாளே... இவதான் ஒரு வரனைக் கொண்டு வந்து தர்றது... பெத்தவ எனக்குத் தெரியாதா... இவனுக்காக நான் எத்தனை ஜாதகம் பார்த்திருப்பேன்னு எனக்குன்னா தெரியும்..."

"ஏண்டா இப்படி, பார்க்கற வரனை எல்லாம் வேண்டாம், வேண்டாம்னு தட்டிக் கழிச்சு, எனக்கு ராட்சஸி பட்டத்தை வாங்கித் தர்றே?"

"அந்த வெங்கல உருளிய எத்தனை நேரம் தான் தேய்ப்பே? பொம்மனாட்டி மாதிரி... போதும். எழுந்து வா. இப்படி அடுப்பங்கரைப் பூனையாவே நீ இருக்கறதுனாலதான் எல்லாரும் கேலி செய்யறா..."

நாச்சா பதில் பேச மாட்டான். தன் கல்யாண விஷயமாய் அம்மா, ஜாதகத்தை எடுத்துக் கொண்டு ஜோசியர்களைத் தேடி ஓடி, அவர்கள் சொல்கிற பரிகாரங்களை எல்லாம் செய்தாலும் - உள்ளுக்குள், 'எங்கே, செய்கிற பிராயசித்தத்துக்கு மனமிரங்கி பெருமாள் எவளையாவது கொண்டு வந்து, 'இந்தா, உன் மருமகள்' என நிறுத்தி விடப் போகிறாரே என்கிற பயம் இல்லாமல் இல்லை என்பதும் புரிந்துதான் இருந்தது.

நாச்சாவின் மனசுக்குள்ளும் ஒரிரு முறை இந்த ஆசை - காற்றடித்தாற்போல வந்து போகாமல் இல்லை.

திருச்சி கல்லூரியில் தன்னோடு வேலை பார்த்த அமுதா... 'பளிச்'செனத் துடைத்து விட்டாற்போல... பக்கத்தில் வந்து நின்று பேசி விட்டுப் போனாலே.. சம்பங்கிப் பூவின் வாசனை... சில சமயங்களில் அவள் பக்கத்தில் இல்லாத போதுகூட, அமுதாவைப் பற்றி நினைத்தாலே எங்கிருந்தோ சம்பங்கிப் பூவின் வாசனை அவனைத் தீண்டுவது போல...

அவளுடைய கண்களில் கூட இவனைப் பார்க்கும் பார்வையில் ஒருவித மயக்கம் இருப்பது போல.. போல என்ன போல? மயக்கம் இருந்தது.



– ஆர். பத்மாவதி

---

கல்லூரிக்குப் போவதே சுகமாக இருந்தது. அவளது நினைப்பில், வீட்டுக்கு வந்து அம்மாவின் மடிப் புடவையைப் பிழிந்து, கொடியில் உலர்த்துவது கூட ஆனந்தமாக இருந்தது. ரகசியமாய் மனசுக்குள் வைத்து பத்து பேர் சுற்றியிருக்க வாயில் போட்ட கற்கண்டை கடிக்க முடியாமல், கடைவாயில் அடக்கிச் சுவைப்பது போல, அவள் நினைவை, அந்தரங்கமாய் நெஞ்சில் வைத்துச் சுவைப்பதில் ஒருவித போதை இருந்தது.

இருவருமே மௌனமாய் எதற்கோ காத்திருந்தார்கள். கடைசியில் அவள்தான், தங்களுக்கிடையே இருந்த ஊமைத் திரையைக் கிழித்தாள்.

''எங்க வீட்டுல எனக்குக் கல்யாணம் பேசறாங்க. உங்க வீட்டுல?''

"எங்க வீட்டுல பேசிப் பேசி தீர்த்துட்டாங்க..''

அவன் சிரித்தான். அவள் குனிந்த தலைநிமிராமல், விழிகளை மட்டும் உயர்த்தி, அவனைப் பார்த்தாள். அந்த விழிகளில் தெரிந்த ஏதுவோ ஒன்று அவனை இம்சித்தது.

கூடாது. ஒரு பெண்ணின் ஆசையை இதற்கு மேலும் வளர விடக் கூடாது. அவன் அந்தக் கணமே தன் தாயைப் பற்றி, அவளது ஆசார அனுஷ்டானம் பற்றி, குண விசேஷம் பற்றிச் சொல்லி விடுவதே உத்தமம் என எண்ணி சொல்லத் தொடங்கினான்.

அவன் சொல்லச் சொல்ல அவளது முகம் வாடி விட்டது.

"....அம்மா கொஞ்சம் முரட்டுத்தனமானக் குழந்தை அமுதா... ஆச்சு. இப்பவே எழுபத்திரண்டாறது. இன்னும் எத்தனை காலம் இருக்கப் போறா.. அதுவரைக்கும் அவளை... நான், எனக்கு வர்றவளைக் குத்தம் சொல்ல மாட்டேன். இப்ப எப்படி அம்மாவுக்காக கவலைப்படறேனோ... அதே மாதிரி நாளைக்கு பெண்டாட்டிக்காகவும் வருத்தப்பட்டு, அவ அழறதைப் பார்க்க சகிக்காம அம்மாவைக் கோவிச்சுண்டு... அம்மாவோட புலம்பல் தாங்க முடியாம, பெண்டாட்டிகிட்ட கெஞ்சி... ஓ... என்னால முடியாது அமுதா...''

"நல்லாயிருக்கே... அதுக்காக எத்தனை நாளைக்கு இப்படியே...''

"அம்மாவுக்குப் பிள்ளையா, அவ உயிரோட இருக்கற மட்டும்...''

அவள் அதற்கு மேல் பேசவில்லை. அடுத்த ஒரு மாதத்தில் கல்யாணப் பத்திரிகையைக் கொண்டு வந்து கொடுத்தாள். பெற்றுக் கொண்ட நாச்சாவின் மனசு, அந்தக் கணமே இருண்டு போனது.

இது நடந்து பத்து வருடங்களுக்கு மேலாகிறது.

இன்று அமுதாவிற்கு எட்டு வயதில் ஒரு பெண்ணும், ஆறு வயசில் ஒரு பையனும் இருக்கிறார்கள்.

இன்னமும் அதே கல்லூரியில்தான் வேலை பார்க்கிறாள். எப்பொழுதாவது அவனைப் பார்த்தால், 'அம்மா எப்படியிருக் காங்க. சௌக்கியமா?' என விசாரிப்பாள் அவ்வளவே.

இது ஒன்றையுமே அறியாத தர்மு... இன்னமும் தனது மகனுக்கு இருபத்தியொரு வயசில் பெண் தேடிக் கொண்டு..

அன்றைக்கு அவனெதிரிலேயேதான் ஜோசியருக்கும் தர்மாம்பாளுக்கும் வாக்கு வாதம் நடந்தது.

''இதப் பாருங்கோ. இருபத்தியெட்டு, முப்பதுன்னு ஒவ்வொரு பொண் ஜாதகத்தையும் கொண்டு வராதீங்கோன்னு நானும் எத்தனை வருஷமாச் சொல்லிண்டிருக்கேன். இருபது, இருபத்தியொண்ணு – மிஞ்சினா இருபத்திரண்டு, அதுக்குள்ள இருந்தாச் சொல்லுங்கோ. இல்லே, கடையைக் கட்டுங்கோ...

"கோவிச்சுக்கப்படாது மாமி.. பையனுக்கு முப்பது வயசா இருக்கறச்சே இருபத்தியெட்டு, முப்பது வயசுப் பொண் ஜாதகம் கூடாதுன்னு சொன்னேன். சரி.. இப்ப அவனுக்கே நாப்பது முடிஞ்சிடுத்தே... அதைக் கொஞ்சம் யோசிக்கணும். எனக்கென்ன... உங்ககிட்ட வந்து உட்கார்ந்து பேசிண்டிருக்கணும்னு தலையெழுத்தா...''

தர்மு, தலையில் கல்லைப் போட்டாற் போல அப்படியே வெகு நாழிகை வரையில் உட்கார்ந்திருந்தாள். மனசு மட்டும், 'பிரபவ, விபவ' என்று கணக்கு போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது.

அன்றிரவு முழுக்க மகனின் தலையைத் தடவியபடி அழுதாள்.

விசேஷங்களுக்கு அழைப்பிதழ்கள் ஒருபக்கம் வெறுமையாகத்தான் இருக்கிறது. அந்த இடத்தில் நிகழ்ச்சியுடன் சம்பந்தப்பட்ட திருக்குறள் போன்ற வாசகங்களையோ, அல்லது முக்கியமான திருமண மந்திரங்கள் ஒன்றிரண்டோ அச்சடிக்கலாம். சமீபத்தில் நடைபெற்ற எனது மாமனார் மாமியார் சதாபிஷேக அழைப்பிதழில் கீழ்க் குறிப்பிட்ட ஸ்லோகம், அதற்கான தமிழ் ஆங்கில மொழிபெயர்ப்பும் அச்சடித்திருந்தோம். இதை அனைவரும் மிகவும் பாராட்டினார்கள்.

"யாம் மாதா பிதரௌ க்லேசம் ஸஹேதே ஸம்பவேந்ருணாம்
நத ஸ்ய நிஷ்க்ருதி: சக்யா கர்த்தும் வர்ஷசதைரவி

—மனுஸம்ருதி 2:227

"ஏற்றமிகு தாய் தந்தை பெற்று வளர்த்தாளாக்க உற்ற இடர் அத்தனைக்கும் ஈடுசெய்ய எண்ணி- மக்கள் ஒரு நூறு ஆண்டுகளாய் பணிவிடைகள் பல செயினும் பெருமை மிகு பெற்றோர்க்கு பட்டகடன் தீராது.

— விஜயாசுப்ரமணியம்



"ஏண்டா நீ மட்டும் இப்படி இருக்கே?"

"எப்படி?"

"நீயும் காலாகாலத்துல ஒருத்தியக் கல்யாணம் செஞ்சிண்டு, ரெண்டு குழந்தைகளைப் பெத்துக்காம, 'அம்மா, அம்மா'ன்னு என் முந்தானையையே பிடிச்சிண்டு அலையறியே... எதிர் வீட்டு அப்பண்ணா சொல்றாப்பல நீ 'அம்மாப் பிள்ளை'யாவே ஆகி... பாரு, இன்னிக்கு ஜோசியர் சொல்றச்சேதான் எனக்கு ஆத்தாம வந்துடுத்து. என்னாலதானே உனக்கு இத்தனை சிரமம். பாழும் உசிர், போன வருஷம் புழக்கடையில சறுக்கி விழுந் தப்பவே போயிருக்கக் கூடாதோ... பாரு. என் னால ஒரு பிரயோஜனமும் இல்லே இப்ப..."

"நாலஞ்சு வருஷத்துக்கு முன்னாலே வரைக்கும் உப்போ, உரைப்போ ஏதோ உட் கார்ந்த எடத்துல இருந்தபடியே சமைச்சுப் போடுவேன். இப்ப அதுவுமில்லே. எனக்கும் சேர்த்து நீ சமைக்க வேண்டிய நிலைமை..."

"இன்னும் எத்தனை நாளைக்குடா இந்த நாய் பொழப்பு... பெருமாள் கண்ணைத் திறக்க மாட்டேங்கறாரே... ராமா... ராமன் வரல்லை யாடா... லெட்டர் எழுதினியா.. அவன் அஞ்சு வயசுக் குழந்தையா இருக்கறப்ப கக்குவான் வந்து... குழந்தையைத் தூக்கிண்டு கருருக்கு ஓடுவேன்டா... ராமசர்மான்னு வைத்தியர்.. 'பிள்ளைய மடி மேலேயே வச்சுக்கணுமா, சித்த இறக்கித்தான் விடேன்'னு எங்க அப்பா அதட்டுவார். கேட்க மாட்டேனே... ராமன் வரல்லையாடாப்பா..."

"அடேய்... நம்ம சுந்தா - கடுதாசியில என்ன எழுதியிருந்தான். அவன் பிள்ளைக்கு பூணூல் போட்டாச்சாமா... இல்லே, இனிமே தான் போடப் போறானா... சுந்தா, குழந்தை யில தங்க விக்கிரகம் மாதிரி இருப்பான். நாலு வயசு வரைக்கும் என்கிட்ட பால் குடிச்சான். அதான், அவனுக்கு என் மேல பாசம் கொஞ்சம்... அது கூட இல்லையின்னு ஆயிடுத்தேடா... நான் என்ன செஞ்சேன் அப்படி..."

"வாசல்லே யாருடா.. நிழல் தட்டறதே.. சின்னவனா... பெண்டாட்டிய அழைச்சிண்டு வந்திருக்கானா... நாச்சா, ரங்கன் பெண்டாட் டிய நீ பார்த்திருக்கியோ... அவளைப் பார்த்தா, என்னோட ரெட்டை வடச் சங்கிலியில ஒரு வடத்தைப் பிரிச்சு, நான் கொடுத்தேன்னு கொடுத்துடு. இன்னொரு வடத்தை என் காரியங்களுக்கு வச்சுக்கோ. உனக்குத்தான் நான் ஒண்ணும் வைக்காமப் போறேன்..."

ஒவ்வொரு முறையும் 'கூப்பிடு எமனை; நான் ரெடி' என்பது போல அவள் படுப்பதும், ஊரிலிருக்கும் பிள்ளைகள் தந்தி பார்த்து ஓடி வருவதும் - அடுத்த நாலே நாளில் அவள் 'ஜிங்'கென எழுந்து உட்கார்ந்து,

'உன் பொண்ணு பெரியவளான விஷயத்தை எனக்குத் தெரிவிச்சியா' - என்று எந்தப் பிள்ளையிடமாவது தகராறு செய்வ தும்...

ஏதோ வீடு நிர்துளிப்படுகிறதே என்று சமையலுக்கு ஆள் போட்டிருந்தால், அவளை வார்த்தைகளால் கொத்துவதும்...

"எரியற வீட்டுல உருவறது லாபம்னு பார்த்தியோடியம்மா. என் குழந்தைக்கு சமையக் கட்டுல எத்தனை பாத்திரம் பண்டம் புழங்கறதுன்னே தெரியாது. எனக்கு ஒரு உத்தரிணி குறைஞ்சாக் கூடத் தெரியும். கிழம்தான் சாகக் கிடக்கே. கிடைச்சதை அமுக்கலாம்னு மாத்திரம் நினைக்காதே. அடுத்த வேளை சோத்துக்கு இல்லாமப் பெருமாள் பண்ணிடுவார்.."

பிள்ளைகள் மட்டுமில்லை. யாருக்குமே தர்மாம்பாள் படுத்துப் படுத்து பிழைப்பதில் எரிச்சல் கலந்த கோபம்தான்.

'சனியன்... ஒவ்வொரு தடவை இது பிழைச்சா எழுந்து உட்கார்றப்ப எல்லாம் தெம்பும் திடமுமா இருக்கற ஒரு ஜீவன் போயிடறது...'

'வயசானதுகள் படுத்துப் படுத்து எழுந்திருக்கக் கூடாதுன்னு - இதுக்காகத்தான் சொல்லுவா...'

நாச்சா, சகலத்தையும் கேட்டபடி தாயின் அருகிலேயே உட்கார்ந்திருக்கிறான்.

போதும். அம்மா நிறைய பேரைச் சோதித்து

விட்டான். எந்தப் பிள்ளைக்குமே அவளது மரணத்தில் துக்கமில்லாமல் போய் விட்டது.

ஏன், மற்றவர்களைச் சொல்வானேன்... அவனுக்கே கல்லூரியில் நிறைய பேச்சுக்கிட மாகிவிட்டது... வயசானவளை தனியே விட்டு விட்டு, வேலைக்குப் போகவும் முடியவில்லை. அப்படியே போனாலும் அவன் வீடு திரும்பினால் அவன் வீடே குருக்ஷேத்திரமாகி விடுகிறது.

அம்மாவினால் எல்லாருக்கும் சிரமம்.

என்றோ அவன் தன் குழந்தைகளுக்கு அசிங்கம் பாராமல் ஈரத்துணியை மாற்றியிருக்கலாம்... அதை விடவும் - அதற்கு மேலும் அம்மாவுக்கு நாச்சா நிறைய செய்து விட்டான்.

இப்பொழுது நாச்சாவுக்கு வயது நாற்பத்தியாறு. அம்மா போய் விட்டால் அந்த வீட்டின் இருண்ட கூடத்தில் - ஜீரோ வாட் பல்பைப் போட்டுக் கொண்டு ஈசிசேரில் சாய்ந்து கிடப்பான். ஒருவேளைக்கு சமைத்து, இரண்டு வேளைக்கு மூடி வைத்து, எதற்காக மூடி 'வைக்க வேண்டும்... திருச்சியில் 'மாயவரம் லாட்ஜிலோ, பத்மா கபே'யிலோ முறுகலாக ரவா தோசை சாப்பிடக் கூடாதா... 'எங்கே போய், எந்த கருமாந்திரத்தை தின்னே' என்று திட்ட அம்மாவா இருக்கப் போகிறாள்... சதா சர்வ காலமும் 'பெரியவன்கிட்ட இருந்து லெட்டர் வந்ததா... சின்னவன் பெண்ணுக்கு காலேஜ்லே எடம் கிடைச்சதா' என்கிற பிடுங்கல் இல்லாமல்...




அவன் கம்பளித் துணிக்குள் - முசுக்கட்டான் பூச்சி மாதிரி சுருண்டு கிடக்கும் அம்மாவையே இமைக்காமல் பார்க்கிறான். அவளின் சிறிய தொண்டைக் குழி 'கர புர'வெனச் சத்தம் போட, பக்கத்திலிருந்தவர் நாச்சாவிடம் அவசர அவசரமாய் சொல்கிறார்.

"சார், தாயார் காதுல ராம மந்திரம் ஓதுங்கோ... சொல்லுங்கோ... ராம... ராம..."

நாச்சாவுக்கு கண்களை ஈரம் மறைக்கிறது.. குனிந்து தாயைப் பார்க்கும் போது, என்றோ ஆற்றில் குளித்து விட்டு, குடமும் கையுமாய் ஒரு அடைக்காகத் தேம்பி அழுத முகம்தான் கண்ணில் வந்து நின்றது.

"அம்மா... அம்மா... நீ போகாதே... எனக்கு நீ வேணும்... அம்மா... அம்மா..."

அவனது உதடுகளின் உச்சரிப்பு அந்தத் தாயின் காதில் விழுந்ததோ இல்லையோ... தெரியவில்லை.

அத்தனை வயசுக்கும் அவன் அழுவது மட்டும் சுற்றி நின்றவர்களுக்கு ஆச்சர்யமான விஷயமாய்....

# இரத்தத்தை சுத்தம் செய்யும் மூலிகைகள்

மனிதனின் ஆரோக்கியத்திற்கு உடலுக்குள் சுத்தமான நீர் (சளி), இரத்தம், பித்தம், கரும்பித்தம் (வாதம்) தேவையான அளவுக்கு இருக்க வேண்டும். இவைகளில் இரத்தம் மிக முக்கிய உடல் திரவமாகும். அசுத்தமான சளியால் அலர்ஜி, ஆஸ்துமா, இளைப்பு போன்ற நுரையீரல் நோய்கள் உண்டாகின்றன. பித்தம் அதிகமானால் வயிற்றுக்கோளாறுகள், பேதி, மஞ்சள்காமாலை, கல்லீரல், இரைப்பை, பெருங்குடல், சிறுங்குடல் நோய்கள் ஏற்படுகின்றன. கரும்பித்தம் (வாதம்) அதிகமானால் தோல் நோய்கள், மூட்டுவலிகள், கைகால் இயங்காமை, பிடிப்பு வலிகள், நாள்பட்ட புண்கள் உண்டாகும்.

இரத்தம் கெட்டுப் போனால் உயிரைக் குடிக்கும் பல நோய்கள் உண்டாகின்றன. ஆரோக்கியமான உடலுக்குச் சுத்தமான இரத்தம் வேண்டும். அசுத்தமான இரத்தம் பலவிதமான நோய்களை உண்டாக்கும். காசநோய், புற்றுநோய், வெட்டை நோய், நிமோனியா, சொறி, சிரங்கு, படை, எய்ட்ஸ் நோய்கள், அலர்ஜி, (ஒவ்வாமை) இன்ஃபெக்ஷன், இரணங்கள், கொப்பளங்கள், இவைகள் அனைத்தும் நச்சுக் கிருமிகளால் ஏற்படுகின்றன. இக் கிருமிகள் இரத்தத்தை அசுத்தமாக்கி உடல் உறுப்புகளுக்குச் சேதம் உண்டாக்குகின்றன. இதற்கு ஆண்டிபாக்டீரியல், ஆன்டி ஃபங்கஸ், ஆன்டி வைரஸ், ஆன்டி அலர்ஜி, ஆன்டி ஹிஸ்டமின், ஆன்டி கேன்சர் இப்படித் தனித்தனியாக ஒவ்வொரு நச்சுக் கிருமிக்கு ஒரு மருந்து என ஆங்கில மருத்துவத்தில் கொடுப்பார்கள். இம் மருந்துகள் கிருமிகளைச் [illegible] இரத்தத்தைச் சுத்தம் செய்கின்றன.

யுனானி மருத்துவத்தில் பல்லாயிரம் ஆண்டுகளாக இரத்தம் சுத்தி வழிமுறைகளை பயன்படுத்தி வருகின்றார்கள். குறிப்பிட்ட உணவுச் சாப்பிடும் பழக்கவழக்கங்களை மாற்றி அமைத்தல், உடலுக்கு ஒத்துக் கொள்ளாத உணவுப் பொருளுக்கு ஒதுக்கி விட்டுப் பத்தியம் கடைபிடித்தல், வயிற்றைச் சுத்தம் செய்ய பேதி மருந்துகளைச் சாப்பிடுதல், மலச்சிக்கல் உண்டாகாமல் தடுக்க கீரை வகைகள், பழங்கள் சாப்பிடுதல், கோடைக்காலத்தில் குளுமையான பானங்கள், காய்கறிகள், கனிகளும் மழைக்காலங்களில் உஷ்ணமான உணவுகளையும் கொடுத்து இரத்தத்தின் உஷ்ணநிலையை சரிசெய்வார்கள். உடலில் தேங்கும் அசுத்தமான திரவங்களை வாந்தி, பேதி, வியர்வையின் வழியாக வெளியேற்றுவார்கள்.

இயங்காத உறுப்புகளை இயங்கச் செய்யவும், அசுத்தமான கழிவுப் பொருட்களை உடலிலிருந்து வெளியேற்றவும்,



யுனானி மருத்துவத்தில் ஏராளமான மருந்துகளைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. அவைகளில் ஒன்று கவுஸரி – 500 என்னும் மூலிகை. யுனானி மருத்துவப் புத்தகங்களில் புற்றுநோய், எய்ட்ஸ், சிறுநீரக நோய்கள், சர்க்கரை நோய், உப்பு நோய், மூட்டுவலிகள், கர்ப்பப்பை புண் வீக்கம் ஆகியவை அறுவை சிகிச்சை இல்லாமல் குணமாக்கச் சிறந்த மருந்து என கூறப்பட்டிருக்கின்றது. குடிப்பழக்கம், போதைப் பழக்கம் நீங்கவும், இரத்தத்தைச் சுத்தம் செய்யவும் இது சிறந்த மருந்து என கூறப்பட்டிருக்

கின்றது.

**எய்ட்ஸ் நோய்க்கு மருந்தாகும் 'கவுஸரி-500'**

கவுஸரி – 500 உடலின் நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்கின்றது. எனவே எய்ட்ஸ் நோயாளிகளுக்கு இதைக் கொடுக்கலாம் என சென்னை பல்கலைக் கழகத்தின் ஆய்வு தெரிவிக்கின்றது. இதன் அடிப்படையில் திருச்சி மாவட்டம், ஜெயங்கொண்டான் ஊரைச் சேர்ந்த 25 வயதான வாலிபருக்கு எய்ட்ஸ் நோய் இருப்பதாக ஆங்கில மருத்துவர்கள் கண்டுபிடித்தார்கள். அவருக்குக் கவுஸரி - 500 மூலிகையை கொடுத்து மீண்டும் அதே ஆங்கில மருத்துவரிடம் அனுப்பி வைத்து மீண்டும் இரத்தப் பரிசோதனை செய்து பார்த்த போது ஹெச்.ஐ.வி. பாஸிடிவ் என இருந்தது. ஹெச்.ஐ.வி. நெகடிவ் வந்திருக்கின்றது என தெரிவித்தார்கள். ஒரே மாதத்தில் உடல் எடை கணிசமான அளவிற்குக் குறைந்திருந்தது. மூன்று மாதத்தில் உடல் எடை மீண்டும் கூடி விட்டது. அடிக்கடி வரும் காய்ச்சல், பேதி, தோல் நோய்கள், அனைத்தும் குணம்பெற்றன. இப்போது அவர் ஆரோக்கியமாக இருக்கின்றார்.

ஆரோக்கியமான உடலின் 10% எடை குறைந்து விடும். தொடர்ந்து ஒரு மாசம் வயிற்றுப்போக்கு அல்லது காய்ச்சல், அல்லது இருமல், தொடை அக்குளின் கழலைக் கட்டிகளின் வீக்கம், தோல் நோய்கள் உண்டாகும்.





• டாக்டர் அக்பர் கவுஸர்

ஊசி மருந்து கொடுத்தாலும் குணம்பெறாது. இந்நிலையில் இரத்தப் பரிசோதனை செய்து பார்த்தால் அவருக்கு ஹெச்.ஐ.வி. பாஸிடிவ் என வந்தால் அவருக்கு எய்ட்ஸ் நோயின் நுண் கிருமி தாக்கி இருக்கின்றது என அறிந்து கொள்ளலாம்.

உலகம் பிறந்தது முதல் விபச்சாரமும் இருக்கின்றது. ஒழுக்கம் கெட்டவர்களும் இருக்கின்றார்கள். வெட்டை, மேகநோய் இருந்து வருகின்றது. எய்ட்ஸ் நோய் புதிய நோயல்ல! யுனானி மருத்துவத்தில் 36 மூலிகைகள் எய்ட்ஸ் நோய்க்குப் பயனுள்ளதாக இருக்கிறது என ஒரு யுனானி ஆய்வு கூறுகின்றது. இதன் அடிப்படையில் வாணியம்பாடியில் உள்ள என் மருத்துவமனையில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. நல்ல முன்னேற்றம் காணப்பட்டு வருகின்றது.

சில மாதங்களுக்கு முன்பு உலகத்தில் முதல் முறையாக வாணியம்பாடியில் எய்ட்ஸ் நோயாளிகளின் மாநாடு ஒன்றை நடத்தினேன். அதில் கலந்து கொண்டு பேசிய அனைவரும் ஒழுக்கம் கெட்டவர்கள் அல்ல. பலர் டாக்டர்களின் அறியாமையால் அசுத்தமான ஊசிகள் குத்தியதால் எய்ட்ஸ் நோய் வந்தது என அவர்கள் கூறினார்கள். டயாலிஸிஸ் செய்து வந்த சிறுநீரக நோயாளி ஒருவருக்கு எய்ட்ஸ் நோய் டயாலிஸிஸ் செய்யப்பட்ட கருவியின் மூலம் தொற்றிக் கொண்டதாகக் கூறினார். ஓரினச் சேர்க்கை, தவறான உடலுறவால் ஒருசிலருக்கு எய்ட்ஸ் நோய் தாக்கியதாக அவர்கள் கூறினார்கள். இரத்தத்தைச் சுத்தம் செய்யவும், உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி அதிகரிக்கவும் கவுஸரி-500 மூலிகையைப் பயன்படுத்தலாம்.

புற்றுநோய், ஆறாத புண்கள், உடல் உறுப்பு

களின் இரணம், வீக்கம், மார்பகப் புற்று, கர்ப்பப்பை புண், கர்ப்பப்பை புற்று ஆகியவைகளுக்கு 'கவுஸரி - 500' மூலிகை மருந்தைப் பயன்படுத்தலாம் என விஞ்ஞானிகள் தெரிவித்துள்ளார்கள். புற்றுநோய்க்குச் சீத்தாபழம் சிறந்த மருந்து என சமீபத்தில் யுனானி விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். மத்தியப்பிரதேசம், மாநிலம் புர்கான்பூரில் அரசு யுனானி சிகிச்சைப் பிரிவில் சீத்தாப்பழத்தைக் கொண்டு புற்றுநோய் குணமாக்கும் ஆய்வு பல ஆண்டுகளாக நடந்து வருகின்றது. அங்கு நான் நேரில் சென்று பார்த்த போது மார்பக புற்றுநோய், கர்ப்பப்பை புற்றுநோய், தொண்டைப் புற்று நோய்க்கு அறுவை சிகிச்சை இல்லாமல் சீத்தாப்பழத்தைக் கொண்டு சிகிச்சை அளிக்கின்றார்கள். பலர் வியக்கத்தக்கும் அளவில் குணம் பெற்று வருகின்றார்கள். இவருடைய சீத்தாப்பழ ஆய்வை உலக சுகாதார ஸ்தாபனம் மற்றும் கேன்சர் இன்ஸ்டிடியூட் அதிகாரிகள் நேரில் வந்து பாராட்டிச் சென்றிருக்கின்றார்கள்.

ஏழைகளின் ஆப்பிள் என அழைக்கப்படும் சீத்தாப்பழத்தை சாப்பிட்டு வந்தால் புற்று நோயின் வேகம் குறையும். உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி அதிகரிக்கும். சீத்தாக்காயை சிறிது தண்ணீரில் அரைத்து மார்பகப் புற்று நோய், கழலைக் கட்டிகள், வலி மீது பூசலாம். சீத்தா இலைகளை ஒரு டம்ளர் தண்ணீரில் கொதிக்க வைத்து கண்டிய நீரை மார்பகங்களில் அல்லது புற்றுநோய் உள்ள பாகத்தை சுத்தப்படுத்த லோஷனாக பயன்படுத்தலாம். அரிப்பு, நமைச்சல், தொடை அக்கிள்களில் ஏற்படும் படைகள், வண்டுகடி ஆகியவை நீங்க சீத்தா இலைகளை மோரில் அரைத்துப் பூசலாம். உடலில் சில பாகங்களில் அழுகி அதில் புழுக்கள் உண்டாகி விடும். புழுக்கள் கயிறு போல் சுற்றிக் கொண்டிருக்கும். இதை குணமாக்க சீத்தா இலைகளை அரைத்துப் புண் மீது கட்டினால் புழுக்கள் செத்து வெளியேறி விடும்.

### போதைப் பழக்கம் :

போதை நீர் குடிப்பது பழக்கமல்ல! இது ஒரு வியாதியாகும். சாராயம், பீர், பிராந்தி, விஸ்கி, கஞ்சா, அபின், போதை ஊசி, தூக்க மாத்திரைகள், ப்ரவுன் ஷுகர், ஃபோர்ட்வின் ஊசி பயன்படுத்துவதால் போதை மருந்தின் நச்சுத்தன்மை இரத்தத்தை அசுத்தமாக்கி விடுகிறது. அசுத்தமான இரத்தம் செல்லுமிடமெல்லாம் இருக்கும் உடல் உறுப்புகளையும் தாக்கி நோய்களை உண்டாக்குகிறது. அதனால்தான் போதை அடிமைகள் தாங்கள் பயன்படுத்தும் போதை மருந்துக்குப் பல காரணங்களைக் கூறுவார்கள். அவர்கள் போதையை விட்டால் கை கால் நடுக்கம், தூக்கமில்லாமை, வயிற்றுவலி, வாந்தி, பேதி, குழப்பமான மனநிலை, சந்தேக குணம், ஆண்மை இழப்பு ஏற்படும். அதைக் கட்டுப்படுத்த மீண்டும் போதை மருந்தை பயன்படுத்துகின்றோம் என்று கூறுவார்கள். குறிப்பாக புரவுன்ஷுகர், ஃபோர்ட்வின் டி.டி.ஜிசிக் போதை ஊசி பயன்படுத்துபவர்கள் இதை நிறுத்தினால் கண்ணிலிருந்தும், மூக்கிலிருந்தும் நீர் கொட்டும். கொட்டாவிகளும் விக்கலும் மாறி மாறி வரும். வாந்தி, பேதி, பலமுறை ஆகும். தற்கொலை எண்ணமும் பயங்கர கனவுகள் கொண்ட தூக்கமும் வரும். இவைகளை குணமாக்கவும், போதை ஊசி பழக்கத்தை மறக்கடிக்கவும் கவுஸரி - 500 மூலிகை மருந்து பயன்படுத்தலாம்.

இரத்தத்தைச் சுத்தம் செய்யும் வீட்டு மருந் துகள்–

- 12 கிராம் சோம்பை 500 மில்லி தண்ணீரில் கொதிக்க வைத்து 125 மில்லி கிராம் அளவில் கண்டிய பிறகு வடிகட்டி கல்கண்டு கலந்து குடித்தால் மதுவின் மீது வெறுப்புண்டாகும். மது அடிமைகளுக்கு உண்டாகும் தலைவலி, தலைச்சுற்றல், தூக்கமின்மை, மூளைக் கோளாறு, சளி, தும்மல், ஜுரம் குணம்பெறும். இரத்தம் சுத்தமாகும்.
- ஆகாஷவல்லி இது வேரில்லாமல் மற்ற மரங்களின் மீது இயற்கையாகவே வளர்ந்து தனக்கு இரை தரும் மரத்தையே அழித்து விடும் மூலிகையாகும். இதற்கு ஆகாஷவல்லி, அஃப்திமூன் ஆங்கிலத்தில் கஸ்குட்டா ரெஃப்லியா என்றழைப்பார்கள். நாட்டு மருந்துக் கடைகளிலும் கேட்டால் கிடைக்கும். 6 கிராம் ஆகாஷவல்லி, உலர்ந்த திராட்சை 9



குலோப்ஜாமூன் மிக்ஸில் (பவுடரில்) ஜாம் செய்யும் பொழுது, அத்துடன் வீட்டிலிருக்கும் பிரட் துண்டுகளையும் (வெள்ளை பகுதியை மட்டும்) சேர்த்துப் பிசைந்து, உருட்டி பொரித்து, பாகில் போட்டு ஜாம் செய்து பாருங்கள். எண்ணிக்கையும் அதிகம் வரும். சாப்பிட்டாலும், இது எந்த கம்பெனி பவுடர் மிக்ஸ் என கேட்டு உங்கள் தோழிகள் உங்களை புகழ்வார்கள். (4 பிரட் துண்டுக்கு 4 ஸ்பூன் மிக்ஸ் பவுடர்). இந்த பிரட் கலந்த ஜாமூன் 2 நாட்கள் தான் கெடாமல் இருக்கும். ஃப்ரிஜில் வைத்தால் 4-5 நாட்கள் கெடாமல் இருக்கும்.

— ஆர். பாலா

பித்தளை பாத்திரங்கள் நன்கு மெருகுபெற ஒரு பாத்திரத்தில் பாத்திரங்கள் மூழ்குமளவுக்கு தண்ணீர் ஊற்றி அதில் கொஞ்சம் புளியைப் போட்டு கரைத்து அதில் சுமார் கால் மணி அல்லது அரைமணி நேரம் பித்தளைப் பாத்திரங்களை ஊற வைத்து பின்பு தேய்த்து அலம்பி எடுக்க பித்தளைப் பாத்திரங்கள் தங்கப் பாத்திரங்களென மின்னும். புளித்தண்ணீரில் பாத்திரங்களை ஊறவைக்கும் இம்முறையில் புளியும் மிகக் குறைவாக செலவாகும். புளியைச் சிக்கனமாக பயன்படுத்தலாம்.

— விஜயா சுப்பிரமணியம்



எண்ணிக்கை வேகவைத்து வடிகட்டி குடிப்பதால் குடிப்பழக்கமும், குடிப்பழக்கத்தால் உண்டாகும் நோய்களும் குணம்பெறும். மேலும் இரத்தமும் சுத்தமாகும்.

• சமையலில் பயன்படுத்தும் பெருங்காயத்தை 1/2 கிராம் அளவில் தினசரி மூன்று வேளை கேப்சூலில் அடைத்து தினசரி மூன்று வேளை சாப்பிட்டு வந்தால் அபின் போதைப் பழக்கம் நீங்கும். இரத்தத்தில் கலந்திருக்கும் அபின் விஷத்தன்மை நீங்கும். இரத்தம் சுத்தமாகும்.

• வேப்பிலை இரத்தத்தைச் சுத்தம் செய்யும் மருந்தாகும். 7 இலைகளுடன் மிளகு இரண்டையும் கலந்து அரைத்து வடிகட்டி குடித்தால் தோல் நோய்கள், படைகள், வெட்டைநோய், குஷ்டநோய், வெயிற்காலத்தில் உண்டாகும் வியர்க்குரு, கொப்பளங்கள், அழுகிய புண்கள் குணம்பெறும். அல்லது வேப்பமரப் பட்டை 25 கிராம் அளவில் ஒரு டம்ளர் தண்ணீரில் கொதிக்க வைத்து தினசரி ஒருவேளை குடித்தால் மேற்கண்ட நோய்கள் குணம்பெறும். வேப்பமரப் பழங்களை உலரவைத்துப் பவுடராக்கி 6 கிராம் அளவில் தினசரி ஒருவேளைச் சாப்பிட்டு வந்தால் மாதவிலக்கு வலி குணம் பெறும். விலக்கு தாராளமாக வெளியேறும்.

• கச்னால் மரப்பட்டை 10 கிராம் அளவில் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி தேன் கலந்து தினசரி ஒரு வேளை சாப்பிட்டால் இரத்தம் சுத்தமாகும். அனைத்துவிதமான தோல் நோய்கள், சொராய்சிஸ் குணம்பெறும்.

• நாட்டு மருந்துக் கடைகளில் கின்னிக் கட்டை என்ற பெயரில் ஒரு மரச் செடியின் வேர் விற்கப்படுகிறது. இதை வாயில் மென்று துப்பினால் மஞ்சள் நிற எச்சில் வரும். இதை 1½ கிராம் முதல் 2 கிராம் வரை சாப்பிட்டால் தடைப்பட்ட சிறுநீர், மாதவிலக்கு வெளியேறும். வயிறு சுத்தமாகும். வாய்வுத் தொல்லைகள் நீங்கும். அடிக்கடி வரும் ஜுரம் குணமாகும். கட்டிகள், கொப்பளங்கள் இருந்தால் இதைத் தொடர்ந்து சாப்பிட்டால் அசுத்தமான இரத்தம், சீழ் வெளியேறி புண்கள் விரைவில் குணம்பெறுகின்றன. அஸ்ஸாம் மாநில மக்கள் இதை உணவாகவும் பயன்படுத்துவார்கள்.

• 3 கிராம் முதல் 5 கிராம் வரை கடுக்காய் தோலை பவுடராக்கித் தேனில் கலந்து தினசரி ஒருவேளை தொடர்ந்து சில நாட்கள் சாப்பிட்டு வந்தால் மலச்சிக்கல் நீங்கும். சிறுநீர் தாராளமாக பிரியும். அதிகமான பித்தத்தை வெளியேற்றும். இரத்தத்தைச் சுத்தம் செய்யும். அடிக்கடி உண்டாகும் அலர்ஜி, தோல் நோயை குணமாக்கும்.

• 5 கிராம் நிலவேம்பை நாட்டு மருந்துக் கடைகளிலிருந்து வாங்கி கஷாயமாக்கித் தினசரி ஒருவேளை குடித்தால் முகத்தின் வங்கு, கொப்பளங்கள், தோல் நோய்கள், வெட்டைநோய், காசநோய் குணம்பெறும்.

• ரயில் பாதை ஓரங்களில் பரவலாக காணப்படும் ஹரன்குரி 7 இலைகளை அரைத்துத் தினசரி ஒருவேளை தொடர்ந்து இரண்டு வாரங்கள் குடித்தால் விபச்சார நோய், வெட்டைநோய் குணம்பெற்று விடும்.

• வைகை மரப்பட்டையை சிறிது தண்ணீரில் அரைத்து முகப்பருக்களின் மீது பூசினால் முகப்பருக்கள் நீங்கும். 6 கிராம் பட்டையை எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி குடித்தால் இரத்தம் சுத்தமாகும். தடைப்பட்ட சிறுநீர் வெளியேறும். உடல் வீக்கமும் குணம்பெறும்.

• சாலை ஓரங்களில் ஒரு மீட்டர் வரை உயரமாக வளரும் முள் செடிக்கு பிரம்மதண்டி என்றும், சத்தியாநாசி என்றும் அழைப்பார்கள். இதன் இலைகள், மற்றும் தண்டில் முள் இருக்கும். தண்டு மற்றும் கிளைகள் மஞ்சள், வெள்ளை நிறத்தில் இருக்கும். மஞ்சள் நிற பூக்கள் இருக்கும். அதற்குள் விதைகள் இருக்கும். இதை நாட்டு மருந்துக் கடைக்காரர்கள் சேகரித்து விற்பார்கள். 12 கிராம் விதைகளை தண்ணீரில் அரைத்து வடிகட்டி தினசரி ஒரு வேளை தொடர்ந்து சில நாட்கள் குடித்தால் தினசரி இலேசான பேதியாகும். இரத்தத்தில் கலந்திருக்கின்ற அசுத்தமான திரவங்கள் வெளியேறி விடும். பரம்பரை பரம்பரையாக வரும் மூட்டுவலிகள், தோல் நோய், சொராய்சிஸ், கரும்படைகள், செம்படைகள், குஷ்ட நோய் குணம்பெறும்.

**– டாக்டர் ஹகீம் எஸ். அக்பர் கவுஸர்**



GOLD COVERING WORKS
MADRAS
ஸ்ரீதேவி
கோல்டு கவரிங் ஓர்க்ஸ்
101 & 102, உஸ்மான் ரோடு,
தி.நகர், சென்னை – 600 017.
Tel : 4343620 & 4340841, Fax : 4347442
SRI DEVI GOLD COVERING WORKS
accepts
Fixed Deposit
24%
Interest Payable : Monthly
Minimum – One Year Rs. 5000/-
வியத்துக்கு
வியத்துக்கு – கம்பன்
விதைக்கு – பாரதி
மான கவரிங்'க்கு
ஸ்ரீ தேவி கவரிங்
ஒன்றே!
HAND MADE BANGLES
A B C D E
Months Guarantee Pair Rs. 100/-
MACHINE CUT BANGLES
F G H I J
One Year Guarantee Pair Rs. 250/-
KANGAN
Inter Changable
"Kangan" with
12 Colour
Fibre Bangles
Set Rs. 200/-
We
accept
V.P.P.
Orders




Add Sparkle to the festival season with Diamond, Pearl, Precious Stone and Light Weight Gold Jewellery.

## THE GOLD SCHEME

SCHEME OPEN FROM Ist OCT to 30th NOV '95 (TWO MONTHS)

| Group | Group Amount | Cash Incentive/ Jewellery given at time of joining | Value of Gold/Pearl Silver Jewellery | Total |
|---|---|---|---|---|
| A | Rs.1000/- per month for 15 months | Rs.800/- | Rs.16,200/- | Rs.17,000/- |
| B | Rs.500/- per month for 15 months | Rs.400/- | Rs.8,100/- | Rs.8,500/- |
| C | Rs.200/- per month for 15 months. | Rs.160/- | Rs.3,240/- | Rs.3,400/- |

## 10% Diwali Discount

**(10th OCT to 23rd OCT '95)**

**ON PEARL, AMERICAN DIAMOND, SEMI PRECIOUS STONE & SILVER JEWELLERY.**

**Visit:** Our only Showroom in Madras at

## AMBICA PEARLS

"ALSA MALL" SHOP 14, BASEMENT,
MONTIETH ROAD, EGMORE,
MADRAS - 600 008, PHONE: 8553642, 8554632

# மங்கையர் மலர்



தீபாவளிச் சிறப்பிதழ்

இணைப்பு

அம்மா பிள்ளை

அனுராதாரமணன்

குறுநாவல்

அக்டோபர் '95

SUPPLEMENT TO MANGAYAR MALAR OCTOBER '95
REGISTERED NO. TN MS(S) 231
Registered as Newspaper in Sri Lanka



# இதயம் நல்லெண்ணெய்

## நானும் ஒரு கில்லாடி தான் ...

என்ன சார்...

என்ன அப்படிப் பார்க்கறீங்க?

என்னடா வீட்டுக்காரியை

ஆபீசுக்கு அனுப்பிச்சிட்டு இவன்

சமையல் பண்ணிக்கிட்டு

இருக்கானேன்னா?



இன்னைக்கு வீட்ல விசேஷங்க.
எங்க கல்யாண நாள், அவளுக்கு லீவு
கிடைக்கலை. நான் ஆபீசுக்கு லீவு
போட்டுட்டு என் நளபாகத்தை
ஆரம்பிச்சிட்டேன். சமையலிலே
நானும் ஒரு கில்லாடி தான்.
இருக்கவே இருக்கு
இதயம் நல்லெண்ணெய்.
அதுல சமையல் செஞ்சா சுவையும்
மணமும் பிரமாதம்.

இதயத்திற்கு இதமானது **இதயம் நல்லெண்ணெய்**

இதயம் நல்லெண்ணெய் இரத்தத்தில்
கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கிறது.

DELHI DISTRIBUTOR
**M/S. PANDIAN STORES,** 137, Shasthri Market, Moti Bagh,
New Delhi - 110 021. Ph. : 6877557 & 6111079

HYDERABAD DISTRIBUTOR
**M/S. IDHAYAM SALES AGENCY,** 15-2-406, Siddiambar Bazaar, III Floor,
Land Mark Centre, Room No.5, Hyderabad - 500 012. Ph. : 510525



Silverspoon

